# பால்சிங்கு

அல்லது

# பராக்ரம வீரன்.

---

மதுரை போலீஸ் சப்இன்ஸ்பெக்டர்

**K.** சிந்துராயன் அவர்கள்

எழுதியது.





மதுரை

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்

வெளியிட்டது.

---

# பாலிசிங்கு

அல்லது

# பராக்ரம வீரன்.

---

மதுரை போலீஸ் சப்இன்ஸ்பெக்டர்

**K.** சிந்துராயன் அவர்கள்

எழுதியது.





மதுரை

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்

வெளியிட்டது.

---

 1930. [Price Rs 1-4-0.

# முகவுரை.

---

நாகரிகம் மிகுந்து வளர்கின்ற இக்காலத்தில் நாவல் தினுசுகளும் மிகுந்து வளர்கின்றன. அவை அனைத்தும் நமது தமிழ் நாட்டிற்கு அத்தியாவசியந்தான். ஒரு புத்தகம் ஓரிடத்தில் இருக்கக்கண்டால் அதனைத் தொட்டெடுப்பதும் ஒரு பிரட்டுப் பிரட்டிவிட்டுப் பின்னரதை அது இருந்த இடத்திலேயே வைத்துவிடுவதும் மனுஷ சுபாவம். அதில் இலாபம் ஒன்றுமில்லை என்பது அவர்களுக்குத் தெரிந்திருப்பினும் அங்ஙனம் செய்யாதிரார் என்பது நாம் அறிந்த விஷயமே. என்றாலும் இந்நூலை அங்ஙனம் கையில் தொட்டெடுத்து இரண்டு வரி வாசிக்கத் தொடங்கிவிட்டால் பின்னர் அவர்கள் அவர்களுக்கு எத்தகைய அவசர காரியம் நேர்ந்துவிடினும் இதனைப் படித்து முடிக்காமல் அக்காரியத்தை மேற்கொண்டு திரும்பமாட்டார்கள் என்பதுதான் இந்நூலை யாம் படித்து அனுபவித்து அறிந்த விஷயமும் இந்நூலுக்கமைந்த இம்முகவுரையின் திரண்ட பொருளுமாகும்.

பதினாயிரக்கணக்கான நாவல்களைப்படித்து "இனி நாவல் படிப்பதில் நமக்கு இன்பம் (Taste) இல்லை" என்று துணிந்தவராயிருப்பாராயினும் அவர்கள் மனத்தையும் இந்நூல் திருப்பவல்லதாதலின் இதனை எழுதிய நண்பர் மதுரை போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் மகா-ா-ா-ஸ்ரீ **K.** சிந்து ராயரவர்கள் இது போன்று இன்னும் பல நூல்களை எழுதி வெளியிடுவாரானால் அது நமது தமிழ் நாட்டிற்கே ஒரு பேருதவியாய்ப் பொதுவாக மக்கள் அறிவு வளர்ச்சி பெறுதற்கும், சிறப்பாக உயர்தர கலாசாலை மாணவர் தமிழ்ப் பாஷையில் கருத்தூன்றிக் கற்றுப் பெருத்த பேரறிவாளராதற்கும் பொன்றாத் துணையாக நின்று நிலவுமென்பது கூறாமலே அமையும்.

இங்ஙனம்,

நா. கிருஷ்ணசாமி நாயுடு,

தமிழ் வித்வான்,

மதுரை.

# நன்றியறிதல்.

---

நாவல்கள் மிகுதியும் வெளியுலாவும் இக்காலத்தில் இதுவே எனது முதல் நாவல் பற்றி எனது நண்பர்கள் இதனை இன்னும் சீர் படுத்தவேண்டிய முறைகளை எனக்கு எடுத்துக்கூறின் மிகவும் சந்தோஷ உள்ளத்தனுவேன்.

இந்நாவலைத் தீவிரமாக அச்சிடச்செய்த மதுரை, புத்தக வர்த்தகப் பிரமுகர் ஸ்ரீமான் இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனூர் அவர்களுக்கும், இந்நாவல் முற்றுப்பெறும் வண்ணம் எனக்கு ஊக்கத்தைத்தந்து வந்த தமிழ் வித்வ சிரோன்மணி ஸ்ரீமான் ராஜாராவ் அவர்களுக்கும், எனது உபாத்தியாயர் பிரம்மஸ்ரீ கோவிந்தசாமி ஐயரவர்களுக்கும், இதன் அத்தியாயங்கள் அழகுபெறப் பெயரமைத்தவரும், பிழையின்றித் திருத்தி உதவியவரும், மதுரை எக்ஸெல்சியர் அச்சியந்திர சாலை மானேசருமாகிய மதுரைத்தமிழ் வித்வான் ஸ்ரீ நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களுக்கும் என்றும் நான் நன்றி பாராட்டக் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

நூலாசிரியன்.

# பால்சிங்கு.

## 1-வது அத்தியாயம்.

## சேனைக்கர்த்தரின் தீர்ப்பு.



காலை சுமார் ஆறுமணியிருக்கும். கடலாற் சூழப்பட்டுள்ள இப்பூவுலகைத் தேசவிசாரணை புரியவருவான்போன்று கதிரவன் ரதாரூடனாய்க் கீழ்த்திசையில் தோன்றி நிற்க, அவனது செந்நிறக் கிரணங்கள் மலைகளைச் சூழ்ந்து நின்ற வெண் மேகங்களின் மேற்படக் காண்போர் கண்களுக்கு வெள்ளிமலையினின்றும் விழும் பசும்பொன் பிரவாகம்போன்ற தோற்றத்தை உண்டுபண்ணின. குன்றுகளின் அடிவாரமெங்கும் பச்சைக்கம்பளம் விரித்திருப்பதுபோல் புற்கள் அடர்ந்திருந்தன. தேவர்களும் வரையாது கொடுக்கும் தங்கள் கற்பகத்தருக்கள் தாமோவென்றையுறவண்ணம் அவ்வளவு உயரமாக விருட்ச ஜாதிகளடர்ந்து நிற்க, அவைகளினிடையில் மெல்லிய கொடிகள் தாயின் காலைத் தழுவிய குழவிகள்போல் எத்திக்கிலும் சூழ்ந்துகொண்டிருந்தன. நறுமணம் வீசும் மல்லிகைமுல்லை முதலிய புஷ்பச்செடிகள் தங்கள் திவ்யவாசனையால் ஆகாயத்தை நிரப்பின. பறவைகளனந்தம் மரக்கிளைகளின் மேல் நின்று தங்கள் தொனியை உயர்த்திச் சூரியனை வரவேற்பதுபோன்று இன்னிசைக் கீதங்கள் இசைத்தன. பூக்களிலுள்ள தேனை உண்ணவந்த வண்டினங்கள் மரங்களினுயர நின்றளிக்கும் ரீங்காரத்தொனியானது அரம்பையாதிய தேவமாதரின் சங்கீதகானந்தானிதோஎன்று எண்ணும்படி அவ்வளவு இனிமையாயிருந்தது.

மரங்களின் மத்தியில் அகன்றதோர் மைதானமொன்றிருந்தது. அவ்விடம் எண்ணிறந்த சிறு சிறு கூடாரங்களமைக்கப்பெற்றிருக்க, அச்சிறு கூடாரங்களுக்கு மத்தியில் விசித்திரமானதும் யாவற்றினும் சிறந்ததுமான வெண்பட்டுக் கூடாரமொன்றிருந்தது. அவ்வழகிய கூடாரத்தின் ஓர் பக்கத்தில் சித்திர வேலைப்பாடமைந்த பச்சை வஸ்திரத்தால் மூடப்பெற்ற ஓர் மேஜையும், அதனைச்சுற்றிய பல ஆசனங்களும் போடப்பட்டிருந்தன. கூடாரவாயிலில் இருபோர் வீரர்கள் உருவிய வாளுடன் காவலாகவும், வாட்களைத் தங்கள் தோட்களில் தாங்கியுள்ள மற்றிருவர் தத்தம் அடிகளை ஒரே மாதிரியாக வைத்து வைத்துக் கூடாரத்தைச் சுற்றிப் பாராவாரகவும் இருந்துவந்தனர்.

எக்காளத் தொனியொலித்தது. சற்றுத் தாழ்த்தலும் 'டப்டப்' பென்ற அரவம் சப்தித்தது. போர்வீரர்களனைவரும் தத்தம் கூடாரங்களிலிருந்து வெண்பட்டுக் கூடாரம் அமைக்கப்பட்டுள்ள அவ்விடத்திற்கு வந்து, தமக்கு எதிரிலிருந்த சோழநாட்டு துவஜத்திற்கு உரியமரியாதை செய்து, பின் ஆங்குள்ள ஆசனங்களிலமர்ந்தனர். ஐந்துநிமிஷங் கழியவும் சுமார் முப்பத்தைந்து வயதுள்ள ஓர் வீரன், ஏனைய போர்வீரர்கள் தரித்துள்ள போர்க் கவசங்களில் உயர்ந்ததான கவசமணிந்து. மார்பிலும், தோள்களிலும், கைகளிலும், அநேகவிதமான கௌரவ சின்னங்கள் தாங்கி, மற்றையோரைப்போலவே தானும் தன் இடையில் உடைவாளொன்றுங்கொண்டு தன் பக்கங்களில் எண்மர் உருவிய கத்தியுடன் நடந்துவர, மிகுந்த கெம்பீரமாகக் கூடாரவாயினுள் நுழைந்தான். நுழையவே, முன்போயமர்ந்த வீரர் பலரும் யாதொரு தாமதமின்றி எழுந்து, யாவரினும் மேம்பட்டு விளங்கிய அவ்வாணழகனுக்குரிய மரியாதையளித்து, அவன் தனது

ஆசனத்திலிருக்கவும், மற்றையோரும் தங்கள் தங்கள் இருக்கைகளில் முன்போல வீற்றிருந்தனர்.

பின்னுமோர் ஐந்து நிமிஷம் கழியக் கூடாரவாயிலண்டை ஓர் குரலோசை கேட்டது. சிறிது நேரத்திற்கெல்லாம் மிகவும் சாந்த குணமுடைய யௌவன புருஷனொருவனை மூன்று வீரர்கள் நடத்திக் கூடாரத்திற்குள் கொண்டுவந்து உல்லாசமாய் அமர்ந்திருந்த தளகர்த்தன் முன்னிலையில் நிறுத்தினர். ஐயோ! பரிதாபம்! அவ்விளஞ்சிங்கன் மாசுபடிந்த முகத்துடன் தரை நோக்கிய தன் தலையை நிமிர்த்தி ஏறிட்டுப் பார்க்கவே சக்தியற்றவனாய்க் காணப்பட்டான். அவனது போர்உடை கலைந்திருந்தது. வாழைக்குருத்துப்போன்ற அவனது சிகையோ அவிழ்ந்து அவனது முதுகின்பேரில் அலங்கோலமாய்க் கிடந்தது. அவனுடைய உருண்டு திரண்ட வலிய கைகளிரண்டுமோ பின்கட்டாய்க் கட்டப்பட்டிருந்தன.

இவ்வித நிலையிலிருக்கும் வாலிபனை நோக்கி அக்கிராசனம் வகித்திருக்கும் தளகர்த்தன் சொல்லுவான்; "ஏ! மோகனசிங்! பாண்டியன் சைனியத்திற்கும் நம் சோழநாட்டதிபனின் சைனியத்திற்கும் ஸ்ரீரங்கத்தில் நடந்த கடும் போரில், நீ பாண்டிய சேனைக்கு முன்னிற்க முடியாது முதுகுகாட்டி யோடினதாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறாயே; அது உண்மைதானா?"

"ஐயா! யான் ஒருநாளும் அவ்விதக் குற்றத்திற்கு ஆளானேனல்லேன். அது பொய்!"

"யான் ஒரு நாளும் அவ்விதக்குற்றத்திற்கு ஆளானேனல்லேன்' என்கின்றாயே!" இதை யார் நம்பக்கூடும்! உலகில் 'இல்லாது பிறக்காது, அள்ளாது குறையாது' என்ற

பழமொழியை நீ மட்டிலும் ஒருவேளை மறந்தாய்போலும். நீ ஏதாவது இக்குற்றத்தில் சம்பந்தப்படாதிருந்தால் உன் பெயர்வரக் காரணமென்ன? இருக்கட்டும் பார்ப்போம். நீ குற்றவாளியல்லவென்பதை நிரூபகப்படுத்தத்தக்க சாட்சிகளிருக்கின்றார்களா உனக்கு?

"யான் குற்றவாளியல்லவென்றும், என்பேரில் சாட்டப்பட்டிருக்கும் இக்குற்றம் சுத்த அபத்தமென்றும் நிரூபிப்பதற்கு ஏற்ற சாட்சிகள் மூன்றுபேர் இருக்கின்றார்கள்.

"அவர்கள் யாவர்?"

"ஒருவன் என் சகோதரனாகிய அமரசிங். மற்றவன் அவனது வேலையாளாகிய பாப்ஜான். இன்னுமொருவர் எனது ஆப்தமித்திரர் குலோத்துங்கர் ஆகிய இம்மூவர்தாம்!

இம்மூன்று சாட்சிகளின் பெயர்களைக்கேட்ட தளகர்த்தன் உடனே அவ்விடம்வந்து கூடியிருந்த போர்வீரர்களில் நால்வரையனுப்பி அம்மூவரையும் அழைத்துவரும்படி ஆக்ஞையிட்டு, மேஜைமேலிருந்த ஓர் பேனாவை எடுத்து அவன் கையிலிருந்த புஸ்தகத்தில் ஏதோ சில எழுதிக்கொண்டிருந்தான். அப்பொழுது நடுநிசியில் உலகம் எவ்வித அமைதியிலிருக்குமோ அதுபோலக் கூடாரமெங்கும் நிசப்தமே பரவியிருந்தது. அங்குள்ளவர்கள் அனைவரும் மூச்சுப் பேச்சின்றிக் கற்சிலைகள்போல மோகனசிங்கின் விசாரணையைக் கண்டு மயங்கி ஸ்தம்பித்திருந்தனர்.

கொஞ்சநேரத்திற்குள் தடித்த உருவும், குள்ள வடிவும், கருநிறமும், கடாக்கொம்புபோன்று திருக்கப்பட்டுள்ள மீசையுங் கொண்டுள்ள ஒருவனை இரு போர்வீரர்கள் தண்டக்

தலைவன் முன் கொணர்ந்து நிறுத்தினர். தளகர்த்தன் அப்பொழுது அவ்விளைஞனைப் பார்த்துப் பகர்வானாயினான்.

"உம் பெயர் என்ன?"

"என் பெயர் அமரசிங்."

"இதோ நிற்பவரை அறிவீரா?"

"ஆம். நன்றாயறிவேன்."

"சென்ற யுத்தத்தில் இவர் செய்த கார்யமென்ன? உமக்கு ஏதோ அதனைப்பற்றித் தெரியுமென்கின்றீரே? உண்மையில் உமக்குத் தெரியுமா?"!

"ஆம்! தெரியும்."

"என்ன செய்தார்?"

"இருசேனையும் கைகலந்து ஸ்ரீரங்கத்தில் போர்செய்ய நேர்ந்த காலையில் சமரினின்றும் முதுகுகாட்டி யோடிய வீரர்களுள் முதன் முதலாய் ஓட இவர்தான் ஆரம்பித்தார்."

"ஒரு நாளுமில்லை. பொய்! பொய்!!" என்று மோகன சிங்குஉரைத்ததுமன்றி, அச்சமயந்தான், இதுவரைகீழ்நோக்கியிருந்த தன் தலையை நிமிர்த்துக் கோபக்குறியுடன் அவ்விதம் சாட்சி சொன்ன அமரசிங்கை ஓர் பார்வை பார்த்தான். அமரசிங்கோ தன் தமையனின் எதிர் நிற்க முடியாதவனாகித் தலைகுனிந்தவண்ணம் தன்னிருப்பிடமேகினன்.

அமரசிங்கின் விசாரணை முற்றுப்பெறவே, மற்றிருவர் இன்னொருவனைக் கூட்டிவந்து நிறுத்தினர். அவன் மிகக் குள்ளமானவனும் தடித்த உதடுகள் படைத்தவனுமாவன். எதிர்ப்பட்டவர்களைக் குத்துந் தோற்றத்தைக்கொண்ட இருபற்கள் அவ்வழகிய உதடுகளுக்கிடையே ஜொலித்தன. அவனைப் பார்த்துத் தளகர்த்தன் கேட்பானாயினான்.

"உன் பெயரென்ன?"

"பாப்ஜான்."

"இவரை நன் குணர்வாயா?"

"ஆம்."

"இவர் யார்?"

"கடந்த பெரும்போரில் சேனாபத்யம் வகித்திருந்தவர்"

"அக்கொடும் போரில் இவர் செய்ததென்ன? உனக்குத் தெரியுமென்று கூறுகின்றாரே."

"ஆம் எனக்குத் தெரியும். பாண்டியர் படைக்கும் நம் படைக்கும் இரு தினங்களுக்கு முன் ஸ்ரீரங்கத்தில் நடந்த கொடிய யுத்தத்தில், இரு சேனையும் நெருங்கிப் போர்செய்யுங்கால் மிகவும் பயந்து அமர்க்களத்தினின்றும் முதுகு காட்டி யோடிய சோணாட்டு வீரர்களில் முதன் முதலாய் அடி யெடுத்து ஓடத்தொடங்கினவர் இவர்தான்."

"சுத்தப்பொய்! சுத்தப்பொய்!!" என்றான் மோகனசிங்.

இவ்விரு சாட்சிகளின் வாக்குமூலங்கள் முடிந்தவுடன் "மூன்றாவது சாட்சியும், மோகனசிங்கின் ஆப்த நண்பருமான குலோத்துங்கரெங்கே?" என்று தளகர்த்தன் அவ்விடமிருந்த சிலரை வினவினான், குலோத்துங்கனைக் காணோம். சகலரும் தேட ஆரம்பித்தார்கள். ஓரிடத்திலும் காணக்கூடவில்லை. ஒருவேளை சண்டையிலொழிந்த வீரர்களில் அவர் ஒருவரோவென்றெண்ணிச் சமரில் உயிர்துறந்தோர் பெயர்களடங்கியுள்ள ஜாப்தாவை எடுத்து நோக்கினர். குலோத்துங்கரென்ற பெயரையே கண்டிலர். காணாமற் போனவர்களில் அவர் ஒருவராயிருப்பரோ என்றையுற்று அப் பெயர்கள் கொண்ட ஒரு புஸ்தகத்தைத் திறந்து பார்த்தனர். அதிலும் அவருடைய பெயர் அகப்பட்ட பாடில்லை. பின்

னர் போரில் காயப்பட்ட வீரர்களில் அவர் ஒருவரோ வென்றெண்ணிக் காயப்பட்ட வீரர்கள் வசித்துவந்த அறைக்குட் சென்று தேடினர். அங்கும் கண்டிலர். அதன் பின் முந்தின நாள் யுத்தஞ்செய்த களையால் ஒரு வேளை தன் கூடாரத்தில் இன்னும் துயிலலாமென்று தேறி, ஒவ்வொரு கூடாரத்தையும் போய்ப்பார்த்தனர். அங்குமில்லை. பின்னர் எங்கிருந்தார்? அவர் எங்குமில்லை.

இதனை வீரர்கள் பலரால் அறிந்த சேனைக்கதிபன் சற்று நேரம் தன் கையிலிருந்த பேனாவைத் தனது மூக்கின்மீது வைத்துக்கொண்டு ஏதோ ஆலோசித்தபின் நீதிஸ்தலத்தில் நிறுத்தப்பட்டிருக்கும் மோகனசிங்கை நோக்கி,

"மோகனசிங்! இவ்விதக் கோழை மனதுள்ளவனாகிய உன்னையான் பெரிய வீரனென்றெண்ணியல்லோ அக்கொடிய யுத்தத்திற்கும் முன்போலவே சேனாதிபதியாக அனுப்பினேன். நீ செய்துள்ள காரியம் மிகவும் மெச்சத்தக்கதே?"

"நீ கொண்டுவரும்படி சொன்ன சாட்சிகள் மூன்றினுள், ஒருவன் உன் சகோதரன், மற்றொருவன் உன் சகோதரனின் வேலையாள்; இன்னொருவரோ உனது ஆப்தமித்திரர் என்று நீயே சொல்லினை. நல்லது; அவர்களில் ஒருவரைத் தற்சமயம் காணக்கூடவில்லை; இருக்கட்டும். இப்பொழுது மீந்திருக்கும் இருசாட்சிகளையே வைத்து முடிவு சொல்வோம். இவ்விரு சாட்சிகளும் உன் பக்கமே அனுசரணையாய் நீ குற்றவாளியல்ல வென்றுரைப்பதாகவும் வைத்துக்கொள்வோம். ஒருவன் உனது தம்பியாகவும், மற்றவன் அவனதுஊழியனாகவுமிருப்பதால் அன்னவர்கள் உன் பொருட்டுரைக்கும் அனுகூலமான வார்த்தைகளை உலகம் எங்ஙனம் அங்கீகரிக்கும்? அங்ஙனமிருக்கத் தற்சமயம் நீ கொண்டுவந்த சாட்சிகளை

உனக்கு விரோதமாய்ச் சொல்வதால், சகலருக்கும் நீ செய்துள்ள குற்றம் "வெள்ளிடைமலைபோல் தெள்ளிதில் புலப்படுகின்றது. இதில் யாதொரு சந்தேகமுமில்லை."

"ஆதலால், மோகனு! கீர்த்திவாய்ந்திலங்கும் சோழநாட்டிற்கே குல அபகீர்த்தி ஈட்டிவைத்த பாதகா! தேசச் சட்டப் பிரகாரம் நடுப்பகலில் எண்பதுகெஜ தூரத்திற்குள்ளாக உன்னை ஓர் சாதாரண மனுஷனைப்போல் நிறுத்திச் சுட்டுக்கொல்ல வேண்டியதுமன்றி, உன் பிரேதம் நன்ருய்ப் புழுத்து நாறியபின்தான் எடுத்தடக்கப்பட வேண்டும். என்கினும் இந்த தர்ம சங்கடத்திற்கு நான் என்னசெய்வேன். என்ஞல் அவ்விதம் செய்யக்கூடவில்லையே."

"நீயோ அரசரின் சிரேஷ்ட புதல்வன். அரசர் எனக்கு இதுவரை காட்டியுள்ள நன்மைகள் யாவையும் நான் எங்ஙனம் மறப்பேன்? அப்பேருதவிகளை யான் மறப்பேனுகில் எனக்கு என்றென்றும் நரகந்தானென்பதிற் றடையில்லை. சமரில் முதுகுகாட்டி யோடிய உன்னைக் கொன்று ஏனைய வீரர்களுக்கு ஓர் படிப்பினைப்புகட்டுவது நலமாயிருக்குமென்றெண்ணியபோதிலும், உன்னைக்கொல்ல என் மனம் எப்படித் துணியும்? பார்த்திபர் எனக்குச் செய்துள்ள கருணைகள் யாவற்றையும் கருதாது, அவர் அருமை மைந்தனுகிய உனக்கு யான் மரண தண்டனை விதிப்பேனுயின் என்னினுங் கொடியோன் இந்நிலவுலகிலிரான். யானே நாயினுங் கேடுகெட்டவனுவேன். 'என்ன செய்வது, விதிவலிது, விதியை வெல்வதெங்ஙனம், வருவது வந்தே தீரும்' என்றெண்ணி உனக்கு மரண தண்டனை விதிக்கலாமென்று என் மனம் நாடினும், எவ்விதம் உனதருமைத் தந்தைக்கு யான் துரோகம் பண்ணுவது? என் செய்வேன்! தேசசட்டத்தையும் மீறுவது கூடாத

காரியம். அதனை மீறினால் எனதுயிர்க்கே ஒரு சமயம் ஹானி நேரினும் நேரும். ஆஹா! இங்ஙனம் ஆலோசிக்கும்போது யான் 'இருதலைக்கொள்ளி எறும்பு போல்' வாடுகின்றேன்" என்றிவ்வாறு சொல்லிமுடித்துச் சிறிது நேரம் ஆழ்ந்த யோசனையிலிருந்த பின் மறுபடியும் அவனை நோக்கி,

"மோகனா! யான் தேசச்சட்டத்தை மீறுவதனால் எனக்கு எவ்வித ஆபத்துநேரினும் சரி, அதற்கு யான் கிஞ்சித்தும் அஞ்சேன். முடிவாக உன் பிதாவிற்குத் துரோகம் பண்ணுதிருத்தலே நலமென்று தேறினேனாதலால், அவர் பொருட்டு உனக்கு யான் விதிக்கும் தண்டனை இதுவே. மறுவார்த்தை உரையாது உன் போர்க்கவசங்களை இவ்விடத்திலே இந்தச்சணமே கழற்றி வைத்துவிட்டு வெளிச்செல்வாய். சேனையினின்றும் விலக்கப்பட்டவனாயினை." என்று கூறிச் சேனைக்கர்த்தா இவ்வாறு தீர்ப்பிட்டான்.

தன் விசாரணையின் முடிவைச் செவியிலேற்ற மோகனசிங் புத்தி தடுமாறி, "ஐயோ! ஜெகதீசா! என்னுயிர் போயினும் பெரிதல்லவே. இப்பொழுது யான் உயிருடனிருந்தும் உயிரற்றவனாக ஆக்கிவிட்டனரே. என்னைக் காண்போர் யாவரும் 'சண்டையில் முதுகுகாட்டி யோடியதனால் ராணுவத்தினின்றும் விலக்குண்டவன்' என்னும்போது என்னுயிர் எனதுடலில் தரிக்குமா? 'வெந்த புண்ணில் வேல் பாய்ந்தது' போன்றல்லவா இருக்கும். இப்பொழுது யானே எனதுயிரைப் போக்கிக்கொள்ளலாமென்றால் ஒரு பழிக்கு ஆளாக வேண்டி வருமே. யானிறந்ததைக் கேள்வியுற்று பத்மா எங்ஙனம் உயிருடனிருக்கப் போகின்றாள்?" என்று இவ்விதம் நினைந்துகொண்டு சிறிதுநேரம் அசைவற்றுநின்ற மோகனசிங் திடீரென அடியற்ற மரம் போல் தரையினில் மூர்ச்சித்து வீழ்ந்தான். சூழ்ந்துநின்றவர் அவன் மூர்ச்சை தீர்த்தனர்.

சிறிதுநேரத்தில் மூர்ச்சை தெளிந்தெழுந்த மோகனசிங் வெட்கமேலிட்டவனாய்க் கூடாரத்திலிருந்த ஒருவரையும் ஏறிட்டுப் பார்க்காமல் தன் போர்க்கவசங்களை மரியாதையுடனே கழற்றிக் கீழே வைத்துவிட்டுச் சாதாரண உடை தரித்துத் தளகர்த்தன் சொல்லுக்கிணங்கக் கூடாரத்தினின்றும் வெய்யோனுடைய உக்கிர கிரணங்கள் தன் சென்னியில் தாக்க அருள் மழுங்கின முகத்துடன் வெளிக்கிளம்பலானான்.

கடும் வெயிலில் நடந்துவரும் மோகனசிங் "ஐயோ! பாவி அமரசிங்கின் பொய்ச் சாட்சியத்தாலல்லவா இவ்வித நிலைமைக்காளாயினேன். அவன் ஏன் என் எண்ணத்திற்கு முற்றிலும் விரோதமாகச் சாட்சி சொன்னான்? எவ்வெண்ணத்திற்கென் பேரில் இவ்விதம் புகன்றான்? நிற்க, அவனது வேலையாளாகிய பாப்ஜானும் அவ்விதமே சொன்னானே! அவன் அமரசிங்கின் துர்ப்போதனையால் தான் இவ்விதம் சொல்லத் துணிந்திருப்பானல்லாது அவன் மனமொப்பிச் சொன்ன சாட்சியுமல்ல. இதற்காக யாரை நோவதிலும் பயன் யாது? எல்லாம் எனையாளும் ஈசன் செயலன்றி வேறில்லை. விதி இவ்விதமிருக்க அதனை யாரால் மாற்ற இயலும்! அச்சர்வஞ்ஞர் என்னை எவ்விதம் வைப்பினும் வைக்க. ஆனால் யான் இப்பொழுதெங்கு செல்வது! மேல்திசை நோக்கிச் செல்வோமா? அல்லது கீழ்த்திசை நோக்கிச் செல்வோமா? எது உசிதம்?" என்று இவ்வாறு நினைத்துக்கொண்டே கீழ்த்திசை செல்லும் வழியையே நாடி வேகமாகச் சென்றான்.

அவன் போகும் இருபுறங்களிலும் மரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்ததால் கதிரவனுடைய காந்தி அவைகளை ஊடுருவிச்செல்ல முடியாது தயங்கியது. மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் எங்கும் விளங்கின. சுமார் இரண்டு மைல்

தூரம் நடந்தபின் ஆங்கு அழகும் பொலிவும் மிகுந்த எழடுக்கு மாளிகையொன்றைக் கிட்டினன் மோகனசிங்.

அரண்மனை போன்று விளங்கிய அம்மாளிகை வாயிலில் நின்று "இவ்வரண்மனையினுள் நுழையலாமா? நுழையாது இம்மார்க்கமாகவே நடக்கலாமா? எது நன்று? போனுலென்ன? என்ன நேரும்? நேரிடுவதுதான் யாதென்று அறிவோமே" என்று இவ்வாறு யோசித்துக்கொண்டே பசிக்களையால் வாட்டமுற்றிருந்தவன் மனத்திடங்கொண்டு மாளிகையினுள் நுழைந்தான். நுழையவே அவ்விடம் காவலாக நின்ற வீரர்களனைவரும் மோகனசிங்கைக்கண்டவுடன் மனமருண்டு யாதுசெய்வதெனத்தோன்ருதுமதியிழந்து மோகனசிங்கிற்கு வழிவிட்டு அஞ்சியொடுங்கி "இவருக்கு நேரிட்டது யாதோ?" என ஆழ்ந்த யோசனைக்குள்ளாகி நின்றனர். உள் நுழைந்த மோகனசிங் அங்குமிங்கும் பார்த்தான். யாதோர் அரவமுமில்லாதிருந்தது. பின் ஆங்குள்ள ஓர் மெத்தைப்படியின் வழியாய் மூன்ருவது மாடிக்குச்சென்ருன். அவ்விடத்தில், "என்ன! இன்னும் ஒரு தூதுவனும் வந்தானில்லை? சண்டை நடந்த சமாச்சாரமும் நமக்கெட்டினபாடில்லை. தளகர்த்தன் என்ன செய்கின்ருன். ஏன் இன்னும் நம்மிடம் ஓராளையாவது சங்கதி தெரிவித்தற் பொருட்டு அனுப்பி வைக்கவில்லை?" என்று இவ்விதம் எண்ணிக்கொண்டிருந்த ஒருவர், "மெத்தைப்படிகளில் கேட்கும் காலடியரவம் யாருடையதாயிருக்கலாம்?" என நினைத்து அம்மனிதனின் வருகையையே எதிர்நோக்கி ஆவலுடன் காத்துக்கொண்டிருந்தார்.

அத்தருணம் மோகனசிங் அவரை அடையவே, "மோகனு வந்தாயா? ஜெயம் யார் பக்கம்? பாண்டியர்க்கா, நமக்கா?" என்று மிக்க ஆவலோடு அவர் வினவினர்.

"சண்டை சமாதானமாக முடிவடைந்தது."

"பரவாயில்லை. உனக்கு நேர்ந்ததென்னப்பா? ஏனிவ்விதக் கோலத்துடனிருக்கின்றாய்? என்ன காரியம் நடந்தது? சகல வைபவமும் பொருந்திய நீ அருளற்ற முகத்துடன், ஏதோ வியாகுலத்தால் பீடிக்கப்பட்டவன் போலக் காணப்படுவதேன்? என்று மிகுந்த பரபரப்புடன் வினவினார்.

அதற்கு மோகனசிங்கோ பேசமுயன்றும் யாதும்பதிலுரைக்கமுடியாது நின்றான்.

"மோகனா! நீயேன் மௌனஞ் சாதிக்கின்றாய்? நடந்ததை உரை. உன்னை இக்கோலங் கண்டவர்கட்குத் தகுந்த தண்டனை விதிக்கின்றேன். என்னப்பா நடந்தது?"

"என்னருமைத்தந்தாய்! யான் ஒரு பாவமு மறியாதவன். யான் சமரில் புறங்காட்டி, யோடினதாகக் குற்றஞ் சாட்டப்பட்டேன். தளகர்த்தர் என்னைச் சேனாபத்யத்தினின்றும் விலக்கினது மன்றி எனது போர்க்கவசங்களையும் வாங்கி வைத்துக்கொண்டு யான் இனி ராணுவ அலுவலுக்கு வரவேண்டியதில்லையென்று முரைத்து, என்னை ராணுவத்தினின்றும் நீக்கிவிட்டார். தந்தையே யான்........."

என்ற இவ்வசனங்களைச் செவியேற்ற வில்லியசிங் இடியோசை கேட்ட நாகம்போலாகித் தன் மைந்தனை நோக்கி, "ஏ! பாதகா! நம் குடும்பத்திளவரசர்கள் எத்தனையோ தலைமுறைகளாகச் சேனாபத்யமும் தளகர்த்தப்பட்டமும் வகித்து நற்கீர்த்தியடைந்து விளங்கியிருக்கின்றனர். அவர்களுடைய பெயர்களும் இற்றைவரை நன்குமதிக்கப்பட்டு வருகின்றன. அவ்வீரர்களில் ஒருவராவது ராணுவத்தினின்றும் நீக்கப்பட்டதாக இதுகாலபரியந்தும் நான் கேள்விப்பட்டதில்லையே! அதற்கு முற்றிலும் மாறாகத் தற்சமயம் நீயோ தூர்த்தன்

டாய். தூரத்தப்படினும் பாதகமல்லவே. ஆனால், போர்க் கவசங்களைப் பறிகொடுத்து வருவது சகலத்திலும் கேவல மானதோர் காரியமல்லவா! சிங்கமெனப் பெயர்கொண்டுள்ள எனக்கா நீ பிறக்கவேண்டும்? அடே சண்டாளா! துஷ்டா! நீ அந்தக்ஷணமே உனதுயிரை மாய்த்துக்கொள்ளாது, வெட் கமே இன்னதென்று அறியாதான்போல் என் முன் தோன்றி இதனையுரைக்கவும் தைரியங் கொண்டனையே! குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக்காம்பே! எவ்விதம் இப்பூலோகமெங் கும் பிரகாசத்தை யளிக்கும் சந்திரனிடத்திலோர் களங்க மேற்பட்டிருக்கின்றதோ, அவ்விதமே நீ செய்துள்ள இக் காரியத்தால் இதுகாறும் மேன்மையுடன் விளங்கிய நமது குடும்பத்திற்கோர் பங்கம் ஏற்பட்டுவிட்டது. இத்தகைய அவமானத்தை வருவித்த மைந்தனைக் கொண்டுள்ள எனக்கு அடவியே மேலானதாகும். நீ இனி என்முகத்தில் விழி யாதே. நீ எனக்குப் புத்திரனுமல்ல, நானுனக்குத் தந்தையு மல்ல. வந்தவழிபார்த்துச் செல்" என்று தன் கண்களில் நெருப்புப்பொறி பறக்க அவ்வளவு கோபாவேசத்துடன் புகன்று சரேலென்று அப்புறம் போயினர்.

"தந்தையே அவ்விதக் குற்றத்திற்கு யான் ஆளானே னில்லையே" என்ற இச்சொற்கள் மோகனசிங்கின் வாயினின் றும் வெளிவந்தனவோ அல்லவோ, உடனே வில்லியசிங் அவன் பக்கம் திரும்பிநின்று மறுபடியும் "அடே! இன்னும் நீ அதிகம் பேசத்தேவையல்ல. நீ தரும் போலிச்சமாதானங் களை யானறிவேன். உடனே என் கண்காணு இடத்தை நாடிச்செல்வாய். இன்னும் ஒரு வார்த்தை அதிகம் பேச முயல்வையாகில் இதோ என் கையிலிருக்கும் கட்கத்திற்கு உனது சிரத்தை இரையாக்குவேன். இது சத்தியம். உடனே செல்கின்றனையா, என்ன?" என்று இடிமுழங்குவதுபோ

லும், மதயானை கர்ஜிப்பதுபோலும் தன் தொனியை உயர்த்தி உரத்த குரலுடன் கோபித்தார்.

இக்கர்ணகடூர மொழிகளைச் செவிமடுத்த மோகன சிங் யாதொரு பதிலுமுரையாது தான் குற்றஞ் சாட்டப்பட்டதால் அடைந்த நிலைமையையும், தன்னால் தன் தந்தைக்கு ஏற்பட்டுள்ள கோபத்தையும், அக்கோபத்தால் தன்னையவர் ஏற்றுக்கொள்ளாததையும் நினைத்து முன்னிலும் பன்மடங்கு வருத்தமுடையவனாய்த் தன்னருமை மாளிகையினின்றும் வெளிக்கிளம்பி வீதியை அடைந்தான்.

அடைந்து தனக்குள்ள சம்பவங்களிரண்டையும் நினைப்பான், துக்கிப்பான், கண்ணீர் விடுவான், தன் பிதாவும் தன்னை ஏற்றுக்கொள்ளாததை நினைத்து வெய்துயிர்ப்பான். 'எல்லாம் வினையின் பயன்' எனத் தேறுவான். மீண்டும் கவலைக்குள்ளாவான். பின்னர் வருந்துவதில் யாதும் பயனில்லையென்றெண்ணி மீண்டும் கீழ்த்திசை நோக்கியே 'அவளாவது நம்மை ஏற்றுக்கொள்வாளா? என்று சொல்லிக்கொண்டே நடக்கலுற்றான்.

“நாளை வருகின்றேனென்று போன என்னாருயிர்க் காதலர் ஒருவாரமாகியும் இன்னும் இங்குவரக் காண்கிலனே! இரவெல்லாம் பல பல சொற்பனங்கள் தென்பட்டனவே. அவருக்கு என்ன நேர்ந்ததோ? ஏ! ஜெகதீசா! என் செய்வேன்! அவரைக்காணாது என் மனம் பதறுகின்றதே. உடலும் வாடுகின்றது. எதோ ஒரு பொருளைப் பறிகொடுத்தவள் போலிருக்கின்றேனே! உண்ணும் ஆகாரமும் உடலிற் சார்கின்றதில்லை. ஐயோ! ஒருவேளை என்னை மறந்தனரோ? வீணான சந்தேகங் கொள்கின்றேன். ஒருநாளும் மறக்க மாட்டார்” என்று இவ்விதம் ஓர் அழகிய கட்டடத்தின்

வாயிலில் நின்று நினைந்து வருந்திக்கொண்டிருந்த ஓர் இளம் பெண் "தூரத்தே வருகின்றவர் யாராயிருக்கலாம்? அவருடைய சாயல் மாதிரிதானிருக்கின்றது. ஆனால் அவர் இவ்விதக் கோலத்துடனா இங்கு வருவர்? ஒருநாளுமில்லை" என்று நினைத்துத் திடீரென வீட்டினுட்சென்றாள்.

உள்ளே சென்றவள் மீண்டும் "ஒருவேளை அவராயிருந்தால் யானிவ்விடத்து இல்லையென்று நினைத்து வீட்டிற்குத் திரும்பிவிடுவாரோ. பின் என் செய்வது? ஆதலால் அவர் யாரென்று நன்றாகத் தெரியும்வரை அவர் கண்களினின்றும் மறைந்திருப்பது நன்றன்று." என்றெண்ணி மறுபடியும் முன்னின்ற இடத்தை யடைந்து அவ்வாடவன் வருகையையே எதிர்நோக்கிய வண்ணமாயிருந்தாள். சிறிது நேரத்திற்குள் "அடையாளம் தெரிந்துவிட்டது. அவர் தான், அவர் தான்; அவர் தாமென்பதில் சந்தேகமே இல்லை. அவர் ஏன் இவ்விதத் திருக்கூத்தில் வரவேண்டும்? ஏதோ ஓர் சம்பவம் அவர்பால் நேர்ந்திருக்கவேண்டும். ஆதலால் தான் இவ்வித ஸ்திதியில் தோற்றப்படுகின்றார். வரட்டும் யாதென விசாரிப்போம்" என்று ஆவலுடன் நிலைப்படியிலேயே நிற்க, ஓரிரண்டு நிமிஷத்தில் மோகனசிங்கு அங்குவந்தடைந்தான்.

மோகனசிங் அவளை அணுகவே, பத்மாவதி ஓடோடிவந்து "ஏ! நாதா! தங்களுக் குற்றதென்ன? ஏன் இத்தனை நாள் இவ்விடம் வரவில்லை? என்ன காரணத்தினால் மாசுபடிந்த மேனியுடையராய்க் காணப்படுகின்றீர்கள்? தயவுசெய்து என்னிடம் உள்ள நுழையுங்கள். என் அன்பே! என்னிடமுரையாது வேறு யாரிடமுரைக்கப் போகின்றீர்கள்? என்னிடம் சொல்லக்கூடாதோ?" என்று தனக்குள்ள அளவில்லா ஆசைப்பெருக்கத்தால் இதுகாறும் மோகனனை ஸ்பரி

சித்தறியா அவள் தன்னரிய காதலனைக் கட்டியணைத்துத் தன் பவளவாயால் அவன் அழகிய கன்னங்களில் அன்பு ததும்ப எண்ணிறந்த முத்தங்களீந்தாள்.

அப்பொழுது கலங்கிய மனத்துடனிற்கும் மோகனசிங், "என் கண்ணே! ஏன் என்னை இன்னும் அதிகத்துயரிலாழ்த்த நினைக்கின்றாய்? என்னை இனி உன் கனவிலும் நினையாதே. தயைசெய்து என்னை முற்றிலும் மறந்துவிடு. முன் உனக்களித்த வாக்குறுதிப்படி இப்போதிருக்கும் ஸ்திதியில், உன்னை நான் மணப்பது கூடாத காரியம். நான் செய்துள்ள அவ்வீணை வாக்குறுதிக்காக உன்னிடம் மன்னிப்படையவே இவ்விடம் வந்தேன். நான் சோழநாட்டின் பெரியதோர் குற்றவாளியாயிருப்பதனால் நான் இனிமேல் இவ்விடம் ஒரு கணமும் தங்கேன். என்னைத் தயைசெய்து மன்னித்து நான் வேற்றூர் ஏகும் வண்ணம் விடையுந்தருவாய்." என்று விசனமாக அறைந்தான் மோகனசிங்.

"என்னன்பே! என்னென்னவோ சொல்கின்றீர்களே! என்ன குற்றவாளியானீர்கள்?"

"நான் அமர்க்களத்தை விட்டு முதுகு காட்டியோடியதாகக் குற்றஞ் சாட்டப்பட்டேன். எனது சகோதரனும் அதற்குச் சாட்சி சொன்னான். அதுகண்ட தளகர்த்தர் என்னைக் குற்றவாளி என்று கண்டு அவர் என் பேரில் கொண்டுள்ள இரக்கத்தால் தேசச் சட்டப்பிரகாரம் என்னை உயிர்வதை செய்யாது மன்னித்து என் பொருளுடைகளை மட்டும் கைக்கொண்டபின் என்னை ராணுவத்தினின்றும் நீக்கி "எங்காவது ஓடிப்போய் விடவேண்டும்" என்று உத்தரவிட்டார்."

"அதன் பின்"—

"அதன் பின் நான் என் தந்தையிடம் சென்று, நான் குற்றவாளியென எண்ணங்கொண்ட தளகர்த்தர் என்னைத் தண்டத்தலைவனாக அங்கீகாரம் பண்ண முடியாதென்று என்னை அவர் பட்டாளத்தினின்றும் நீக்கியிருப்பதாகவும், அதனால் என் போர்க்கவசங்களைக் கீழே வைத்துவிட்டு என் னிருப்பிடஞ் செல்லலாமென்றுஞ் சொல்லி என்னை அனுப்பி விட்டாரென்றுஞ் சொன்னது தான் தாமதம், அவர் உடனே அளவற்ற சினங்கொண்டனர். மிகக் கோபாவேசத்தராய் நான் தரும் விடை அவருக்குத் தேவையில்லை என்று உரத்த சப்தத்துடன் கூறியது மன்றி, நான் வந்த வழியாகவே மாளி கையினின்றும் உடனே வெளிப்படும்படி கடினமான உத்தரவு பிறப்பித்தார். அதுகேட்ட நான் அவர் வார்த்தைகளை என் சிரமேற்கொண்டு அவ்விடத்தை விட்டு இதோ நாம் நின்று உரையாடும் இவ்விடத்தை அடைந்தேன்."

"பத்மா! உத்தமகுலத்துதித்து உத்தமியாய் வளர்ந்த உனக்குக் கேவலம், போரில் புறங்காட்டி யோடிய கோழை நெஞ்சனை நானா மணாளனாகின்றது? பெண்ணெனப் பிறந் தோர் பலர் தத்தம்பதியினிடம் செல்வத்தை நாடுவர். சிலர் அழகை விரும்புவர். அங்ஙனமிருக்க, நானோ இனி வறுமை யாற் பீடிக்கப்பட்டு உழலவேண்டியவன். நீயோ கஷ்டமென் பதைக் கனவிலும் நினையாதமாது. 'எனக்கு நீ மனைவியாயின் கோரக்கஷ்டத்தை யநுபவிக்க வேண்டியிருக்குமே தவிர, சகல வைபவத்துடன் வாழமார்க்கமில்லையே.' என்றெண்ணும் போது 'கனலிற்பட்ட மெழுகுபோல்' உருகுகின்றது என் மனம் 'இன்பமாய் வாழ்ந்து வரும் உன்னை இக்கட்டுகளுக் காளாக்க என்மனந் துணிந்திலது. ஒரு காசு முதலாய்ச் சம்பாதிக்க வழியற்ற நான் உன்னை ஒருநாளும் மாலையிடேன். ஆனதால் எங்காவது காணாத சீமை சென்று வாழ நிச்சயித்து

விட்டேன். பத்மா! போய்வருகின்றேன்" என்று சொல்லி ஓர் காலை எடுத்து வைத்தான்.

மிகவும் வியசனத்துடன் காதுகொடுத்து நின்றுகொண்டிருந்த பத்மா, அவ்விதம் அடியெடுத்துவைத்த மோகனசிங்கின் மீது வீழ்ந்து, தன்னிருமெல்லிய கரங்களால் அவனது கழுத்தைக் கோத்துக் கட்டிக்கொண்டு தன் கண்களில் நீர்ததும்ப மிகுந்த பரிதாபக்குரலுடன் சொல்லுவாள்.

"எனதுயிரையே கொள்ளைகொண்ட எனது நாதா! தாங்கள் ஒருபோதும் குற்றவாளியாக மாட்டீர்களென்று தங்களுடைய அருமை பெருமை வாய்ந்த குணத்தை நன்கறிந்துள்ள எனக்கே தெரியுமல்லால் வேறு யார்க்கும் தெரிவதியல்பன்று. இதற்காகத் தாங்களஞ்சி ஏன் தங்கள் வாக்குறுதியினின்றும் தவறல் வேண்டும்? தர்மகுணம் வாய்ந்த தங்களோடுமிக்க பெருமையுடன் என்னுயுள்பரியந்தம் யான் வாழ்வதே எம்பெருமான் எனக்களித்த அரும்பேறாகும். 'கல்லானாலும் கணவன், மண்ணானாலும் மணாளன், புல்லானாலும் புருஷன்' என்ற ஆன்றோர் மொழிகளுக்கிணங்கத் தாங்கள் எவ்வாறிருப்பினும் தங்களையே யான் வழிபடத்தெளிந்தேனாதலினால், தாங்கள் என்னை மணஞ் செய்யேனென்பது தங்களுக்கு அழகல்லவே? அஞ்சாதீர்கள் மன்னவ! நாளையே என்னை மணமுடிப்பதாக எனக்கு வாக்குத்தரல் வேண்டும். 'கூடா'தென்று புகல்வீர்களாயின் தங்கள் முன்னிலையிலேயே என்னுயிரைவிடத் திடங்கொண்டேன். "குலமகளிர்க்குக் கணவன் வறியனாயிருந்தென்ன, ஐசுவரியனாயிருந்தென்ன? இரண்டுமொன்றே" என்பர் மேலோர்.

பத்மாவதி இறுதியாயுரைத்த வசனங்களையும், அவைகக்கு முன் கூறிய வார்த்தைகளையும் மோகனசிங்கேட்டு

மிகுதியும் ஒருபுறம் வருந்தினனுயினும், மற்றொருபுறம் அவளுடைய கற்பு லக்ஷணத்திற்கும், மனோதிடத்திற்கும் மெச்சினவனாய் உளம்பூரித்து பத்மாவின் மனத்தை இன்னும் பலவாறு புண்படுத்த மனமொவ்வாதாகித் தான் அவள் நோக்கப்படியே அவளை அடுத்த நாட் காலையில் மணந்து கொள்வதாக அப்பொழுதே வாக்களித்தான்.

---

## 2 வது அத்தியாயம்.

## பத்மாவதியின் திருமணம்.

---

அந்தக்ஷணமே பத்மாவதி அறையினுள்ளிருந்த தன் பாட்டியாரிடம்போய், தானும் மோகனசிங்கும் சில வருடங்களுக்கு முன்னரே செய்துகொண்ட உறுதிமொழிகளையும், தற்சமயம் மோகனசிங்கிற்குத் தன் தம்பியின் சாட்சியத்தாலேற்பட்டுள்ள துன்பத்தையும், அத்துன்பவாயிலகப்பட்ட அவர் தன்னை மாலையிட இஷ்டப்படாது தான் தனக்கு முன் கொடுத்த வீணை வாக்குறுதிகளுக்கு மன்னிப்படையுமாறு தன்னைத் தேடிவந்த விபரத்தையும், தான் அவைகளில் ஒன்றையுங் கவனியாது மறுதினமே மணமுடிக்க உத்தேசித்திருப்பதையும் உரைத்த பின் இனிக் காலைப் பொழுதிற்கு வேண்டிய கார்யங்களை நிறைவேற்றுவதற்கு வேலையாட்களைக் கொண்டு துரிதமாய்ச் செய்து முடிக்கவும் தூண்டினள்.

பத்மாவதியின் மனோபீஷ்டப்படியே கிழவியும் விடியவும் நடக்கவேண்டிய காரியத்திற்கு ஏற்பாடு செய்தனள்.

மறுநாள் மோகனசிங்கிற்கு மாலையிடு நாளானதால் “எப்பொழுது விடியும்? எப்பொழுது விடியும்??” என்றேங்கியிருந்த பத்மாவதிக்கு இரா மிகவும் நீண்டதாகத் தோன்றிற்று. அவளது எண்ணமெல்லாம் தன் காதலன் மீதிருந்த

தால் பொழுது புலருந் தருவாயில் சேவல்களின் குரலோசை கேளாதவளாகி "ஏ! சாமமறிந்து கூவும் சேவற்கோழிகளே! உங்களின் குரலுமடைத்ததோ?" என்று சேவல்களை நினைந்து குறையிரந்தாள். இடைவிடாது வாயுபகவானால் அங்குமிங்கும் அலைப்புண்ட மரங்கள் ஒன்றோடொன்று உரசின சத்தத்தைக் கேட்டவளாகி, "ஓ! ஹோ! இம்மரங்கள்கூட, பத்மாவதியே தூங்காது வருந்தும்பொழுது, நாம் எங்ஙனம் துயிலுவதென்றெண்ணி அவைகளும் என்னுடன் விழித்திருக்கின்றனபோலும்" என்றுன்னுவாள். "உலகில் வேறொருவரையுங் காணாது என்னைத்தான் கண்டு வருத்த நினைந்தனையோ! இது உனக்குத் தர்மமாகுமோ? 'பெண்ணென்றால் பேயுமிரங்குமே.' மேலும், என்னால் உனக்கு நேர்ந்த இக்கட்டென்ன? ஒன்றுமில்லையே! அங்ஙனமிருக்க உனது பிரகாசத்தால் ஏன் என்னை அதிகமாக வருத்தத்துக்குள்ளாக்குகின்றாய்? சீக்கிரம் விடியும்படி கிருபைசெய்" என்று பிரகாசித்து நின்ற சந்திரனை நோக்கி இரந்தாள். மோகனசிங்கையே அல்லும் பகலும் காதலித்து அவனை இதுவரை கணவனாகக் கொள்ளாததால் கையினின்றும் அவளது அழகிய வளையல்கள் கழலும்படி உடல் இளைத்தவளான மெல்லிய பத்மாவதி காலை மோகனசிங்கை யடையுங் கருத்துடையளாகத் தனது மென்படுக்கையில் தன் உள்ளங்கையினிடத்து அழகிய தன் கன்னத்தைவைத்து ஆநந்தக்கண்ணீர் அவளது கண்களினின்றும் அருவிபோல் ஓடிவரச் சிறிதுநேரம் துயிலமுயன்றாள்.

சிறிது நேரத்திற்குள் தன் அழகிய அணையினின்றும் எழுவாள். ஆங்குத் துயிலும் மோகனசிங்கின் வனப்பைக் கண்டு மகிழ்வாள். 'ஆனால் இப்பொழுது நாம் என்னசெய்வது?' என நினைத்து ஏமாந்தவளாகித் தன் படுக்கையில் விழுந்து கிடப்பாள். யாது செய்வதென ஒன்றுந் தோன்

ருது துணையற்றவளாய் உட்காந்து மிகுதியும் வருந்துவாள். வெண்ணிறச் சந்திரிகைதன்னில் ஓர் இருள் தோன்றுதல் போல வெண்பட்டு விரித்துள்ள படுக்கையில் அவிழ்ந்து அலங் கோலமாய் விளங்கிய தன் கருங்கூந்தலைப் பத்மா வாரி முன் போல முடிப்பாள். சோர்வாள். வெகுவாய் வெய்துயிர்ப் பாள். துயருடன் சயனிக்கலாமென்று சயனிக்க முயல்வாள். "ஐயோ! நம் நாயகருடைய இன்னருளால்தான் ஒருவேளை இருள் ஒழியப் பின்னிடுகின்றதோ" வென்றெண்ணுவாள். மயங்குவாள். திடீரென எழுவாள். மோகனசிங் படுக்கை யமைந்திருந்த இடத்திற்கு ஓடுவாள். 'தூங்கும் மோகன சிங்கை எழுப்பலாமா?' என்றெண்ணுவாள். "ஆ! என்ன செய்கின்றேன் யான்?" என்று தன் சுயபுத்திக்கு வருவாள். தன்படுக்கை இருக்குமிடம் திரும்புவாள். மறுபடியும் தன் உடலில் கொதிப்பேறப்பெற்று வாடுவாள். அங்குமிங்கும் சுற்றுவாள். நித்திரை செய்ய எண்ணுவாள். தூக்கம் வரா தது கண்டு 'என்ன செய்வது' என்று நினைப்பாள். இவ்வித நிலையிலிருந்த பத்மா எவ்வாறோ ஒருவாறு தேறித் தன் ஐம்பொறிகளையு மாட்கொண்டு தன் நெடிய கருவிழிகளை யுடைய கண்களின் கடையில் நீர் சோர நின்று தனது படுக் கையிற் படுத்து உறங்குவாளாயினள்

பூசுரர்கள் கைகள் குவிந்தன. சூர்ய நமஸ்காரத்தின் பொருட்டு அழகிய ஆம்பல் மலர்களும் அவ்வாறே யாகத் தாமரை மலர்ந்தன. காசினியோர் கண்கள் திறந்தன. சூரி யன் வருகையால் எங்ஙனம் பத்மாவின் மனத்துயர் நீங் கிற்றோ, அங்ஙனமே இருளும் நீங்கிப் பொழுதும் புலர்ந் தது. பத்மாவும் 'மோகனசிங்கையடைவோம்' என உளம் புளகித்தாள். சந்திரன் தன் சிறப்பை இழக்க, இருள் பிளவு பட, ஆதவன் ரதாரூடனாய் மோகனசிங்கை இக்கதிக்காளாக்

கிய அமரசிங்கையும் வில்லிய சிங்கையும் கடிந்தவன்போற் குணதிசையிலுள்ள குன்றில் தன் செந்நிறக் கிரணங்களுடன் காணப்பட்டான். வாத்தியங்கள் கோஷித்தன. ஆங்குள்ள சகலரும் வாத்திய ஒலியைக்கேட்டு பத்மாவின் வீட்டை அணுகினர். நல்ல முகூர்த்தத்தில் மணம் நடந்தேறியது.

பத்மாவதியோ நற்குண நற்செய்கைகள் ஒருங்கே அமையப்பெற்றவள். அழகில் இரதிதேவியையும், குணத்தில் நளாயணியையும், கற்பில் அருந்ததியையும் நிகர்ப்பாள். முடிவாகச்சொல்லப்புகின் தன் கொழுநனையே கடவுளெனமதித்து அநவரதமும் மனமுவப்பப் பணிவிடை புரிதலையே கடமையெனக்கொண்டவள். ஒத்த அழகும், அன்பும், குணமும் வாய்ந்துள்ள தம்பதிகள் வாய்ப்பது அருமையிலும் அருமையே! ஆயினும் அவைகளிற் சிறந்து மோகனசிங்கும் பத்மாவும் மலரும் அதன் மணமும் போன்று இந்திரபோகத்திலும் சிறப்பாக அவ்விடம் பத்மாவின் பாட்டியார் உயிருள்ளளவும் வாழ்ந்து வந்தார்கள்.

அதன் பின் ஓர் தினம் மோகனசிங், "என்னுருயிர்ச் செல்வியே! உன்னை மாலையிட்டு உன் மனோபீஷ்டத்தையும் நானுனக்கு நல்கியிருந்த வாக்கையும் பூர்த்தி செய்தேன். என் கண்ணே! என்னாலிவ்விடம் இனி ஒரு கணமும் தரிக்க முடியாது. நானோ வேற்றூர்க்கானிடைச் செல்லவேண்டும். காட்டிலோ யானை பிளிறுவதையும், மிருகேந்திரன் கர்ஜிப்பதையும், கொடிய விலங்குகள் கூக்குரலிடுவதையும் நீ கேட்பின் மனங்கலங்கி அறிவிழந்து போவாய் என்பது திண்ணம். நிற்க, வேளாவேளையில் உனக்கு உணவுங் கிடைக்காது. மேலும் அடவியிலுள்ள மூங்கில்கள் மற்ற விருக்ஷங்களுடன் உரசுவதினால் ஊழித்தீபோன் றெரிவதைக்காணின் அச்சமுறு

திராய். என் செய்வேன்! என் விதி இருந்தவாறு என்னே!" என்று பத்மாவதியிடம் பகர்ந்து பிரலாபித்தான்.

"என்னுருயிரே! தாங்களும் என்னுடனிருப்பீர்களாயின் யானிவ்விடமிருக்க உடன்படுவேன். இல்லையேல் அடவி மார்க்கம் தாங்களும், நாட்டிடையே போகமுடன் யானுமிருப்பது அழகுமன்று விதியுமன்று. 'பெண் மக்கள் இளமையில் தம் தாய் தந்தையரிடத்தும், மணமானபின் கொழுநனிடத்தும், நாயகருக்குப்பின் மக்களிடத்துமே வாழவேண்டு' மென்பது வேத விதியாகும். அவ்விதமிருக்க, யான் சுகமாகத் தங்களைப்பிரிந்து இவ்விடம் வாழமாட்டேன். என்னைப் பரீட்சை செய்யும் நோக்கத்துடன் என்னிடத்துத் தாங்கள் இம்மொழிகள் செப்புகின்றீர்கள் போலும்."

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
நல்லரவு வாழ்வார்க் குரை.

"கற்புடைய மங்கையர்க்குக் கணவனே மிக்க தெய்வம். தவமாவது என்ன? மணாளர்க்குப் பணிவிடை புரிதலே. காந்தன் உண்டி கொள்ளும்வரை உண்டி கொள்ளாதிருத்தலே விரதம். கணவனது கட்டுரையைக்கேட்க விரும்புதலே வேத சிரவணம். எக்காலத்தும் கொழுநனுடன் கூடி வாழ்தலே மோக்ஷமாகும்" என்ற ஆன்றோர் வசனங்களை யான் நன்கறிவன். காந்தன் வசிக்குமிடம் இடுகாடேயாயினும் அதுவே எனக்குச் சிறப்புற்று விளங்கும் மாளிகையாகவிருக்கும். ஆதலின், நாதா! தாங்கள் முன் கூறிய வன்மொழிகளை மறுமடியும் உரையாதிருக்கும்படி வேண்டிக்கொள்கின்றேன்" என்று கண்கலங்கினுள் பத்மாவதி.

பத்மாவின் இத்தாபமொழிகளைச் செவியுற்ற மோகனசிங் மனமுருகி, "பூங்கொடி போல்வாய்! உன்னைத்தனியே

இவ்விடம் வைத்து நான் பிரிய நினைத்தேனில்லை. என்னுடன் நீ வந்தால் உன்னுடைய மேனிவாடிடுமே என் றஞ்சினே னொழிய வேறன்று. உன்னைப்பிரிந்து செல்ல மனந்துணியே னென்றபோதிலும், என்னருங் காதலி! நான் செல்லும் மார்க் கத்தில் கல்லும் முள்ளும் உன் கால்களிலுறுத்துவதைக் கண் ணுற்று எங்ஙனம் சகித்திருப்பேன்? ஆதலால் நீ இவ்விடத் திலேயே இருப்பது நலம். நானே கூடிய சீக்கிரம் உன்னைக் காண்பேன்" என்று மீண்டுமுரைத்தான்.

இம்மொழிகள் செவியிற் புகலும் பத்மா இயம்புவாள்; "நாயக! மணம் மலரினின்றும் அகலுமா? சூர்யனிடமிருந்து ஒளியைப் பிரிக்கலாகுமோ? சந்திரனிடமிருந்து குளிர்ச்சியை யும், பாலிலிருந்து வெண்மையையும் பிரித்தலாகுமோ? அது போலவே நாயகனைத் தனியேவிட்டு நாயகி பிரிதலும் கூடு மோ? உயிர் பிரிந்த உடல் தரிக்க முடியாததுபோல், தங்களை விட்டுப்பிரிந்து யான் எவ்வாறு வாழ முடியும்? இது கனவிலும் கருதக்கூடாத காரியம்." என்று கலங்கினாள்.

"தன் கணவனுடன் கூடிக்குலாவி யிருப்பதைவிட தேவ ருலகஞ்சென்று போகமுடன் வாழ்வதையும் பெரிதென மதி யார் உத்தமிகள். அவ்விதமிருக்கப் பத்மா விரும்புவதும் சாத்தியமானதே" என்று எண்ணினான்.

பத்மாவின் வசனங்களுக்கு முன்னர்த்தன்வார்த்தை ஈடு கொடுத்து நில்லாததை யுணர்ந்த மோகனசிங் என்ன செய் வான்? பத்மாவையுங் கூட்டிக்கொண்டு சேரநாட்டை நோக்கி நடக்கலுற்றான். போகும் வழியில் அவர்கள் பட்ட கஷ்டம் அனந்தம். கானிடைப்போகும் ஓர் தினம் இவர்கள் படுந் துயரைக்கண்டு சகியாதவன் போல் கதிரவன் கடலிற் குளித் தான். உடனே பேரிருள் பரவியது. இரவில் தன் காதலி

யைக் கானிடைக்கூட்டிச் செல்வது அழகல்லவென்றெண்ணிய மோகனசிங், நளன் தமயந்தியுடன் தங்கினது போல், ஓர் பாழ் மண்டபத்தில் தங்கலாயினன். அன்னக்களையாலும், மிகுதியான வழி நடக்கலுற்றதனாலும் களைமேலிட்டுத் துயிலத்தலைப்பட்டாள் பத்மா. மலரணையில் மகரயாழ் கேட்டுறங்கக்கூடிய பத்மாவதி தற்சமயம் கானிடை, பாழ் மண்டபமொன்றில், புழுதியில் படுத்துறங்கக்கண்டு சகியாத மோகனசிங், அந்நங்கையின் தலையைத் தன் தொடைமீதிருத்திக்கொள்ளவே, பத்மா அயர்ந்து நித்திரை போயினள்.

"ஜகத்ரக்ஷகா! என் செய்வேன் யான்! சிறிது நாளைக்குள்ளாகவே இவ்வளவு மயங்கும் பத்மா எவ்வாறு என்னுடன் அவள் ஜீவியகால பரியந்தம் காலங்கழிக்க முடியும்? இவளை இவ்வாறு விட்டு ஓடிவிடுவோமா? என்ன நினைக்கின்றேன்! 'பெண் பாவம் பொல்லாது.' என்னை நம்பின இவளைக் கைவிடலாகாது" என்று மோகனசிங் நினைத்துக்கொண்டிருக்குந்தருவாயில் பத்மாவும் விழித்தெழுந்தாள். மேலும் வழி நடந்து அநேகவிடங்களில் அலைந்து திரிந்து சிறிது நாளில் இருவரும் சேரநாட்டை யடைந்தனர்.

முன்பின்னறியா அந்நாட்டில் போர்த்தொழிலை யன்றி வேறோர் கைவேலையுமறியா மோகனசிங் சொற்ப ஜீவனத்தமர்ந்து மனையாட்டியுடன் கஷ்டப்பட்டுழலும் தருணத்தில் "மக்கட் பேறில்லாதார் பொன்னுடையரேனும் புகழுடையரேனும் மற்றென்னுடையரேனும் யாது பயன்? நிற்க, புத்திரப்பேரற்ற மானிடர் தானம், தவம், வேள்வி முதலியன இயற்றினும் வானவர் தம்மூர்க்குச்செல்ல வழியுமுண்டோ?' என்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க அம்பிகை பாகனருளால் மோகனசிங்கிற்குப் பத்மாவின் வயிற்றில் ஓர் ஆண் மகவும், பின்னுஞ் சிறிது காலத்தில் ஓர் பெண் மகவும் தோன்றின.

ஒரே ஒரு ஜீவனாகிய தன் இல்லறத் துணைவியுடனேயே அளவற்ற துன்பமனுபவிக்குந்தருணம் இருமக்கள் தோன்றவும் இன்றியமையாத்துன்ப வாயிலகப்பட்டு அக்குழவிகளைப் போஷிக்க வழியற்றவனாயிருந்தும் பொறுமையுடன் "ஏதோ எம்பெருமான் திருவருளால் புத்திர ரத்தினங்களை அடைந்தோம். அவர்கள் அறிவில்லாதவர்களாயும், துன்பமார்க்கராயுமிருத்தலாகாது. அறிவு, ஆண்மை, வீரம், தீரம் முதலிய அருங்குணங்க ளமைந்துள்ளவர்களா யிருத்தல் வேண்டும். கல்வி கேள்விகளில் அவர்களைத்தேற்றுவது நமது கடமை. உலகம் நம்மைக் குறை கூறாது செய்தல் வேண்டும். மக்களும் இனிதுவாழ நாம் கண்டுகளித்தல் வேண்டும்" என்றிவ்வாறு மோகனசிங் யோசனை செய்தபின், இறுதியாக "ஈசனுளன். விதையொன்று விதைக்கச் சுரையொன்றா கிளம்பும்" என்று தன் மனத்துனுள் ஒருவாறு தேறியிருந்தான்.

அப்பொழுது மைந்தர்களும் மூன்று நான்கு வயதடைந்தனர். திடீரென்று சேரநாட்டில் பஞ்சமுண்டாயது. பச்சை நிறத்தைப் பார்ப்பதே அரிதாய் விட்டது. நீர் வேண்டாக் கள்ளிகளும் வெளுப்படைந்தன. ஆறுகுளங்கள் வறண்டன. 'மழையின்றி மாநிலத்தார்க்கில்லை' யாதலால் விலங்கினங்கள் தாகவிடாயால் உயிர் நீத்தன. மானிடரும் அவ்வாறே பசிப்பிணியால் மாள்வாராயினர். செடி கொடிகள் கரிந்தன. ஜனங்கள் எல்லாம் உண்ணீருமின்றி உமிழ்நீருமின்றியழக் கண்ணீருமின்றி நனி வருந்தினர். வேதியர் வேதமோதுவதை நிறுத்துவாராயினர். அந்தணர் வேள்வியால் இதுகாறும் அவிர்ப்பாகம் பெற்றுவந்த இமையவர்கள் அப்பொழுது அவிர்ப்பாகம் கிடையாது வருந்திச் சிவபிரான் பால் முறையிடவும் எண்ணங்கொண்டனரென்றால் இதனினும் விரிவாய் இப்பஞ்சத்தின் கொடுமையை என்னென்றியம்புவது!

சேரநாட்டை முன்பின்னறியா மோகனசிங், ஐவேஜற்ற மோகனசிங், யாதொரு கைவேலையும் செய்தறியா மோகன சிங், அதுவும் தற்சமயம் பஞ்சத்தின் வாயிலகப்பட்ட மோகன சிங், தன்னிருகுழவிகளுடனும், மெல்லிய மேனியாள் தன் அருமைப் பத்மாவோடும் என்ன துன்ப மனுபவித்திருக்கக் கூடுமென்று நீங்களே உய்த்துணருங்கள்.

'பொருளிலார்க் கிவ்வுலகமில்லை' என்பதற்கிணங்க அத் தம்பதிகளிருவரும் அக்குழந்தைகளுடன் பட்டபாடு செப்புந் தரத்ததன்று. மோகனசிங்கிற்கு வேலையோ கிடைப்பதரிது. சாண்வயிற்றைப் போஷிக்கவெண்ணி அடவிசென்று ஆங்குச் சிதறுண்டு கிடக்கும் மூங்கிலரிசிகளைப் பொறுக்கிக் கொணர் ந்து, குசேலர் தன் இருபத்தேழு குழந்தைகளைக் காப்பதற் காகத் தன் அருங்குணம் படைத்த மனைவியிடம் கொடுத்தது போல், பத்மாவிடம் கொடுப்பான். அவளதை ஓர்வித உண வாக்கி முதலில் தன் பர்த்தாவுக்கும், பின் மைந்தர்கட்கும் படைத்து, எஞ்சியிருந்தால் மட்டிலும் அதனைத் தானுண் பாள். சிலநாளில் அவ்வுணவுங் காணாது மக்களிருவரும் அழுது தவிப்பார்கள். அவ்விதம் வருந்தும் சிறுவர்களைப் பத்மா அன்புடன் மடிமீதிருத்தி அவர்கள் படும்பாட்டைக் கண்கொண்டு பார்க்கக்கூடாதவளாய் "இதுவும் எம்பெரு மான் அருளே" என உன்னிப் பொறுமையாயிருப்பாள்.

ஆனல் ஓர் தினம் மங்கையர் திலகமாம் பத்மா தன் மக்களின் பசிப்பிணி தீர்க்கவெண்ணி ஆகாரமளிக்க எத்த னித்ததுகண்ட ஆண் குழந்தை அருமையுடன் கைநீட்டும். பத்மா தனக்களியாமல் முதலில் அச்சேய்க் களிக்கின்றுளே என்றெண்ணிக் கண் பிசைந்து அழுது தன் தாயின் மடிமீது முகங்குப்புறப்பாயும் பெண் குழந்தை. பத்மா பெண் குழவிக்

களிக்கும்போது ஆண் மகவு நிலத்தில் வீழ்ந்து புரளும். பெண்மகவு எழுந்து பொருமி அழும். ஐயோ! எங்ஙனம் மனமுடையாதிருப்பாள் உத்தம பத்மா! 'அம்மா! எனக்கின்னும் பசியடங்கவில்லையே' என்னும் ஒரு குழந்தை; 'என் வயிற்றிற்குப் போதுமான உணவு தரவில்லையே' என்னும் மற்றொரு குழந்தை; மிகவும் ஆவலுடன் உணவிற்காகக் கை நீட்டும் ஓர் குழந்தை; அக்கையைத் தட்டிவிட்டு நகைக்கும் மற்றொரு குழந்தை. என் செய்வாள் பத்மாவதி. அவ்விதம் வருந்தும் மைந்தர்களான சுந்தர பால்சிங்கையும் மனோன்மணியையும் கடிந்தனளா? ஒரு நாளுமில்லை. அவள் அன்புடன் அக்குழவிகளை நோக்கி இரங்குவாள். ஏங்குவாள். மலரினும் மிருதுவான தன் கைகளால் அவர்களை அரவணைப்பாள். மடிமீதிருத்துவாள். அவர்கள் கண்ணீரைத் துடைப்பாள். முகம், முதுகு, முதலியவைகளைத் தடவிக் கொடுப்பாள். அவர்களுக்குத் தன் கிளிபோன்ற வாயால் எண்ணிறந்த முத்தங்கொடுத்து இனிமையாகப்பேசி அன்னவர்களின் கொதிப்பை இவ்விதம் ஆற்றுவாள்.

மற்றோர் தினம் பத்மா பசிக்களையால் மூர்ச்சையானாள். சற்று நேரங்கழித்தெழுந்து, "பக்த பராதீனபராஞ் சுடரே! 'ஏழைமை மிகவும் கொடிது கொடிது.' கணவர் என் செய்வார்? ஏற்கனவே சஞ்சலத்திலாழ்ந்திருக்குமவர் இக்கொடுமைகளைக் கண் கூடாய்க் காணின் மிகுதியும் விசனிப்பரே. அவரிடமிவைகளை உரையாது நானிவ்விதமாகவே இருந்து வரலாமென்றாலோ, மக்களோ பசிப்பிணியால் பெரிதும் வருந்துகின்றனர். கால் வயிற்றுக்கும் சரியான ஆகாரம் கிடைப்பது அருமையாயிருக்கிறது. சிலவேளை அன்னக்களையால் உயிர்விட நேரின் யாது செய்வது? ஆகலால், இதனை அவரிடமுரைப்பதே உசிதமென்றெண்ணி ஓர் தினம் மோகனசிங்

உல்லாசயாயிருக்கையில் தான் தன் குழந்தைகளுடன் படும் பாட்டைப்பற்றிச் செப்புவாளாயினள்.

---

## 3-வது அத்தியாயம்.

## மோகனசிங் உத்தியோகம்.

---

"பெண்ணாரமுதமே! நீ படுந்துயரை நான் அறியாமற் போகவில்லை. நம் விதி இவ்விதமிருக்க நாம் என் செய்யவல்லோமென்றெண்ணியே நானும் அதிகக் கவலைக்காளாயிருக்கின்றேன். ஆனால் இன்றுமுதல் நம் கலி ஒருவாறு நீங்குமென்றெண்ணுகின்றேன். நேற்று ஒருவன் 'நம் சேரநாட்டதிபராகிய போஜவர்மரது ஏகபுத்ரனாகிய ஐந்து வயதுள்ள விசித்திர வீர்யவர்மருக்கு அக்ஷராப்பியாசம் செய்விக்கத் தகுந்த ஆசிரியருண்டோ?' வென விசாரித்துச் சென்றான். ஒரு நிமிடமும் தாழ்த்தாது நான் அரச சபையை அணுகிப் போஜவர்மரைக்கண்டு 'நான் ஆசிரியனாக வருகின்றேன்' என்றுரைக்க, அவரும் அவ்விதமே என்னை ஒப்புக்கொண்டு 'நாளைமுதல் வா' வென்றுரை செய்து என்னை அனுப்பினர். ஆதலால் நீ ஒன்றுக்கும் அஞ்சற்க. நான் போஜவர்மரது சொற்படி இப்பொழுது போய் வருகின்றேன்" என்று மோகனசிங் அறைந்து கொண்டிருக்குங்கால், "யாரையா வீட்டிலே?" என்று ஒருவன் கூவிக்கொண்டு மோகனசிங் வசித்துவந்த இல்லிடைவாயலில் வந்து நின்றான். நின்றவன்

"தங்களை அரசர் இராகுகாலத்திற்கு முன்னமே அரண்மனை வரும்படி சொல்லியனுப்பினார்" என்றான்.

"உடனே மோகனசிங் தன்னிடமிருந்த நல்லுடையொன்றையணிந்து, அரண்மனை சென்று ராஜதரிசனம் செய்து மன்னவன் ஆக்ஞைபின்படி விசித்திர வீர்யவர்

மனுக்கு அக்ஷராப்பியாசம் செய்துவைக்கத் தொடங்கினான். 'தவத்திற்கொருவர் கல்விக்கிருவர், வழிக்குமூவர்' என்றபடி விசித்திர வீரியவர்மனுடன் தன் மைந்தனையும் வைத்தே கல்வி பயிற்றுவித்து வருவானாயினான்.

மோகனசிங்கின் உபாத்திமையால் தன் மைந்தன் நாளடைவில் கல்வி கேள்விகளில் திறம் பெறுவதைக்கண்ட போஜவர்மன் மிகவும் களித்து மோகனசிங்கிற்கு வேண்டிய சிறு அழகிய மாளிகையொன்றும் அத்துடன் அவனது கலியும் நீக்கும் வண்ணம் நிதியும் நல்கி உதவிவந்தான். கல்வி கேள்விகளில் முதிர்ந்து சிறந்து விளங்கிய விசித்திர வீரிய வர்மனுக்கும் தன் மைந்தனுக்கும் ஏறக்குறைய வயது பதினாறிருக்கவே, மோகனசிங் அவர்களுக்கு அரசர்க்குரிய ரதாரோஹணம், யானையேற்றம், குதிரையேற்றம், அஸ்திரசஸ்திரப் பயிற்சி முதலிய கற்றுவைப்பானாயினான்.

சிறிதுகாலத்திற்குள் தக்க பருவமடைந்த விசித்திர வீரியன் கல்வி கேள்விகளிலும் படைக்கலப்பயிற்சியிலும் மிகவும் தேர்ச்சி பெற்றிருப்பதையும், அரசர்க்குரிய ஆண்மை, வீரம், தீரம், அறிவு முதலிய அருங்குணங்களும் அமையப் பெற்றிருப்பதையுங்கண்டு மனமகிழ்ந்த மன்னன், தன் மைந்தனுக்கு இளவரசுப்பட்டஞ்சூட்டிக் களிப்பெய்தினான். அவனைச் சேரநாட்டிலறியாதார் யாருமிலர். மோகனசிங்கும் தான் முன் வசித்துவந்த பாழ்வீட்டைக் காலிசெய்து மிக்க வைபவத்துடன் அரசனால் அருளப்பட்ட அழகிய மாளிகை தன்னில் தன்னருமைக்காதலியுடனும், மனோன்மணியுடனும், விசித்திர வீரியனையொத்த பால்சிங்கோடும் இனிதே அச்சேரநாட்டிற் காலத்தைக்கழித்து வரலானான்.

எவ்வுயிரையும் தன்னுயிரெனக்கருதி யாவராலும் புகழப்பட்டு வந்த விசித்திர வீரியவர்மன் ஓர் நாள் வேட்டைக்

சூர்சென்று தன் மனப்படியே வேட்டையாடிய பின் தன் களையை மாற்ற அவ்விடமிருந்த ஓர் மர நிழலில் உட்கார்ந்தான். பின் தனக்குள்ள நீர் வேட்கையால், தன்பரிதி மீதிவர்ந்து நீரோடையொன்றின் பக்கமாய் அதனைச் செலுத்தித் தெள்ளிய நீரருந்தி தன் தாகவிடாயைத் தீர்த்துத் திரும்பும் வழியில் ஓர் அழகிய பூங்காவையும் அதனின்று வரும் இனிய வாசனையையுங் கவனித்து, "இவ்வழகிய பூங்கா யாரைச் சார்ந்தது? நாமிதுவரை இத்தகைய பூங்காவை எங்குங் கண்டிலோமே! என்ன நேர்த்தி! என்ன சுகந்தம்! மனதுக்கு இனிமையைத் தருகின்றதே. அதையணுகிப் பார்ப்போம்" என்று இவ்விதமாக எண்ணிப் பூங்காவை நோக்கிச் செலுத்தினன் தன் அசுவத்தை.

பூங்காவை நெருங்கவே அவனது கண்கள் தேவகன்னிகைபோன்ற ஓர் யௌவன மாதின்மேற்பட்டன. அக்கன்னிகையின் இளமையையும் வனப்பையுங்கண்டு மன்மதாவஸ்தைக்குள்ளாகித் திகைக்கலுற்றான் வர்மன். அவனுடைய உயிரையே அவள் கொள்ளைகொண்டனளென் றறிந்தான். பின், "ஆஹா! இவளது அழகை என்னென்பேன்! இந்திரலோகம் வாழ் அரம்பையாதியோர்களுடைய அழகும் இவளுடைய வனப்பிற்கு ஈடுகொடாதே. சரீரமோ மின்னற்கொடிபோன்று துவளுந்தன்மையுடையதாய் இருக்கின்றது. மேனியோ பொன்னிறம். வதனமோ சந்திரபிம்பம். கூந்தலோ கார்மேகம்போல் கறுத்து மயில்தோகை போலடர்ந்து நீண்டு விளங்குகிறது." என்று அவளை இவ்விதமாக வர்ணித்துக்கொண்டு நின்ற யௌவன வீரவர்மனைத் திடீரெனநோக்கினளப்பெண். அவளும் வீரவர்மனின் இளஞ்சூர்ய பிம்பம் போன்ற முகவிலாசத்தையும், பொன்னேவென்று பொலிந்து விளங்கும் மேனியையும், யௌவன பருவத்தைக் குறிக்கும்

கறுத்து வளர்ந்த மீசையையும், படர்ந்த மார்பையும், உருண்டு திரண்டு முழங்கால் வரை தொங்கும் அழகிய கைகளையும் கண்டவுடன் வீரவர்மனைத் தன்னையறியாமலே காதலித்து, "யான் தங்களை நேசிக்கின்றேன்" என்று தன்னுள்ளத்தை வீரவர்மனுக் கறிவிப்பதுபோல் புன்னகைபூத்துச் சிறிது நாணித்தலைகுனிந்து நின்றுகொண்டிருந்தாள்.

அப்பொழுது வீரவர்மன், "நான் செய்த நற்றவமோ? அல்லது என் முன்னோர்செய்த தவப்பேறோ? அம்மாது என்னை நேசிக்கின்றாள். அதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. அவள் புன்னகை பூத்தலால் வெளித்தோன்றும் அவளது பல்வரிசைகள் மாதுளை விதைகளை யொக்கின்றன. என்ன செய்யலாம்? அந்நங்கையை அணுகிச் சிறிது சம்பாஷிக்கலாமா? இக்கன்னிகை யாராயிருப்பள்? இவளோர் நற்குலமாதென்பதில் தடையில்லை. தனியளாய் நிற்கும் ஓர் அந்நிய மாதை நெருங்குவது கூடாதே. யாராவது நோக்கின் அவமானத்திற்கிடமாமே. என் செய்வது? என்ன நேரினும் சரி. இவள் பொருட்டு என்னுயிரையும் மதியேன். அருகிற் சென்றே சம்பாஷிப்பேன்," என்று திடங்கொண்டு தன் குதிரையை ஓர் மரத்தில் கட்டிவிட்டுத் திரும்பிச்சென்று அக் கன்னிகையை நோக்கினான்.

நோக்கலும், ஒருவன் எங்ஙனம் நரகத்தினின்று தப்பி மோக்ஷத்தையடைந்து மறுபடியும் நரகத்தில் வீழ்ந்தால் அவஸ்தையடைவானோ, அவ்விதமே யானான் வர்மனும்.

"ஐயோ! என் கண்ணே! என் செய்வேன்? ஜன்மசாபல்ய மடைந்தேனென நினைத்தேன். என் எண்ணத்திற்கு முற்றிலும் மாறாகிவிட்டதே. இனியான் உயிர் வைத்திருந்து என்ன பிரயோஜனம்? உன்னை மணவாது இனி வேறொருவனையா

மணக்கப்போகின்றேன்? என் ஆயுள்பரியந்தம் பிரமச்சர்ய விரதத்தைக் கைக்கொள்ளும்படி செய்துவிட்டனையே! என்னுயிரைக் கொள்ளைகொண்ட எனது கண்மணீ! இவ்விதம் தெரிந்திருந்தால் உன்னைக் காதலிக்கச் சம்மதியேனே! அறியாது மோசம் போனேனே! தெய்வமே! என் தலைவிதி இருந்தவாறென்னே! பால்கிங் அழைத்துச் செல்கின்றனே! யௌவன பருவமுள்ள அவனுக்கோ இன்னும் மணமாகவில்லையே! ஆதலினால் அப்பெண் அவனுடைய மனைவியாயிருக்க மாட்டாள். பின்னர் யாராயிருக்கலாம்? அவன் முன்னர் நம்மிடம் சொன்ன அவனது தங்கை மனோன்மணியே யாவள். ஏ! அன்னநடை வாய்ந்த மனோன்மணி! உன்னை நான் எவ்வாறு மறப்பேன்? நீயோ குருவின் புத்திரியாகி விட்டனையே!" என்று இவ்வாறு புலம்பின வீரவர்மன் இறுதியாக "நான் இந்த ஜன்மத்தில் உன்னை மாலையிடேனாகிலும் மறுஜன்மத்திலாவது மாலையிடுவேன். அதுவரை வேறொரு மாதையும் என் கண்கொண்டு நோக்கேன்," என்று சபதம் செய்து தன் அச்வத்தின் மீதேறி அரண்மனை யடைந்து அல்லும் பகலும் மனோன்மணியையே சிந்தித்து வாடுவானாயினன்.

---

## 4-வது அத்தியாயம்.

## மனோன்மணியின் மன நிலை.

---

"மனோன்மணி! ஒருநாளும் மாலைப்பொழுதில் பூங்காவில் இவ்வளவு நேரந் தங்காது விடுவையே! அவ்விதமிருக்க இன்று ஏன் இவ்வளவு நேரமிங்கிருக்கின்றாய்? அம்மா உன் வருகையை 'இன்னுங் காணோமே மனோன்மணியை' என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றார்கள். அப்பா

உன்னைப்பார்த்து வரும்படி என்னை அனுப்பினார்கள். வா போவோம்" என்றழைத்துச்சென்ற பால்சிங்குடன் இல்லமடைந்த மனோன்மணி தன்னறைக்குட்சென்று "ஏ! வீரவர்ம! முன்னொரு நாள் என் அண்ணாவுடன் எங்கள் வீட்டிற்கு வந்த அன்றே உன்னைக்கண்டேன். கண்டவுடன் என் மனமோ என்னை அறியாது உன்னை யடைந்தது. அன்றுமுதல் ஆவல் என்னை வருத்த மறுமுறை உனது அழகிய வதனத்தைக்காண அளவில்லா ஆசைகொண்டிருந்த எனது எண்ணம் நிறைவேறாது நின்றேன். ஏதோ என் அதிர்ஷ்டவசத்தாலும், முன் ஜென்மங்களில் செய்த நற்றவத்தாலும் இன்று நானும் நீயும் தனித்திருக்கையில் உன்னைப் பார்த்தேன். என் கோரிக்கை நிறைவேறிற்றென்று உளம்புளகித்தவளானேன். நீயும் என்னைக்காதலித்தாய். உனது அமிர்தச்சொற்களைச் செவிமடுக்க எண்ணங்கொண்டு உன்னை நெருங்க நினைத்தேன். என் செய்வது. நினையா நேரத்தில் எனது அண்ணா வந்து அழைத்துச்சென்றார். ஏ! வர்ம! உன்னுடைய மனம் எவ்வாறிருந்திருக்குமோ? தற்போது என்ன நிலையிலிருக்கின்றதோ? நீ என்னைக் காதலித்தலும் வீணே. மேலும், உன் மனம் எந்நிலையிலிருந்தாலென்ன? அரசகுமாரனை நீ, ஏழையாகிய இப்பாவி மனோன்மணியையா மாலையிடச் சம்மதிப்பாய். ஒருவேளை நீ விரும்பினும் உனது தந்தையார் ஒருநாளும் சம்மதியாரே. வர்ம! உன்னுடன் ஒரு வார்த்தை பேசினேனேயானால் எனக்கு அதுவே போதும். என்றும் விவாகமில்லாமலே இருந்து விடுவேன். என்றைக்கு உன்னை மறுமுறை காண்பேனோ, அன்றே நானெடுத்த ஜன்மம் சாபல்யமடையும். ஈசா என்றுதான் நின் திருவுள்ளமிரங்குமோ?" என்று நினைந்து நினைந்து மெய்சோர்ந்து நைந்தாள்.

இங்ஙனமிருக்க, மோகனசிங் தன் மனைவியுடனும் மக்களுடனும் உல்லாசமாய் வீற்றிருந்த ஓர் நாள் நாலைந்து மனிதர் அவ்விடம் தோன்ற, அவர்களில் ஒருவர் வீட்டு வாயிலில் நின்று, "ஐயா அவர்களிருக்கின்றார்களா?" என்று வினவ, பால்சிங், "அப்பாவா? இருக்கின்றார்கள்." என்று பதிலுரைத்துப் பின் தன் தந்தையைப் பார்த்து, "அப்பா! யாரோ நால்வர் தங்களைத் தேடி வந்திருக்கின்றனர்" என்றான்.

அதுகேட்ட மோகனசிங், "வாருங்களையா! உள்ளே வாருங்கள்." "பாலா! அந்நாற்காலிகளைக் கொணர்ந்திவ்விடம் போடு. தாம்பூலங் கொண்டுவா." "ஐயா! தாம்பூலம் போடுங்கள். என்ன சங்கதி. ஐயா! இந்நேரம் தாங்கள் யாவரும் இவ்விடமெழுந்தருளக் காரணம் யாதோ? என்னாலானதைத் தங்கள் பொருட்டுச் செய்வதற்குச் சித்தமாயிருக்கின்றேன் யாதுவிசேடம்?" என்று கேட்டான்.

அப்பொழுது அந்நால்வரில் ஒருவர் "தங்களை யாங்கள் நன்கறிவோம். நாளை யாங்கள் கூட்டங்கூடவிருக்கும் பொது ஜனசபைக்குத் தாங்கள்தான் அக்கிராசனம் வகிக்கத் தகுந்தவர்களெனத் தங்களைத் தேர்ந்திருக்கின்றோம். ஆதலால் தாங்கள் எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி நாளை நாலரை மணிக்கு எங்கள் சபை கூடியிருக்கும் இடத்திற்கு வந்து அச்சபையில் எங்கள் வரவேற்பு வந்தனோபசாரத்தின் பின்னர் அக்கிராசனம் வகிப்பீர்களென நம்புகின்றோம்." என்றார்.

அவர்கள் வேண்டுகோளைச் செவியுற்ற மோகனசிங் யாது பதில் சொல்வதென்றறியாது தன் புத்திரன் முகத்தை நோக்க, "அப்பா! தங்களை நால்வர் தேடி வேண்டுகின்றதனாலும், ஜனங்களின் பொதுநன்மையைக் கருதியுழைத்தலால் யாதொரு கெடுதியுமில்லையாதலாலும், அப்பெரிய கூட்டத்

தில் அக்கிராசனம் வகிக்கும் பாக்கியம் தங்களுக்குக் கிட்டி யிருப்பதாலும், தாங்கள் இவர்கள் வேண்டுகோளுக்கிணங்கல் அவசியம்" எனத் தன் முகக்குறிப்பால் பாலன் தன் தகப்ப னுக்குணர்த்தினான். அப்பொழுது "இவ்விதஸ்திதியிலிருக் கும் நமக்கேனித்தொல்லைகளெல்லாம் நம்மை யாரென்று நன் கறியா இவர்கள் ஒருவேளை நம்மை யவமதித்தாலப்போது நம்முடைய மனமுடையுமென்கிலும், நம்மையொரு பொருட் டாக மதித்துவந்த இவர்களை வறிதேயனுப்புவதும் தவறு. சில சமயம் இவர்கள் பகை ஏற்படினும் ஏற்படும். அன்றியும் 'வரே' னென்பது நமக்கு பெருந்தன்மையு மாகாது. நிற்க, நம் மைந்தனுக்கோ நாம் அக்கிராசனம் வகிக்கத்தான் வேண் டுமென்ற அபிப்பிராயம் குடிகொண்டிருப்பதாகத் தெரிகின் றது. அவனது ஆசையை நிராசையாக்குவதும் நன்றன்று. ஆதலால், அவர்கள் வார்த்தைக்கிணங்க 'நாம் வருகிறோ' மென்று அவர்களுக்குப் பதிலளித்தலே மேன்மை" என்று சிறிது ஆலோசித்துக்கொண்டிருந்த மோகனசிங், அந்நாள் வரைப் பார்த்துத் தான் அவர்கள் விருப்பப்படியே மறுநாள் நாலரை மணிக்குக் குறித்த இடத்திற்கு வந்து சேர்வதாய் வாக்களித்துத் தன்னைத்தேடித் தன் இல்லிடம் வந்ததற்கு வந் தனமுஞ் சமர்ப்பித்து அவர்களை அனுப்பிவைத்தான்.

பின் தனியாயிருந்த தன் தந்தையை நோக்கி, "அப்பா! எங்கே அவர்களது வேண்டுகோளை நிராகரித்து விடுகின்றீர் களோ வென்றஞ்சினேன். நல்ல வேளை உடன்பட்டீர்கள். அப்போது தான் என்னுயிர் மீண்டாற்போலானது. உலகில் சபைத்தலைவனாகிப் பொதுஜன நன்மையை நாடுவதினால் ஒருவ னடையும் மேன்மையை என்னென்பது." என்று பால்சிங் சொல்லக்கேட்ட மோகனசிங் மனமகிழ்ந்து புன்னகைபூண்டு,

"பாலா! நீ வருந்துவையே என்று நினைத்துதான் உன் பொருட்டு நான் அவர்களுக்கு வாக்குக்கொடுக்கும்படி நேரிட்டது. எனக்கென்ன சந்தோஷம்? நான் ஏன் அவ்விதத் தொந்தரைக்கெல்லாம் ஆளாகவேண்டுமென்றிருந்தேன். நிற்க, நம்மை நன்கறியா அவர்கள் நம்மை மதியாவிடில் என்செய்வதென்று யோசித்தேனாயினும் உன்னுடைய முகக்குறிப்பால் உனக்கு அத்தியந்த பிரியமிருக்கின்றதெனத் தெரிந்து நான் ஏன் உன்னுடைய பிரியத்தைக் கொடுக்கவேண்டுமென நினைத்தே அவர்களுக்கு எனது மனச்சம்மதி தந்தேன்."

"சபையில் அக்கிராசனம் வகித்துப்பேசுவது மிகவும் புகழ்தற்குரிய காரியமே" என்றிவ்வாறு சிறிது நேரம் தன் இனிய பிதாவுடன் வார்த்தையாடிக்கொண்டிருந்த பாலன் திடீரென அச்சம்பாஷணையினின்றும் விலகித் தனக்கு ராணுவ வீரனாக ஓர் எண்ணம் உதித்திருப்பதாகவும் தன்னை அதற்கு ஏகும்படி விடைதர வேண்டுமென்றும் மன்றாடிய சொற்கள் மோகனசிங் காதினுள் நுழையவும், மோகனன் உடனே மூர்ச்சித்துக் கீழ் வீழ்ந்தான்.

அதுகண்ட பாலன், "அப்பா! அப்பா!! தங்களுக்கு நேரிட்டதென்ன? அம்மா! அப்பா திடீரென விழுந்து மூர்ச்சையாகினர்" என்று உரக்கக்கூவவே, பத்மா தன் வேலைகளைப் போட்டது போட்டபடியே விட்டு, "அப்பாவுக்கென்ன பாலா? மூர்ச்சையானார்களா? என்ன காரணம்?" என்று சொல்லிக்கொண்டே ஓடிவந்து தன் கணவனுக்கு வேண்டிய சிகிச்சைகள் செய்ய ஆரம்பித்தாள். அப்பொழுது, "அண்ணா! சங்கதி என்ன? தாங்கள் ஏன் அவ்விதம் சத்தமிட்டீர்கள்?" என்று ஆத்திரத்துடன் கேட்டுக்கொண்டே மனோன்மணியும் மோகனசிங் மூர்ச்சித்துக்கிடந்த இடத்திற்கு விரைந்து வந்து

மனதும் உடலும் பதறித் தன் அன்னையுடன் மோகனசிங்கிற்கு வேண்டிய உதவிகளைச்செய்து நின்றாள்.

“அம்மா! வேறொன்றும் நடக்கவில்லை, ‘அப்பா! நான் பட்டாளத்திற்குப் போகின்றேன். விடைதாருங்கள்’ என்று தான் அப்பாவைக் கேட்டேன். வேறொரு வார்த்தையும் உரைக்கவில்லை. உடனே அப்பா தன்னுணர்வற்றுக் கீழ் விழத்தான் கண்டேன்.” என்று மறுமொழிபகன்று மதியிழந்தவனாகி ஒன்றும் செய்யத் தோன்றாமல் மனத்திகிலடைந்து பரக்கப்பரக்க விழித்தான் பாலன்.

“என் செல்வமே! உன் மேல் யாதொரு குற்றமுமில்லை. உனதப்பாவுக்கெப்பொழுதும் பட்டாளத்தின் பேரில் பற்றில்லையாதலால் அவர்களுக்கு அச்சொல் கேட்க நேரின் நாராசத்தைக்காய்ச்சி செவியிலிடுவது போன்றதாகும். அதுவே அவர் பிரக்ஞையற்றதற்குக் காரணம். ஆகையால், பாலா! இனிமேலாகிலும் உனதப்பாவிடம் அதனைப்பற்றித் தூண்டாதே,” என்று மிகப்பரிவுடன் பகன்றாள் பத்மாவதி.

“அம்மா! தாங்கள் சொல்வது மிகவும் வேடிக்கையாகவன்றோ இருக்கின்றது. நல்ல சமாதானம் சொல்கின்றீர்களே! ஏனம்மா! யாருக்காவது ‘பட்டாளம்’ என்ற சொல் காதிற்பட்டவுடன் மூர்ச்சை வருமோ? இதை நானொரு நாளும் நம்பவே மாட்டேன். ‘சொல்வார் சொன்னாலும் கேட்பாருக்கு மதியெங்கே?’ என்ற பழஞ்சொற்போல் நீங்கள் தரும் இச்சொற்களை யானெப்படி நம்புகிறது? சிலவேளை அப்பா ஏதாவது கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டிருக்கவேண்டுமென்பதே எனது துணிபு. அவ்வித காரணமின்றி அவர்கள் திடீரெனக் கீழ் விழக்காரணமில்லை” என்று கூறினான் பாலன்.

"பாலா! என்ன பேசுகிக்கின்ருய். மடமடவெனப் பேசுகின்றையே. நான் சொல்வதை நம்பாது வேறு யார் சொல்வதை நம்பப்போகின்ருய். உன்னிடம் நான்தாஞ பொய்பேச வேண்டும்! நான் பொய்யுரைப்பேஞே பாலா? 'ராணுவ' மென்ற சொல்லே அவருக்கருவருப்புத் தரக்கூடிய சொல் என்று மறுபடியும் தெரிந்துகொள். அதனல் தான் அவருக்கு மயக்கமுண்டானது. ஆகையால், உனக்குக் கண்டிப்பாயுரைசெய்கின்றேன்: நீ இனிமேல் அவரிடம் இவ்விஷயத்தைப்பற்றிச் சம்பாஷித்தலாகாது."

"அப்படியானல் யான் இனி அவ்வார்த்தைகளேக் கனவிலும் முதலாய் கருதேன். 'கிணற்றுத் தவளேக்கேன் நாட்டுவளப்பம்' என்பதுபோல் எனக்கேன் அத்தொரட்டு! இனி யான் தங்களுத்தரவுபோல் நடந்து கொள்கின்றேனம்மா. முன் சொன்னதற்காக என்னே மன்னியுங்கள்." என்று தன் அன்னேயிடம் அறைந்து, பின் மூர்ச்சை தெளிந்துட்கார்ந்திருந்த மோகனசிங்கிடம் மறுபடியும் பேச ஆரம்பித்தான். முன்னர் தான் பட்டாளத்தைப்பற்றி; ஆனல் இப்போது அதுவல்ல. வேறெதைப்பற்றி? ராணுவத்தைப்பற்றி.

இவ்விதம் மறுமுறையும் சம்பாஷணே செய்ய ஆரம்பித்த தன் மைந்தனே நோக்கி அன்புடனும் ஆதரவுடனும் மிக இனிமையான தொனியில்

"பாலா! உனதெண்ணப்பிரகாரம் உன்னே ராணுவத்திற்கனுப்பிவைக்க எனக்கும் இஷ்டந்தான். ஆனல் இதுவல்ல காலமுனக்கு. நீயோ இன்னும் பத்தும் எட்டும் நிறம்பப் பெருத பாலன். ராணுவ உத்தியோகம் வகிக்கத்தகுந்தவர்கள் இருபத்தைந்து வயதுள்ள திடகாத்திர புருடர்களே யாவர். ஆதலால், வயதிருபத்தைந்தை நீயடையும் வரை நீதயவு செய்து என்னிடம் அதனேப்பற்றிக் கலவாதே." என்ருன்.

பாலன் தன் தந்தைக்கமைந்தவனாய் அச்சம்பாஷணையை நிறுத்திப் பின் தன்னை மறுநாள் வேட்டைக்காவது அழைத்தேகுமாறு மோகனசிங்கைப் பிரார்த்தித்தான். பால்சிங்கை வேட்டைக்கழைத்துப்போக மனமற்றவனாயினும் அவனது மனத்தைப் புண்படுத்தலாகாதென்றெண்ணிய மோகனசிங் மறுநாள் உதயத்தில் அருகிலிருக்கும் வனத்திற்கு அவனது வாஞ்சைப்படியே உடனழைத்துச் செல்வதாகச் சொல்லித் தன்னழகிய மனைவி பத்மாவுடனும் தன்னருங்குழந்தைகளுடனும் இராப்போஜனமுண்டு நித்திரை செய்யச் சென்றான்.

---

## 5-வது அத்தியாயம்
## மான் வேட்டை.

---

அயர்ந்து நித்திரை போயுமென்ன? 'தூண்டிற்காரனுக்கு மிதப்பு மேல் கண்' என்பதுபோல் வேட்டைமீதுள்ள அளவில்லா ஆசைப்பெருக்கத்தால் எப்பொழுது விடியுமோவென்றெதிர்பார்த்திருந்த பால்சிங் வழக்கம்போல் நித்திரை புரியாது யாவர்க்கு முன்னரே துயிலெழுந்து வேட்டைக்கு வேண்டிய ஏற்பாடுகள் யாவும் செய்து வைத்துக்கொண்டு லாயத்திற்குச்சென்று தனக்கும் தன் அப்பாவுக்கும் சேணத்துடன் குதிரை இரண்டையுங் கொண்டுவரும்படி தன் குதிரைக்காரனை எழுப்பி ஆக்ஞையிட்டபின் வீடு திரும்பி அதுவரை துயிலெழா மோகனசிங்கை, "அப்பா! அப்பா!! நேரமாயிற்றே. வேட்டைக்கு வேண்டிய யாவும் தயாரிலிருக்கின்றன. சீக்கிரம் எழுங்கள்" என்று தட்டி எழுப்பினான்.

தட்டி எழுப்பும் பால்சிங்கின் குரலோசையால் மோகனசிங்கும் மற்றையரும் தத்தம் படுக்கையினின்று மெழுந்தனர்.

மோகனசிங் அந்நேரத்தில் தந்த சுத்தி செய்துகொண்டு தன்
மைந்தனைப்போலவே தானும் வேட்டை உடையை யணிந்து
இடையில் உடைவாளொன்றும் உடலின் ஓர் பக்கத்தில்
தண்ணீர்ப் பாண்டமுங்கொண்டு தன் குதிரையின் மீதிலே
றிப் பால்சிங்குடன் புறப்பட்டான். மேல் திசையிலுள்ள
தோர் அடர்ந்த கானைநோக்கிப் புகலும், கதிரவனும் தன்
வாகனத்தின் மீதேறிக் கிரணங்களை விரித்து மண்ணை வலம்
வருதல் போன்றுக் கீழ்த்திசையில் காணப்பட்டான்.

வெகுநேரம் அவ்விருளடர்ந்த அடவியில் வேட்டைக்
காக அலைந்தனர். வெய்யோனுடைய கொடுமையோ சில
விடங்களிற் சகித்தற்பாற்றன்று. அவர்களிடம் உள்ள தண்
ணீர் யாவும் செலவாயின. தாகவிடாயால் அவர்கள் நாவோ
வரண்டன. காதடைத்தன. பசிக்களை மேலிட்டது. கண்
களோ பஞ்சடைத்தன. வேட்டையும் கிடைக்கவில்லை. ஏதா
வதோர் பிராணியையாவது வேட்டைக்கடையாளமாகக்
கொண்டு இல்லந்திரும்பாது வெறுங்கையாகவா போவதென்
றெண்ணிய மோகனசிங்கும் பால்சிங்கும் பேசவும் சக்தியற்
றிருந்தார்களாயினும் மன உறுதிகொண்டு இன்னும் பார்ப்
போமென்றெண்ணி வேட்டையை நாடி அலைந்தனர்.

இவ்வாறலைந்து அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்குந்
தருணத்தில் தற்செயலாய் ஓர் கொழுத்த மான் அவர்கள்
கண்களிற்பட்டது. எப்பொழுது வேட்டை கிட்டுமோவெனச்
சமயம் பார்த்திருந்த அவர்கள் மானைக்கண்டவுடன் என்ன
செய்திருப்பார்களென்றும், மானினுடைய கதி என்னவாகி
இருக்கலாமென்றும், இருவீரருக்கிடையில் அகப்பட்ட அம்
மான் எவ்விதம் தப்பியோடக் கூடுமென்றும் இதை வாசிக்கும்
நண்பர்களே யூகித்து எளிதிற்கண்டு கொள்ளலாம்.

என்றபோதிலும், மான் தன்னுயிரைத் தியாகம் செய்ய இச்சிக்குமா? ஒருபோது மிச்சியாது. ஆனதால் அதுவும் தகப்பன் மகன் ஆகிய இருவீரர்களுடைய தைரியத்தையும், வலுவையும், வல்லமையையும் பரீட்சித்தறிய விருப்புற்றது போல் இவர்களைக் கண்டவுடன் அதிவிசையாயோடத் தலைப் பட்டது. ஆனால் சற்று நேரத்தில் பால்சிங்கின் குண்டடி பட்ட அம்மான் அக்ஷணத்திலேயே நிலைதவறிக் கீழ் விழுந் திறந்தது. உயிர் துறந்த அம்மானைப் பாலன் தூக்கித் தன் பரிதிமீது வைத்துக்கொண்டனன். மானைக்காணு முன்னரே மிகக்களைப்புடன் சம்பாஷிக்கவும் சக்தியற்றிருந்த அவர்கள் மான் வேட்டையாடி முடியவும் அதிகக்களைப்புற்றனர். அவர் களிருவரும் உயிரற்ற ஸ்திதியிலுள்ளவர்களாகித் தம் குதி ரைகளை மெல்ல மெல்லச் செலுத்துவாராயினர். அச்சமயம் திடீரென்று ஓர் சத்தம் இவர்கள் காதிற்கு எட்டுவதுபோல் தென்பட்டது. பாலனும் மோகனசிங்கும் அங்குமிங்கும் நோக்கினர். எத்திக்கிலிருந்து அவ்வரவம் ஒலிக்கின்றதெனக் கவனித்தனர். இன்னபக்கமிருந்து தான் வருகின்றதென்று சரியாக அறியக்கூடவில்லை. அதன் பின் மோகனசிங் தன் கையிலிருந்த ஓர்விதக் கருவியினுதவியால் ஓர் சத்தங்கொடுக் தான். அச்சத்தத்திற்குப் பதில் சத்தமுங் கேட்டபாடில்லை. மேலும் மேலும் மோகனசிங் ஊதினான். கொஞ்சநேரங் கழிந்து ஓர் பதிற்சத்தம் வருவதாகத் தெரிந்தது. சிறிது தாழ்த்தலும் குதிரையின் காலடிச்சத்தமும் கேட்டது. மோக னசிங் தன் புத்திரனுடன் பதில் தொனியின் திசையை நோக்கித் தன் அசுவத்தைச் செலுத்த, மற்றையவனும் தனக் கெட்டிய அரவத்தை நோக்கியே தன் பரியையும் செலுத்த,

நேரஞ் சிறிது கழிந்து அம்மூன்று குதிரை வீரர்களும் சந்திக்க நேர்ந்தது தான் தாமதம், உடனே மோகனசிங் ஒன்றையுங்கவனியாது தன் குதிரையினின்றுங் கீழே சட்டெனக் குதித்து ஓடி மாற்றானை அவனது கன்னத்தில் அறைந்தான் ஓர் பலமான அறை. அவ்வறை தாங்கா அந்நியன் ஆகாயத்தினின்றும் நக்ஷத்திரங்கள் எரிந்து விழுதல் போன்று தன் அசுவத்தினின்றும் சுழன்று கீழ் வீழ்ந்தான். மீண்டும் தைரியங் கொண்டு எழுந்தான். தன் உடைவாளையுருவி மோகனசிங்கை எதிர்த்தான். மாற்றானொருவன் தன் அருமைத்தந்தையை எதிர்க்கத் தந்தையருகில நிற்கும் மைந்தன், அதுவும் ஓர் வாலிப வீரன் 'நடப்பது யாதென அறிவோம்' என எண்ணங் கொண்டு வாளாவிருப்பானா? புதிதாய் வந்த குதிரை வீரன் தன்னுடைய வாளையுருவித் தன் தந்தையை எதிர்க்கக்கண்ட பால்சிங் அந்த க்ஷணமே அவனைத் தரையில் வீசித் தகுந்த சன்மானமளித்து, அவனது சிரத்தைத் துணிக்கத் தன் உடைவாளையுருவினது கண்ட மோகனசிங், "பாலா! வேண்டாம்; அவனுக்கு அதுவே போதும். நன்றாகக் கற்றுக்கொண்டான் நீ போதித்த கல்வியை. வாளை உறையிற்போடு. இத்தடவை அவனை மன்னித்தனுப்பலாம்" என்று பாலனுக்குரைத்துப் பின் எதிரியை நோக்கி, "அடே! பதரே! என்ன நினைத்து இவ்விடம் வந்தாய்? 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்' என்ற முதுரையை மறந்தையோ? உன்னை உயிர் வதை செய்வதனாற் பாவமொன்று மேற்படாதென்கினும், உன்னை இப்பொழுது அதற்கு மாறாக மன்னித்தேன். இனியொருதரம் உனது நிழல் முதலாய் என் கண்ணில் புலப்படாவண்ணம் நடந்துகொள். நான் இப்பொழுது உனக்கெடுத்துச்சொல்லும் வார்த்தைகளைக் கவனியாது இவ்வழிகளில் நீ மறுபடியும் தென்படுவையாகில், உனதுயிர் நமனுலகை நாடும்.

இது திண்ணமென்பதை இனி நீ நின் மனதிருத்திக்கொண்டு ஓட்டா நாயே'' என்று அதட்டினன்.

அவ்வாறே அவனும் யாதும் பதிலுரையாது 'நல்ல வேளையாற் செய்த புண்ணியமோ அவ்விளைஞன் கைக்குத் தப்பினேனும்' என்றும், 'நீல கப்பியன தம்பிரான் புண்ணியம்' என்றும் நினைத்தவனாயினும், அகங்காரத்தால் தன் மீசையை அவர்களுக்கு முன் திருகிக்கொண்டே எங்கே இன்னும் அவர்கள் தன்னைத் தொடர்வார்களோவென்றஞ்சிப் பயந்து அவசரமாகப் பிடித்தான் ஓட்டம்.

"அப்பா! எதிரே வந்தவனைத் தாங்கள் ஒரு வார்த்தையும் பேசாது ஓடி விரைந்தடைந்ததும், அவனையுற்ற மரம் போல் அவ்விடத்தே தாங்காது விழ்ந்ததும், மறுபடி அவனை மூர்க்கத் தன் உடைவாளையுருவித் தங்களையவன் எதிர்த்ததும், எதிர்த்தவனை யான் என்து வாளை வீசி வெட்டத்துணிந்ததைத் தாங்கள் 'வேண்டாம்' எனத்தடுத்ததும், 'மன்னித்தேன். இவ்வழி இனி வரக்கண்டால், உன துயிர் உன்னுடலை விட்டு நீங்கும்' என்றவனிடம் உரைத்தாகிய இவ்வார்த்தையின் தாற்பரியம் எனக்கொன்றும் விளங்கவில்லையே. இவைகளின் கருத்தென்னப்பா?" என்று இச்சம்பவத்தின் விபரமறியாப் பால்சிங் தன் தகப்பனிடம் வினவினன்.

மோகனசிங், "பாலா! நான் சொன்னதில் என்ன அர்த்தம் விளங்கவேண்டியிருக்கிறது. விளங்கக்கூடாத வார்த்தைகள் நான் சொல்லவில்லையே. உனக்கென் அக்கவலை. வீண் வார்த்தையாட நேரமில்லை. இன்று காலை மணிக்குச் சபை கூடுமிடத்திற்குப் போகவேண்டுமென்பதை முற்றிலும் மறந்தனையோ? குதிரையை வேகமாய் நடத்து. தாமதியாதே" எனவும், சரியான சமாதானத்தைக் கொள்ளா மனத்

துடன் பாலனும் சபைகூடும் நேரம் நெருங்கிவிட்டதென்று ஆத்திரப்பட்டு, இச்சங்கதிகளைக்கேட்டுத் தேற நேரம் அகப்படாமல் போகாவென்னும் நோக்கத்துடன் தந்தை சொல்லைப் சாந்தப்பட்டுத் தன் பரியை விரைந்து போகனசிங் அசுவத்துடன் செலுத்திச்செல்வானாயினன்.

சுமார் நான்கு மணிக்கெல்லாம் வீடடைந்தார்கள். இன்னும் அரைமணி நேரந்தானிருக்கின்றது. அதற்குள் அவர்கள் முந்தின தினம் நால்வர் வந்தழைத்த இடத்திற்குச் செல்லவேண்டியவர்கள். ஆதலால் பாலன் தான் கொண்டு வந்த மானைப் பத்மாவிடம் வைத்துவிட்டுத் தன் தந்தையுடன் ஸ்நானஅறைக்குட் சென்றான். அவ்விடமிருவரும் நன்றாகத் தேகசுத்தி செய்துகொண்டபின், அவர்களுக்கென்று தயாரித்து வைக்கப்பட்ட போஜனமருந்தி, நல்லுடை தரித்து சபைகூடும் அடுத்த வீதிக்குச் சென்றனர்.

அவ்விடமுள்ளோர் அனைவரும் அக்கிராசனம் வகிக்கப் புகும் போகனசிங்கின் வருகையைக் கண்டவுடன் சூரியன் வருகையால் தாமரை மலர்வது போலும், சந்திரன் வரவைக் காணும் அல்லிகள் கோஷிப்பது போலும் புளகாங்கிதர்களாகி போகனசிங்கை நல்வரவேற்று, அலங்கரித்து வைக்கப்பட்ட ஓர் ஆசனத்தமரும்படி செய்தனர். பால்சிங்கோ தனது பிதாவினருகிலேயே நின்றுகொண்டிருந்தான்.

ஓர் சபைகூடுமிடத்தில் என்னென்ன நடைபெறவேண்டியிருக்குமோ அவைகள் யாவும் இனிது நடந்தேறின. பின் முறைப்படி அக்கிராசனபதி எழுந்து சபை கலைவதற்கு முன்னால் ஓர் சிறு உபந்யாசம் செய்யத் தலைப்பட்டவராகி எழுந்து, "கனவான்களே!" என்றுரைத்தனரோ அல்லரோ, க்ஷணமே, "அடே! கோழைப்பயலே!" என்று மற்றோர்

அரவம் உண்டாயிற்று. அச்சப்தத்தைக்கேட்ட சபையார் அனைவரும் 'என்ன இது?' என்று அங்குமிங்கும், எத்திக்கிலிருந்து வந்ததென்றறியவெண்ணிப் பார்த்தனர். அக்கிராசனபதியையும் நோக்கினர். கேவலமடைந்த மோகனசிங் இடியொலி கேட்ட அரவம்போல் அவ்வார்த்தைகளால் மனந்தடுமாறி மூர்ச்சித்துக் கீழே விழுவானானான்.

தன்னருந்தந்தை அவ்விதம் மூர்ச்சையானதைக்கண்ட பால்சிங் செய்ததென்ன? தந்தைக்கு வேண்டிய சிகிச்சை செய்தனனா? இல்லை. உடனே பாணம் வில்லைவிட்டுச் செல்வதேபோல் அவ்வளவு அதிகமாய் வெளிச்சென்று அவ்விதம் ஆர்ப்பரித்துச்சென்ற அம்மனிதனையும் ஓர் நொடிப்பொழுதிலடையவே, அம்மனிதன் வெகுண்டு ஓட ஆரம்பித்தான். உடனே பால்சிங் அவனைப்பிடித்து நிலத்திலழுத்து கணக்கு வழக்கற்றவிதமாய் அடி உதை குட்டு குத்து என்னும் இவைகளாற் சன்மானித்து, "அடே! யாரென்று நினைத்து என் தந்தையை அவ்விதம் தூற்றினாய்? பயலே! இனி யொருமுறை நீ இவ்விதம் செய்யத் துணிவையாகில் உன்னுடைய உயிர் உனதன்று. கூற்றுவனுடையதே யாகும். நன்றாய்க் கவனித்து நடந்துகொள். இப்பொழுது உன்னிஷ்டப்படியே மன்னிப்பளிக்கின்றேன். ஆனால் மறுமுறை......நீயே யோசித்துக்கொள்" என்று சொல்லி இன்னும் நன்றாகப் புடைத்து ஓட்டிவிட்டுத் தன் தந்தை மூர்ச்சையாகிக்கிடந்த இடத்தை நாடி மிக்க வேகமாக வோடிவந்தனன்.

அவ்விடத்திலோ ஒருவரையுங் காணோம். அனைவரும் அக்கிராசனபதி மூர்ச்சையானதும் யாது செய்வதென்றறியாது கலைந்து தத்தமில்லிடம் சென்றனரெனவறிந்தான். "தந்தையின் கதி என்னவானதோ? அவருக்கு வேண்டிய

சிகிச்சை யாராவது, அவரைக் கவனித்துச் செய்திருப்பார்களா? ஒன்றுந்தெரியவில்லையே! அவ்விடம் சென்று பார்ப்போம்......இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது. அந்தோ! என் னருமைப்பிதாவைக் காணேனே! என்ன பாடு பட்டனரோ! அறியக்கூடவில்லையே! ஏ! ஜெகதீசா! என் செய்வேன்? எங்கே சென்றிருப்பார்? ஒருவேளை மூர்ச்சை தெளிந்து இருப்பிடம் சென்றிருப்பரோ? அங்காவது சென்றறிவோம்." என்று பல வாறுகச்சிந்தித்து ஓடோடியும் வீடடைந்து ஆங்கு எத்திக்கிலும் தேடினன். ஓடினன். மோகனசிங்கைக்காணவில்லை. என் செய்வான்? "கருணாகரா! என்னித முய்வேன்? இதென்ன காலம்! என் தந்தையை எங்குங் காணேனே! இது யார் செய்த சூதோ! ஒருவேளை அப்பா சென்றிருக்குமிடத்தை அம்மாளறிவளோ? சென்று வினவலாம்." என்று மனங் கலங்கிய பாலன் தன் அன்னை பத்மாவிடம் வந்து அன்னவளுக்குச் சங்கதியொன்றுமறியாதிருந்த பரபரப்புடன், "அம்மா! இவ்விடம் அப்பா வந்தார்களா? சீக்கிரம் சொல்லுங்களம்மா; மிகவும் அவசரம்" என்றனன்.

"பாலா! சங்கதி என்ன? ஒரு நாளும் இம்மாதிரியான பரபரப்புனக்கு உண்டானதில்லையே. இன்றென்ன விசேடம்? என்ன அவசரமாய்த் தேடுகிறாயப்பா.?"

"அம்மா! ஒருவித அவசரமுமில்லை. அப்பா என்னைப் பிரிந்து எங்குச்சென்றனரென்றறியேன். அவர்களை யான் பார்க்கவேண்டியிருக்கிறது. எங்கேயம்மா சென்றார்கள்?"

"மைந்தன்மணி! உனக்காவது அப்பாவைப்பற்றின சமாச்சாரம் தெரியுமா? இவ்விடம் வந்தார்களா? தங்காய்! அப்பா எங்குச்சென்றார்களென்ச் சீக்கிரத்திலுரை"

“அண்ணா! யானிப்பொழுதுதான் தோட்டத்தினின்றும் வருகின்றேன். அப்பாவைப்பற்றின சமாச்சாரம் எனக்கொன்றுமே தெரியாது. “ஏனம்மா! அப்பா எங்கே? உங்களுக்குத் தெரிந்தால் அண்ணாவிற்குச் சொல்கிறதுதானே! ஏதோ அவசரமாய்க் கேட்கின்றாப்போலிருக்கின்றதே, எதற்காக!

“மனோன்மணி! உன் அண்ணா எதற்காக இவ்வளவு அவசரமாய்க்கேட்கின்றானென விளங்கவில்லை. உண்மையுரையேனென்கின்றான். இஷ்டமற்ற அவனை நாம் ஏன் கஷ்டப்படுத்தல் வேண்டுமென்றுதான் எனக்கொன்றுந் தெரியாதது போல் நான் பேசாமலிருக்கின்றேன்.”

“அப்பா! பாலா! என்ன சங்கதி? என்னிடம் அவ்வந்தரங்கமான சங்கதியைப் பகர்வதாகாதோ?”

“அதெல்லாம் பின்பு சொல்கின்றேனம்மா! அவசரப் படாதீர்கள்; தங்களுக்குற்ற துரையாது போவேனோ? ஆனால் இது சமமல்ல. தாமதமின்றி அப்பா வந்த விபரத்தைச் சொல்லுங்கள்” எனலும், பத்மாவதி மோகனசிங் அவ்விடம் சற்று நேரத்திற்கு முன்பு தான் வந்து, உடையைக் கழற்றி ஆணியில் மாட்டி வேறோர் உடைதரித்து யாதொன்றும் பேசாமல், அக்குன்றை நோக்கிப் போவதாக, அங்குத் தெரிந்த ஓர் குன்றைச் சுட்டிக் காட்டிப் பதிலுரைத்தாள்.

பத்மா இவ்வார்த்தைகளை வெளியிட்டது தான் தாமதம் பதிலொன்று முரையாது, ஒரு கணப்பொழுதில் வாயு வேக மனோவேகமாக ஓடி அக்குன்றையடைந்தான். அக்குன்றின் மருங்கெல்லாம் தன் தகப்பனை வெகு ஆவலுடன்

நோக்கினன். குன்றின் புறமெங்கும் ஒருவருடைய காலடிச் சுவடுகூடத் தென்படாது தயங்கினன். 'தந்தை பின்னர் எங்குச்சென்றிருப்பர்? ஒருவேளை மலைச்சிகரத்திற்குச் சென்றிருப்பரோ? அங்கும் சென்று பார்ப்போம்.' என்றெண்ணிப் பாலன் அச்சிறு மலையின் சிகரத்தையடைய ஏதாவது ஒரு வழி தென்படுகின்றதாவென்றறிய அம்மலையைச்சுற்றிப்பார்த்துக்கொண்டே வந்தான். ஏறுவதற்கான வழியைக் கண்டிலன். அங்குமிங்கும் ஓடினான். தாய்ப்பசுவை விட்டகன்ற கன்றுபோலுழன்றான். யாதொரு வழியுந் தென்படவில்லை. என் செய்வான்? ஏங்கினான். கண்ணீர் விட்டான். யாது செய்வதென்றறியாது விழித்தான். பின் தெய்வாதீனத்தால் மலையுச்சிக்குப் போகும் ஓர் வழியைக்கண்டான். கண்டுமென்? அவ்வழியைத் தொடர்ந்து மலைச்சிகரத்தை யடைவதோ பகிரதப்பிரயத்தனமென எண்ணினான். வழியோ செங்குத்தான வழி; என்றபோதிலும் பாலன் தன்னுயிரை மதிப்பானோ? ஏறத்தொடங்கினான். பாதித்தூரம் செல்வான். கீழே வழுக்கி விழுவான். மறுபடியும் முயல்வான். அக்ஷணமே உருளுவான். 'என்ன செய்வேன். ஏறவுங் கடினமாகவிருக்கிறதே' என்று துக்கிப்பான். 'என்னவானாலும் சரி. என்னுயிர் போயினும் பரவாயில்லை. எவ்விதத்திலும் உயரஏறியே தீர்வேன்' எனத் திடங்கொள்வான். அவ்வண்ணமே சிகரத்தையடைய வழி பார்ப்பான். முடியாமற் கீழே குதிப்பான். பின்னர்த் தன் முழுக்கவனத்தையுஞ் செலுத்தித் தெய்வானுக்ரகத்தால் மிகக் கஷ்டத்துடன் மலைச்சிகரத்தை யடைந்தான். எங்கும் ஓடினான். அலைந்தான். தந்தையைக் கண்டிலன். 'என்செய்வேனினி?' என்று மயங்குவான். திக்குகள் தோறும் தன் கண்களைச் செலுத்துவான். ஒருவரையுங் காணாது பிரலாபிப்பானாகியிருக்கும் தருவாயில் வடகோடியில் ஓர் ஆடவனுருத்

தெரிந்ததுகண்ட பால்சிங் தீவிரமாக அவ்வுருவை நோக்கி ஓடினான். அக்கணம் அம்மனிதன் தன்னிரு கரங்களையுமுயர்த்திக் கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டு நிற்கக்கண்டான். அவனது அருகில் சென்று கீழ்நோக்கிப் பூமியைப் பார்த்தான். கிடுகிடு பாதாளத்திலிருந்தது. ஒருவன் சாதாரணத்தில் சற்று உயர்ந்த ஸ்தலத்திலிருந்து தவறுவானாகில், சமயத்தில் அவனது என்புகள் முதலாய் மருந்திற்குங் கிடைப்பதருமையாகி விடுகின்றதென்றால், அவ்விதம் எல்லை பிரார்த்தனையிலிருக்கும் அம்மனிதன் மலைச்சிகரத்தினின்றும் தவறி விழுவானானால் அவனுடைய கதி என்னவாகும்?

## 6-வது அத்தியாயம்.

## தந்தையைக்காத்த தனயன்.

தன் தந்தை இவ்வித ஸ்திதியிலிருக்கக்கண்ட பால்சிங், பதைபதைக்க ஓடிவந்து யாதொரு அரவமுமின்றி மோகனசிங் பின் சென்று அவனைக் கட்டிப்பிடித்து அவனிருந்த அந்தரநிலையினின்றும் திடீரெனப் பின்னாலிழுத்தான். தான் இழுபட்டதை உணர்ந்த மோகனசிங் திக்பிரமை கொண்டு தன்னை இழுத்தவன் யாவனெனச் சட்டெனப் பின் நோக்கலும், தன்னருமை மைந்தனே என அறிந்தான். அக்ஷணமே, "பாலா! என்ன காரியம் பண்ணினாய்?" என்ற இவ்வார்த்தைகளையுரைத்து மயக்கமேலிட்டவனாய் அவன் மார்மீது சாய்ந்தான்.

மோகனசிங் மூர்ச்சித்ததுகண்ட வீரதீர பால்சிங், சற்றும் மனந்தளராது தன் தந்தையைத்தூக்கித் தன் தோளின் மீதேற்றித் தான் ஒருவனே சிகரத்தையடைய வெகு கஷ்டத்தையடைந்த பாலன், இப்பொழுது மத்தியதசையடைந்த தன் தந்தையுடன் கீழிறங்குவது அதிலும் பன்மடங்கு கஷ்டமல்லவா? தன் தந்தையைக் கவனிப்பானா; தனக்கு நேரிடும்

தற்போதுள்ள நிலைமையையும் நினைத்து நினைத்துப் பெருமூச் செறிந்துகொண்டே துயில ஆரம்பித்தான்.

மறுநாட் காலை உண்டுகொண்டு யாவரும் உல்லாசமாயிருக்கும் பொழுது பால்சிங், தன் தந்தையை நோக்கி, "அப்பா! உடலுக்கெப்படியிருக்கிறது?" என்று கேட்டான்.

மோகனசிங் "உடலுக்கென்ன? ஒன்றுமில்லை. முன் போலத் தானிருக்கின்றது"

"அப்பா! யாமொன்று கேட்க நினைக்கின்றேன். தாங்கள் அதனை எனக்கின்னதென்று தெளிவாய் ஓதுவீர்களா?"

"பாலா! எனக்குத் தெரிந்தால் சொல்லமாட்டேனா? சொல்கின்றேன். என்ன கேட்கப்போகின்றாய்?"

"தங்களுக்குத் தெரிந்த விஷயமே அது. ஆகலால் தாங்கள் கட்டாயம் சொல்வீர்களா?"

"என்ன பாலா! திரும்பத் திரும்ப அதனையே பேசிக் கொண்டிருக்கின்றாய். என்ன விஷயம்; அவ்விஷயத்தைச் சொல்; சொல்லக்கூடுமானால்; சொல்கின்றேன்."

"என்ன விஷயத்தைச் சொல்லப் போகின்றேன்? தங்களுக்குத்தெரியாத விஷயத்தையா?" என்று சொல்லிப் பின்னர் "அப்பா! நேற்று நடந்துள்ள சங்கதிகளின் கருத்தும், அதற்கு முந்தின நாள் நடந்துள்ள கார்யங்களின் அர்த்தமும் எனக்கு விளங்கவில்லை. அவைகளின் தாற்பரியம் என்னவாகுமப்பா?" என்று விளையாட்டாகக் கேட்கலுற்றான் பாலன்.

"பாலா! அவைகளில் என்ன அர்த்தமிருக்கின்றது! நீ வேறேதோ நினைக்கின்றாய்போலிருக்கின்றதே? அவ்விதம் அவைகளில் விளங்கவேண்டிய விஷயம் ஒன்றுமில்லை. நீ முன்னொருநாள் இவ்விதமே கேட்டனை. இனிமேல் அவ்விதம் நீ

கேட்காதே" என்று 'தற்போது நாம் ஏன் நம் மைந்தனுக்கு நம் அந்தரங்கத்தை யுரைக்கவேண்டும்?' என்று நினைத்துக் கொண்டே மோகனசிங் சொல்லலுற்றான்.

இவ்வசனங்களைச் செவியேற்ற பால்சிங் உடனே தன் முகம் வேறுபட மிகுதியும் வருத்தத்திலாழ்ந்து கூறுவான். "அப்பா! தாங்கள் சொல்வது கிஞ்சித்தும் நம்புதற்கிடமில்லை என்று திட்டமாய்ச் சொல்வேன். தாங்கள் அவ்விஷயங்களை 'என் நம் மைந்தனுக்குத் தற்போது அறிவித்தல் வேண்டு' மென எண்ணியே இவ்விதம் மறைக்கின்றீர்கள். அவைகளின் இரகசியத்தை அறியாத யான் 'ஓர் குருடன் வழிதவறித் திரிவதே போல்' மயங்குகின்றேன். ஏதோ மர்மங்களிருக்கின்றன. எந்தையே எத்தனை நாட்களுக்குத் தாங்கள் அவைகளை ஒளித்து வைக்கப்போகின்றீர்கள்? தங்கள் கருத்தை எனக் கறிவியுங்கள். அப்பா! மறைக்கவேண்டாம்."

"அப்பா! இன்னும் அறிவிக்கின்றேன். தாங்கள் இன்னும் எனக்கறிவிக்கத் தங்களுக்கு மனமில்லை என்றுரைப்பீர்களாகில் பானுங்கள் தோன்றலாகவே மாட்டேனென்பது திண்ணம்" என்று தன்னுடைவாளை யுருவிக் கையிற்கொண்டு மறுபடியும் அறைவான்: "அப்பா! இன்று, அதுவும் இக்கணமே தாங்கள் தங்கள் மனத்திலுள்ள சங்கதிகளையும், அவைகளால் தங்களுக்கு நேரும் மனக்கலக்கத்தையும், எனக்கறிவியாது போனால், யானிவ்வுலகிலிருப்பது பயனற்றதாகும். உடனே இவ்வாளால் எனது சிரத்தைத் துணித்துக்கொள்வேன். எந்தையே! இது சத்தியம்."

"பாலா! 'அவசரப்படேல்' என்ற ஔவை சொல்லை மறந்தனையோ? என்றுரைசெய்து "என்ன செய்யலாம்; பாலன் சொல்கின்றவைகளைக் கவனித்தால் ஒருவேளை தற்கொலை

செய்து கொள்வான்போல் தோற்றுகிறது. ரகஸ்யத்தை வெளி யிடினும் அதிகக் கவலைக்குள்ளாவான். மறைப்பினும் மோசத் திற்கிடமாகும். ஆதலால் உள்ள துரைத்தலே நலம்" எனத் தேறித் தன் மகனிடம் மோகனசிங் உரைக்கலானான்: "அப்ப னே! பாலா! என்னிடமடங்கிய ரகஸ்யம் யாவும் உனக்குத் தெரியவேண்டியதில்லை என்று நினைக்கினும், என் கண்ணே! உன்னிடமுரையாது வேறு யாரிடம் உரைக்கப்போகின்றேன்? உன் மனத்தை அறுக்கக்கூடிய அக்கார்யங்களை உன்னிடம் சொல்ல என் நாவெழுகின்றதில்லையே என்றபோதிலும் இன் றல்லாது என்றாவதோர் நாள் நானுனக்குச் சொல்லியே தீரல் வேண்டிவரும். இப்பொழுது உனக்கவைகளின் கருத்தைப் பகராவிடினும் என்றாவதோர் நாள் அவைகள் உன் காதுக் கெட்டியே தீரும். ஆதலால் அவ்வந்தரங்கத்தை இப்பொழு துனக்கெடுத்துரைப்பது நலமென்றுதான் யோசிக்கின்றேன். ஆகையால், பாலா! கவனமாய்க்கேட்டு வா.

"கீர்த்திமிக்கோங்கும் சேர, சோழ, பாண்டிய மன்னர் களில் தற்போது சீர்பெற்று விளங்கும் சோழநாட்டதிபரும், வில்லில் விஜயனை நிகர்ப்பாரும், தான் நின்று சேரர்கட்கும் பாண்டியர்கட்கும் எதிராக நடாத்திய கொடும் போர்களில் வெற்றியேயன்றித்தோல்வியே கண்டறியாக்காரணத்தால் பல அரசர்களால் அவரது புஜபல பராக்ரமம் மெச்சப்பட்டு அளிக் கப்பட்டுள்ள 'சிங்கம்' என்ற பெயரைக்கொண்டுள்ளவரு மான வில்லியசிங் மன்னருக்குப் புத்திரனாயுதித்தேன் இப் பாவியாகிய நான். கௌரவத்திற்காக அழைக்கப்பட்டுள்ள அச் சிங்கமென்ற பெயர் இப்பொழுது உலக வழக்கத்தில் 'சிங்' என்றே அழைக்கப்படுகின்றது"

"பாலா! நான் பிறந்த இரண்டாமாண்டில் உயிர் துறந் தனள் என் அன்னை. பின்னர் அவளிறந்த துக்கத்தைச் சகி

யாக எனது பிதா அதனை மாற்றுவதற்கு வடதேசம் சென்று திரும்பும் வழியில், நற்குண நற்செய்கைகள் ஒருங்கே அமையப்பெற்றவளும், அழகே அவதாரமென்னும்படி அவ்வளவு சௌந்தர்யமுள்ளவளுமான பீமாட ராஜனின் புத்திரி யொருவளை மணந்து சோழநாடடைந்தார். அக்காரிகை என்னை மிக்க அன்புடன் தான் பரிபாலிக்கலானாள். அந்நங்கையின் வயிற்றில் அமரசிங் என்னும் ஓர் ஆண் மகவும், ருக்மணி என்ற ஓர் பெண்ணும் பிறந்தனர். அக்குழவிகள் நான்கு வயதடையா முன்னரே என் தாய் சென்றவிடத்திற்கு என் சிற்றன்னையும் சென்றுவிட்டனள்.

“ஆனால் நாங்கள் மூவரும் ஒரு தாய் வயிற்றுப்பிள்ளைகளைப்போலவே வளர்க்கப்பட்டோம். அதற்கிணங்கவே, அநேக நாட்கள் வரை நாங்கள் மூவரும் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளெனவே நினைத்திருந்த வாஞ்சையுடன் ஒருவரை யொருவர் நேசித்து வந்தோம். எனக்கு வயது பதினெட்டானபின் தான் என்னைப் பாதுகாத்துவந்த செவிலித் தாயால் நான் முதற்றாரத்தின் மகனென்றும், அமரசிங்கும் ருக்மணியும், மற்றோர் தாரத்தின் மக்களென்றும் அறிந்தேன். அப்பொழுதும் எப்பொழுதும் போலவே ஒரு தாயின்ற மக்களைப்போல் எங்களுக்குள் யாதொரு மாறுபாடின்றி வளர்ந்து வந்தோம். எனக்கு வயதிருபதானதும் முறைப்படி ராணுவத்திற் சேர்ந்து சேனைபத்யம் புரியலானேன். தம்பி அமரசிங்கும் என்னுடன் ராணுவத்தில் தானிருந்து வந்தான். எதோ தெய்வாதீனமாய் நான் சென்று சமர்புரிந்த இடங்களிலெல்லாம் வெற்றியே கிடைத்து வந்ததனால் என்னுடைய பேர் எங்கும் நன்கு மதிக்கப்பட்டு வந்தது.”

“இங்ஙனமிருக்க ஓர் சமயம் பாண்டியன் சைனியங்கட்கும் நம் சோழர்கட்கும் போர் ஒன்று நடந்த காலை என்

சேனாபத்யத்திலுள்ள சேனையுடன் நானே சென்று அவ்வம ரைத் தளகர்த்தர் சொற்படி நடத்தலானேன். இருசேனைகளும் ஸ்ரீரங்கத்திற் பொருதின. சண்டையோ நெருப்புப் பொறி பறக்க அவ்வளவு மும்முரமாய் நடந்தது. எங்குப் பார்த்தாலும் இரத்த வெள்ளமும் பிணக்காடுமே தோன்றின. நம் வீரர்கள் பாண்டியர்கள் மேலுள்ள கொடும் பகையால் வெறிபிடித்தவர்களாகி வீச்சுக்காயிரமாகக் கொலைத்து அவ்வளவு கடுமையாய் யுத்தம் செய்யும் தருணத்தில், "அண்ணா! அண்ணா!! அகப்பட்டுக்கொண்டேன். ஓடிவாருங்கள். தாமதித்தால் மடிவேன்" என்று எனது சகோதரனாகிய அமரசிங்கின் அபயக்குரல் என் காதிற்பட்டது."

"பாலா! என் மனம் சகிக்குமா? என்னுயிரை மதிப்பேனா? எனது சகோதரன் அமரசிங்கின் குரலென்று நான் நன்றாயறிந்தும் வறிதே அவனுக்குதவி புரியாது இருப்பேனோ? அச்சத்தத்தைக் கேட்ட அக்கணமே சேனையை நடத்திக் கொண்டிருந்த இடத்தினின்றும் பின் வந்து எவ்விடம் அமரசிங் நிற்கின்றானெனப் பார்த்தேன். என்னுடைய சைன்யத்திற்குப் பின்புறம் எவ்விதமோ நூற்றுக்கணக்கான பகைவர்கட்கு முன்னிலையில் அகப்பட்டுக்கொண்டு சிறகற்ற பறவைபோல் விழித்து நின்ற அமரசிங்குடன், அமரசிங் வேலைக்காரனாகிய பாப்ஜானும், எனது ஆப்த நண்பராகிய குலோத்துங்கரும் நின்று யுத்தஞ்செய்து கொண்டிருக்கக்கண்டேன். இம்மூவருடைய உயிரைக்காத்தற் பொருட்டு முன்னின்று சண்டைசெய்து கொண்டிருந்த நம் நாட்டு வீரர் பலரைக்கொணர்ந்து இவர்களுடன் பொருதினேன். எனது வீரர்களுடன் கலக்கப் பயங்கொண்டு அவர்களனைவரும் அமரசிங், பாப்ஜான், குலோத்துங்கர் ஆகிய இவர்களை விட்டு விட்டு எடுத்தனர் ஓட்டம். நான் என் முழுக்கவனத்தையும் என் சகோ

தரன் உயிரைக்காத்தற் பொருட்டுச் செலுத்தினேனாதலால், நானின்று சைன்யத்தை நடத்தின இடத்தில் சரியான வீர னொருவன் நின்று நடத்தாததால் எனது வீரர்கள் சின்ன பின்னமாகிப் பாண்டியன் சைன்யத்திற்கு முன் ஓட ஆரம் பித்தனர். அதுகண்ட நான் உடனே அவ்வீரர்களை நிறுத்தி, ஒன்று சேர்த்து மறுபடியும் யுத்தத்தை ஆரம்பிக்கவே, பாண் டியன் சேனை ஒன்றும் செய்யமுடியாது தயங்கிச் சமாதானம் வேண்டி நின்றது. நானும் என்னுடைய மனிதர்கட்குற்ற களைப்பினால் இனி அவர்களைக் கஷ்டப்படுத்தல் கூடாதென்று அவர்கள் கோரியவாறே சமாதானத்திற்கு ஒப்புக்கொண்டு உடன்படிக்கையில் கையெழுத்திட்டு எங்கள் கூடாரங்களுக் குத்திரும்பவும் நம் சைன்யத்துடன் வரலானேன்.”

“ஆகிலுமென்; துஷ்டர்கள் பலரால் நான் குற்றவாளி யெனச்சொல்லக்கேட்ட தளகர்த்தர் என்னைப் பின் கட்டாய்க் கட்டிக்கொண்டு வரச்சொல்லித் திட்டஞ்செய்ய, வீரர்களில் மூவர் என்னை அவ்விதமே தளகர்த்தர் முன்னிலையில் நடத் திக்கொண்டுபோய் நிறுத்தினார்கள்.”

“அப்பா! தங்களைப் பின்கட்டாகவா கட்டி அப்பாதகன் சொல்லிற்கிணங்க அம்மூட்டாள் வீரர்கள் கொண்டு சென்ற னர்? தாங்கள் செய்துள்ள குற்றம் யாது? தாங்கள் ஒரு குற் றத்தையும் இதுவரை சொல்லவில்லையே?”

“பொறுத்துக் கவனமாய்க் கேட்டுவா பாலா.”

“சரி, அப்புறம் என்ன நடந்தது?”

“என்னைக்கண்ட தளகர்த்தர் என்னை யழைத்துக் கைதி ஸ்தானத்தில் நிறுத்தி நான் சமரினின்றும் புறங்காட்டியோடி யதாகக் குற்றஞ்சாட்டப்பட்டிருப்பதாகச் சொன்னார்.”

"என்ன அபாண்டம். அதற்குத் தாங்கள் கூறியது?"

"நான் கூறியதா? கேள் பாலா. பதறாதே."

"என்னிடம் அவ்விதமுரைக்கவும், திக்பிரமைகொண்ட நான் ஒருநாளும் அவ்வித சம்பவம் நடைபெறவில்லை யென்றேன். அதற்கவர் தக்க சாட்சிகளுண்டாவென்க, உள்ளபடியே நான் யார் யாருடைய உயிரைத் தப்புவித்தற் பொருட்டு சேனையினின்றும் பின்னடையவேண்டி வந்ததோ அவரவர் பெயரைச்சொல்லி அவர்கள் தான் சாட்சிகளென்றேன். அது போலவே அமரசிங்கும் பாப்ஜானும் ஆஜராயினர். ஆனால் குலோத்துங்கரை எவ்விடத்திலுங் காணக்கூடவில்லையென்று அவரைத்தேடிச்சென்ற வீரர்கள் திரும்பினர்."

"பாலா! என்ன சொல்வேன்! வஞ்சகநெஞ்சம்படைத்த அவ்விரு சாட்சிகளும் என்ன சொன்னார்கள் தெரியுமா?"

"அப்பா! குலோத்துங்கர்?"

"அவரைத்தான் காணோமென்று திரும்பினார்களே"

"பின்னர் அவர் எப்பொழுதுதான் வந்தார்?"

"எப்பொழுது வந்தாரென்று கேட்கிறாய்! இற்றைவரை அவரைப்பற்றிய சமாச்சாரம் ஒன்றுந்தெரியவில்லை."

"இருக்கட்டும் வஞ்சக நெஞ்சம்படைத்த அவ்விருவர்களும் என்ன சொன்னார்கள் அப்பா?"

"என்ன சொன்னார்கள்' என்று கேட்கின்றாய்! ஐயோ! நான் கனவிலும் கருதக்கூடாத வார்த்தைகளையுரைத்தனர். நான் தான் சமரினின்றும் முதுகுகாட்டியோடிய சோழ நாட்டு வீரர்களில் முதல்வன் என்று என் செய்கைக்கு முற்றிலும் மாறாக, நான் செய்துள்ள நன்மைகளையும் மறந்து, கட

னையும் மறந்து வாய் கூசாமல் நெஞ்சு அஞ்சாமல் அச்சண்டாளர்கள் பொய்ச்சாட்சி சொன்னார்கள்.”

“அப்பா! இதென்ன! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போலல்லவா இருக்கின்றது. அடா சண்டாளரே! பாதகரே! உண்ட வீட்டுக்கு இரண்டகம் பண்ணும் துரோகிகளே! இவ்விதமா பொய்ச்சாட்சி சொல்லத் துணிந்தீர்கள்! ஏ! அபராசித்! நீயா எனக்குச் சத்துருப்பன்! இருக்கட்டும். பின்னர் நடந்ததென்னப்பா? என் தமையன் சகோதரனேயான அந்த அபராசித்கூட இவ்வாறு பொய்புகன்றார்?”

“அதென்ன பதில் சொல்லுகிறது? அவனுடைய மனதில் என்ன எண்ணியிருந்தானென்று யாரால் சொல்லக்கூடும்? ஒரு வேளை கேட்பார் பேச்சுக்கேட்டுத்தான் இவ்விதஞ் சொல்லத் துணிந்தானோ என்னவோ அறியேன்!”

“அப்பா! அப்படியல்ல. உங்களை எவ்விதத்திலும் தொலைத்துவிட்டு அரசைக்கொள்ள எத்தனித்துத் தான் அவ்வண்ணமவர் சொன்னாரென்பதில் சந்தேகமில்லை.”

“அப்படித்தான் என்னை அவ்விதஞ் செய்திருப்பாரென்று நானும் எண்ணுகின்றேன். எல்லாமறிந்த ஈசனுளன். இன்னுங்கேள். அப்பொய்ச் சாட்சிகளின் வார்த்தைகளைக் கேட்ட தளகர்த்தர் அவைகளை நம்பி எனது தந்தையிடம் தாம் அடைந்துள்ள எண்ணிறந்த சகாயங்களை யுத்தேசித்து என்னைக்கொன்று அவருடைய மனதைப் புண்படுத்தலாகாதென்றெண்ணித் தேச சட்டப்படி என்னை உயிர்வதை செய்யாது மன்னித்து, எனது பொருள்களை மட்டிலும் வாங்கி வைத்துக்கொண்டு அந்த நிமிஷத்தில் என்னை ராஜ்யத்தினின்றும் நீக்கி வெளியேறும்படி கட்டளையிட்டார்.”

"அப்பா! குற்றத்தை முறையாய் விசாரியாதது தான் ராஜதர்மமோ? வீணே அவரைத் தங்கமென்றும் சிங்கமென்றும் புகழ்ந்தீர்களே! மனுநீதியைக் கைக்கொண்டவர் தானா தங்கள் தந்தை? ஆ! என்ன கேவலம்!"

"நீங்கள் இன்னும் பத்மாவையடைந்து, 'நான் குற்றவாளியென்று கண்டத்தலைவனாக என்னை ஏற்றுக்கொள்ளாத தகப்பனாருடைய ஆக்ஞைப்படி வெளிச்சென்று அதனை என தப்பாய்க் கற்பித்தேன்; அதற்கவர் என்னை ஏற்றுக்கொள்ள மாட்டேனென்று துரத்திவிட்டாரென்று கூறியும் மெய்க் காதலியாகிய இவள் ஒன்றையுங் கவனியாது எங்கள் வாக்குறுதி பழுதாகாவண்ணம் மறுநாளே என்னை மணந்து கொண்டாள். ஒரு மாத காலம் சோழநாட்டில் தங்கி மறு மாதத்திற்கெல்லாம் சேரநாடாகிய இந்நாட்டையடைந்து வெகுவாய்க்கஷ்டப்படும்நாளில் உன்னையும்யாவரினும் கூர்மையாய்க் கவனித்து நிற்கும் நம் மனோன்மணியையும் ஈஸ்வர கடாக்ஷத்தாலடைந்தோம். உங்களிருவதனங்களைக் கண்டு ஒருவாறு களிப்பெய்தின போதிலும் திடீரென இந்நாட்டிற் பஞ்சமுண்டாயது. அக்கொடிய பஞ்சத்தின் வாயிலகப்பட்ட நாங்கள் உங்களுடன் வெகுவாய்க் கஷ்டப்பட்டுக் காலங் கழித்துவரும் நாளில், எம்பெருமானருளால் நான் இவ்வூர் போஜவர்மராது மைந்தனாகிய உனது தோழன் விசித்திர வீர்ய வர்மனுக்கு ஆசிரியனானேன். உன்னையும் அவனுடன் வைத்தே பயிற்சியடையச்செய்து வந்ததையும் நீயறிவாய்வீர வர்மன் தக்க பருவமடைதலும் சகலத்திலும் மேம்பட்டு விளங்கவே, அவனுடைய ஆசிரியனான என்னுடைய பெயரும் பலராலும் புகழப்பட்டு வந்தது. அதற்கிணங்கவே போஜவர்மர்செய்த உதவியால் நம்முடைய கலியும் ஒருவாறு நீங்கிக் கவலற்றுச் சுகமாக ஜீவித்து வரலானோம்."

"என்னப்பா இவ்விதம் சொல்கின்றீர்கள்! ஓஹோ! மறந்துவிட்டேன். அப்பொழுது தாங்கள் மூர்ச்சையாகிக் கிடந்தீர்கள் போலும்! யான் உடனே அவனைப்பின் தொடர்ந்து ஓடிப்பிடித்து நன்றாகப்புடைத்து ஓடும்படியல்லவோ செய்தேன். உண்மைதான். அவன் மாறு வேடத்துடன் வந்திருந்தானென்று தான் எண்ணுகிறேன். என்றால் அவனை யாரென்று அறியக்கூடவில்லை. தப்பி விட்டான். நாம் நானில் ஓட்டிவிட்ட மனிதனென்று தெரிந்திருக்குமாகில் அவனை மறுமுறை கண்டதற்குச் சித்திரவதை செய்திருக்க மாட்டேனா? அடா! தப்பியா போய்விட்டாய்! என் கண்களில் இன்னொருதரம் நீ அகப்படு பார்த்துக்கொள்கிறேன்! சரி. அப்பா! அதன்பின் என்ன செய்தீர்கள்?"

"என்ன செய்வது? மூர்ச்சையானேன். சிறிது நேரத்திற்குள் ஸ்மாரணத்தை அடைந்தேன். உன்னைத் தேடினேன் கண்டேனில்லை. மனதில் வெறுப்புப் பிறந்தது. இதென்ன உலகம். பொய்யர்க்கே இருப்பிடமொழிய மெய்யர்க்கு இருப்பிடமன்று. நல்லோர்க்கேற்ற காலமிதுவல்ல. நாம் உயிருடனிருப்பதைக் காட்டிலும் உயிரை மாய்த்துக்கொள்வதே தகுதி. நாம் இவ்விதக் கஷ்டத்துடன் இருப்பானேன்? நம்மைக் காணும் நேரமெல்லாம் நம்மை அவமதிக்கும் அமரசிங்கின் முன்னிலையில் ஜீவிப்பதில் ஒரு பிரயோஜனமுமில்லை. நம்மை நம் ஆயுள்பரியந்தம் விடான். 'உலகில் மானங்குலைந்து வாழ்தலைக் காட்டிலும் உயிர் நீத்தலே நலம்' என்று எண்ணிக்கொண்டே நடந்து வீடடைந்து, அணிந்திருந்த ஆடையைக் களைந்து வெளிக்குச்செல்லும் ஆடையை உடுத்துக்கொண்டு மௌனமாக மலையைநாடி அதன் உச்சியை அடைந்தேன். அப்பா! என் கண்மணி! இனி நான் என்சொல்வேன் பாறையின் முனையில்நின்று கீழ்வீழ்ந்திறக்கத் துணிந்தேன்."

"அப்பா! மலைச்சிகரத்தின் மீதிருந்தது அதற்காகத் தானு? என்ன காரியம் செய்யத்துணிந்தீர்கள். எங்களை இந்த ஸ்திதியில் வைத்துவிட்டா மரிக்கத் துணிந்தீர்கள்?" என்று பாலன் தந்தையின் கழுத்தைக் கட்டியழ, அதனைக்கண்ட பத்மாவும், மனோன்மணியும் கண்ணீர் சொரிந்தனர்.

"பாலா! இதற்காக ஏன் அழவேண்டும்? எல்லாம் வல்ல இறைவன் அருளன்றி வேறல்ல. அதற்காகவே நான் அவ்விடம் சென்று இறப்பதற்கு முன் ஈசனைத்துதிசெய்யஎண்ணிக் கொஞ்சநேரம் எனதிரு கரங்களையுமுயர்த்தி ஈஸ்வர பிரார்த்தனையிலிருக்க, என்னை யாரோ ஒருவன் நானின்ற இடத்திலிருந்து இழுத்ததாக அறிந்தேன். உடனே திரும்பிப் பார்க்க உன்னைக் கண்டேன். மதிமயங்கிப் பிரக்ஞையற்றவனுனேன். பின்னர் எவ்விதம் உன்னால் நான் இவ்விடம் கொண்டுவரப் பட்டேனென்றும், கொண்டுவரப்படும்பொழுது வழியில் யாது நிகழ்ந்ததென்றும் அறியேன். மயக்கத்தினின்றும் எழுந்தேன். வீட்டிலிருப்பதாய் உணர்ந்தேன். போஜன மருந்தவும் இச்சையற்று 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்ததே' எனத்துக்கித்துத் துயின்றேன். காலையில் எழுந்தேன். வாடிய முகத்துடனிருந்த உன்னைக் கண்டேன். இவ்வளவு தானப்பா என்னிடமடங்கியுள்ள மர்மம். பாலா! அறிந்தனையா? இனியாகிலும் என்னைத் தொந்தரைக் குள்ளாக்காய் என நம்புகின்றேன்" என்று மோகனசிங் எழுந்து வெளியிற்சென்று தன் வருத்தத்தை ஒருவாறு ஆற்றிக்கொண்டு பின்னும் வீடடைந்தான்.

மோகனசிங் வீடடைந்ததும் இதுகாறும் பெருமூச்செறிந்து உட்கார்ந்து யாவும் காதுகொடுத்துக் கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்த பால்சிங் எழுந்தான். அங்குமிங்கும் சற்றுநேரம் கூண்டினுள் அடைபட்டிருக்கும் ஓர் சிங்கத்

கைதப்போன்று யாது செய்வது என்று ஒன்றும் தோற்றாது வருந்தினான். மேலாவினான். நடந்த காரியங்களை மீண்டும் மீண்டும் நினைத்தான். எழுந்தது கோபம். சிவந்தன கண்கள். இமைகளை படபடவெனத் துடித்தது. உடல் நடுக்கத்தையுங் கொண்டது. பால்சிங் தன்னையறியாமலே தன் வலக்கையைத் தன் உடைவாளின் கைப்பிடிமீது போட்டு வாளை வெளியே எடுத்தான். எடுத்தவாளைக் கைதனிற் கொண்டு, "அப்பா! நீங்கள் யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். உங்களை மானபங்கப்படுத்திய சகோதரனை; அரக்கனினுங் கொடிய அந்த அமரசிங்கை; அப்பாதகனை; அத்துரோகியை; அச்சண்டாளனை; யாதொரு குற்றமுமில்லாத தன் கணவனைக் குற்றவாளியெனக் கொலை செய்வித்த பாண்டியனை கொலை பாதகனெனவும் தன் கணவன் குற்றமற்றவனெனவும் புவியோர்க்குக் காண்பிக்கத் தன் காற்சிலம்பை வரவழைத்துப் பாண்டியனைப் பழிக்குப் பழிவாங்கின கர்ணகி போல் யானும் தாங்கள் குற்றவாளியல்லவென நிரூபித்து அமரசிங்கை இக்கட்கத்திற்கு இரையாக்குவேன். அப்பொழுது தான் யான் தங்களுடைய மகனென்று சொல்லத்தகு பேறுபெறுவேன். மற்றபடி எவ்விதத்தும் பொருந்தாதென்றான்.

---

## 7-வது அத்தியாயம்.

## மக்கள் பிரிவு.

---

எந்தையே! என்னால் இவ்விடம் இனி ஒரு கணமும் தரிக்கமுடியாது. என் மனமோ வேதனையடைகிறது. யான் தங்களைத் தங்கள் மானபங்கத்தினின்றும் என்று விடுவிப்பேனோ அன்றே எனது மனம் ஒருநிலைப்படுமல்லாது மற்று ஒருநாளும் சமாதானமடையாது. முன்னர் மூவுலகுங்கொண்டாடும் வசிஷ்டமகரிஷியிடம் சகலகலையுமின்று இளம்பிராயத்திலேயே தன் தம்பியுடனும் விஸ்வாமித்திர மகரிஷியுட

"அப்பா! மலைச்சிகரத்தின் மீதிருந்தது அதற்காகத் தானு? என்ன கார்யம் செய்யத்துணிந்தீர்கள். எங்களை இந்த ஸ்திதியில் வைத்துவிட்டா மரிக்கத் துணிந்தீர்கள்?" என்று பாலன் தந்தையின் கழுத்தைக் கட்டியழ, அதனைக்கண்ட பத்மாவும், மனோன்மணியும் கண்ணீர் சொரிந்தனர்.

"பாலா! இதற்காக ஏன் அழவேண்டும்? எல்லாம் வல்ல இறைவன் அருளன்றி வேறல்ல. அதற்காகவே நான் அவ்விடம் சென்று இறப்பதற்கு முன் ஈசனைத் துதிசெய்யஎண்ணிக் கொஞ்சநேரம் எனதிரு கரங்களையுமுயர்த்தி ஈஸ்வர பிரார்த்தனையிலிருக்க, என்னை யாரோ ஒருவன் நானின்ற இடத்திலிருந்து இழுத்ததாக அறிந்தேன். உடனே திரும்பிப் பார்க்க உன்னைக் கண்டேன். மதிமயங்கிப் பிரக்ஞையற்றவனுனேன். பின்னர் எவ்விதம் உன்னுல் நான் இவ்விடம் கொண்டுவரப் பட்டேனென்றும், கொண்டுவரப்படும்பொழுது வழியில் யாது நிகழ்ந்ததென்றும் அறியேன். மயக்கத்தினின்றும் எழுந்தேன். வீட்டிலிருப்பதாய் உணர்ந்தேன். போஜன மருந்தவும் இச்சையற்று 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்ததே' எனத்துக்கித்துத் துயின்றேன். காலையில் எழுந்தேன். வாடிய முகத்துடனிருந்த உன்னைக் கண்டேன். இவ்வளவு தானப்பா என்னிடமடங்கியுள்ள மர்மம். பாலா! அறிந்தனையா? இனியாகிலும் என்னைத் தொந்தரைக் குள்ளாக்காய் என நம்புகின்றேன்" என்று மோகனசிங் எழுந்து வெளியிற்சென்று தன் வருத்தத்தை ஒருவாறு ஆற்றிக்கொண்டு பின்னும் வீடடைந்தான்.

மோகனசிங் வீடடைந்ததும் இதுகாறும் பெருமூச் செறிந்து உட்கார்ந்து யாவும் காதுகொடுத்துக் கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்த பால்சிங் எழுந்தான். அங்குமிங்கும் சற்றுநேரம் கூண்டினுள் அடைபட்டிருக்கும் ஓர் சிங்கத்

தங்கள் பொருட்டுப் பிரயாசைப்பட அனுக்ரஹிக்கவேண்டு
மென்று மோகனசிங்கை வெகுவாய் இரந்து கேட்கலானான்.

அதுகேட்ட மோகனசிங் "தெய்வமே! இதற்கு நான்
என்ன செய்வேன்! இதை யறிந்தே நம் மைந்தனுக்கு நம்
அந்தரங்கத்தை இப்பொழுதறிவித்தல் நலமல்லவென்றெண்
ணினேன், என் விதியின் பயனே அவனிடம் இவைகளைத்
தாம் புகலும்படி தூண்டிற்று போலும். அவன் சொல்லும்
வார்த்தைகளைக் கவனிக்குமிடத்துப்பாலன் வெகுவாய்த் துக்
கிப்பதுமன்றித்தான்கொண்டஎண்ணத்தையும் பூர்த்திசெய்ய
எண்ணுகின்றான். இவனை நாம் விட்டுப் பிரிந்திருப்பதெங்ங
னம்? எவ்விதமாவது அவனது எண்ணத்தை மாற்றவேண்டு"
மென்று நினைத்துப் பாலனைப் பார்த்துச்சொல்வான்.

"கண்மணி! என்ன சொல்லுகின்றாய்?உன் மனத்தினின்
றுதான் அவ்வார்த்தைகள் வெளிவருகின்றனவா; அல்லது
உன்னை யறியாமலே உன் நாவினின்று தான் அவைகள் வரு
கின்றனவா? நாம் இவ்வந்நியநாட்டில் யாதொரு உதவியுமற்
றிருக்கின்றோமென்பது நீ யறியாத விஷயமா? பாலா! உன்னு
டைய உதவி எனக்கிருந்துமே என்னை அப்பாதகன் நாளா
வட்டத்தில் தொலைக்க எண்ணி வருகின்றானே. அவன் அட
வியில் என்னை வந்தெதிர்த்ததும், சபை கூடியவிடத்து அவ
மதித்ததும், ஆகிய இவைகள் உனக்குத்தெரிந்த விஷயமே.
இன்னும் அவன் உயிருடனிருக்கும் பரியந்தம் என்னை வறிதே
இருக்கவிடுவானென்று நினைக்கின்றாயா? அவன் எனக்கு இக்
கட்டுகள் புரியவெண்ணும் தருணங்களிலெல்லாம் நீ என்னு
டைய பக்கலில் இருப்பாயாகில் அவனது சூழ்ச்சி யாவும் நீ
செய்யும் காரியங்களுக்கு ஈடுகொடாது பரிதியைக்கண்ட பனி
போற் பறக்குமே! அவனால் இன்னும் எனக்கென்னென்ன

கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட இருக்கின்றனவோ அறியேன். ஆதலால், பாலா! நீ வீண் பிரயாசைப்பட வேண்டுவதில்லை. நான் சொல்கின்ற வார்த்தைகளுக்கிணங்கி, என் எண்ணப்படி உன் எண்ணத்தை முற்றும் மறந்துவிடு.” என்று கூறினன்.

“என்னருமைத் தந்தையே! ஏனிவ்விதம் பகர்கின்றீர்கள்? தங்களுக்கென்னால் என்ன உதவி? கேவலம் மானிடர் யாது செய்யக்கூடும்? எல்லாம் ஈசன்செயலன்றி வேறில்லை. ‘அவனன்றி ஓர் அணுவும் அசையாது’ என்ற ஆன்றோர் வாக்கியத்தினையும் மறந்தீர்களோ? இப்பூதலத்தில் எவ்வளவோ மாந்தருதவி பெற்ற ஒருவனுக்கு எம்பெருமானருளில்லாவிடில் எக்காரியம் பலிதமாகும்? முதலையின் வாயிற் சிக்குண்ட யானை ‘ஆதிமூலமே’ என்றழைக்க மகாவிஷ்ணு பிரசன்னமாகி முதலையைக் கொன்று யானையைத் தப்பும்படி செய்யவில்லையோ? வேடனுக்கும் இராஜாளிக்கும் இடையில் அகப்பட்டு விழித்துக்கொண்டிருந்த மாசற்ற புறாக்களிரண்டிற்கும், விஷந்தீண்டி வேடனிறக்கும்படிக்கும், அவன் கைப்பிடித்திருந்த அம்பின் இலக்குத் தவறி உயரப் பறந்துகொண்டிருந்த இராஜாளியின் மேல் பாய்ந்து அதனையும் உயிர் துறக்கும்படிக்கும் செய்து, அபயாஸ்தம் தரவில்லையோ. நம் கருணைக்கடல்? ‘கடவுளை நம்பினோர் கைவிடப்படார்’ என்ற முதறிஞர் சொற்களையும் மறந்தீர்களோ? ஆதலால், எந்தையே! என் பிரிவிற்கு வருந்தாதீர்கள். எனக்கு விடைதரல் வேண்டும்” என்று மன்றாடினன்.

“பாலா! உன்னைவிட்டு ஒருநாளும் பிரியேன். நீ என்னுடனேயே இருத்தல்வேண்டும். ‘மூத்தோர் சொல் வார்த்தையமிர்தம்’ என்றதை யறியாயோ? என் சொல்லிற்கிணங்க, என்னுடனேயே இருத்தல்வேண்டும். நீ ஓரிடமும் செல்லக் கூடாது. மேலும் அக்காரியங்களுக்கு ஏற்றவன் நீயல்ல.

உனக்கு வயதும் போதாது, வீணில் 'எட்டாப்பழத்திற்குக் கொட்டாவிவிட்டது போல்' உன்னாலாகாத ஓர் கார்யத்திற்கு முயற்சி செய்யவேண்டாம்."

"அப்பா! 'முயற்சி திருவினையாக்கும்,' 'மெய்வருந்தக் கூலிதரும்.' யான் எப்பொழுது ஓர் கார்யத்தைச் செய்ய நினைத்தேனோ, அந்நினைவை ஒரு நாளும் மாற்றேன். அதினின்று நன்மைவரினும் தீமைவரினும் எனக்கு இரண்டு மொன்றே. தாங்கள் சொல்லும் வார்த்தைகளுக்கு என் உயிர் போயினும் இணங்கேன். மன்னிக்க வேண்டுகிறேன்."

"பத்மா! என்ன 'ஏன் நீயும் மனோன்மணியும் இவை எல்லாங்கேட்டும் ஒன்றும் பேசாது மௌனஞ்சாதிக்கின்றீர்கள்? பத்மா! மைந்தன் என்ன சொல்லுகின்றானென்று கவனித்தனையா? உனது நோக்கமென்ன? என்ன செய்வதென்று எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே!"

"நாதா! என் செய்வது! மைந்தன் ஒரே உறுதியாகத் தானிருக்கின்றான் போலிருக்கிறது. அவன் சொல்லுவது போலவே பிர்மா தான் வந்து அவன் முன் தோன்றிப் புத்தி போதிக்க வேண்டுமெனத் தோற்றுகின்றது. வாதத்திற்கு மருந்து கொடுக்கலாம். பிடிவாதத்திற்கென்செய்வது? தங்களது சித்தம் போலவே யானும் நடக்கக் கடமைப்பட்டவள்.

"அப்பா! பாலா! ஏன் திடீரென்று இந்த நினைவு நினைத்தாய்? உனக்கு உன் தந்தை எவ்வளவு சொன்னபோதிலும் ஏன் கேட்கமாட்டேன் என்கின்றாய்? ஏற்கனவே துயர்க்கடலிலாழ்ந்து சதா வருந்துமவர்கட்கு ஏன் மென்மேலும், 'நகச்சுற்றின் மேல் உலக்கை விழுந்தது' போல் வருந்தி மெலியுமாறு வருத்தத்தைக் கொடுக்கின்றாய்?"

“குழந்தாய்! நீ உன் அப்பாவைக் கவனியாவிட்டாலும் உன்னைப் பத்துமாதம் சுமந்து பெற்று எங்களது கஷ்டதிசையிலும் உன்னை மிகப்பரிவுடன், செல்வமாய்ப் பாலூட்டிச் சீராட்டிப் பாராட்டி, உச்சிமோந்து, கன்னங்கிள்ளி, எவ்வளவோ அருமையாய் ‘நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய்’ வளர்த்த என் முகத்தையாவது பார்க்கக்கூடாதோ? நீ எங்களைவிட்டுப் பிரிவதனால் எங்களுக்கு எவ்வளவு மனத்துயர் உண்டாகுமென்பதை வயது நிரம்பிய பிள்ளையாகிய நீயறியாவிடில் வேறு யாரறிவர்? பாலா! ஏன் ஒன்றும் பேசாமலிருக்கின்றாய்? ‘பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லு’ என்னும் பழமொழி எனக்கே பொருந்தும் என்று நினைத்துத்தான் இவ்விதம் நிற்கின்றையோ? வேண்டாம் பாலா; உன் மனநிலையை மாற்று. எங்களை இக்கணத்திற் கைவிடாதே. இவ்விடமோ உன்னையன்றி வேறு துணையில்லை. அவ்விதமிருக்க, நீ எங்களைப் பிரிய, நாங்கள் எவ்விதம் இவ்விடம் உயிர்வாழ்வது? ஆதலால், என் கண்ணே! இவ்விடத்தைவிட்டு வேறோர் இடத்திற்கும் நீ செல்லல் வேண்டாம்.”

“அம்மா! தாங்களும் அப்பாவும் இதுபோன்ற உருக்கமான வசனங்கள் இன்னும் பல சொன்னபோதிலும் சரி, ‘மைந்தனென்ன முயலுக்கு மூன்றேகால்’ என்று சாதிக்கின்றனென்றுரைத்தபோதிலும் சரி, ‘இவன் நம்முடைய பிள்ளையாகவா பதிலுரைக்கின்றான் இவன் தான் சொல்வதே சரியென்னும் சாதனைக்குணம் படைத்தவன்’ என்றெண்ணியபோதிலும் சரி, ஒன்றுக்கும் கவலைப்படேன். முன்வைத்த காலை இனிப்பின் வைக்கேன். நான் ஓர் ஆணுக்குப் பிறந்து பதாவதென்றால் முடியாத காரியமாகும். அம்மா! கிழக்கே உதிக்கும் சூரியனே என் முன் தோன்றி ‘பாலா! நான் நாளை முதல் மேற்கே உதிக்கின்றேன். உன் மனோதிடத்தை மாற்று’

என்று பகரினும், என் மனைவியை மாற்ற என்னாலும் சம்மதியேன். இது திண்ணம்." என்று மிகுந்த ஆத்திரத்துடனும், பரபரப்புடனும் பதிலுரைத்து, "அம்மா! எனக்குச், சீக்கிரம் அனுமதி தந்தால் நன்று. இல்லையென்று தாங்கள் இன்னும் என்னுடன் தர்க்கிக்க முயல்வீர்களாகில், யான் இனித் தங்களுடைய மைந்தனாகேன். என்னை உயிருடனிருக்கக் காணீர்கள். உயிர்வதை செய்துகொள்வேன்" என்றும் இன்னும் இவைபோன்ற கொடுஞ் சொற்கள் பலவும் பகர்ந்தான்.

இக்கொடிய சபதச்சொற்கள் தன்னருமைப்புதல்வனின் வாயினின்றும் புறப்படவே, கரைகாணாச் சோகக்கடலிலாழ்ந்தனர். அவனது அருமைத்தாய் தந்தையர். பின்னர் ஒன்றுந் தோன்றாதவளாகியிருந்த பத்மா மிகப்பரிதாபத்திற்குரிய முகத்துடன், "பாலா! உன் பாடு உன் தந்தை பாடு. 'ஏழை சொல் அம்பலத்திற்கேறவில்லை' போலும். நான் இனி உன்னுடன் இவ்விஷயத்தைப்பற்றிப் பேசேன்" என்று கூறி மிகுந்த வருத்தத்துடன் கண்ணீர் சொரிந்தனள்.

தன்னையே பெரிதென மதித்துவந்த தன் ஆருயிர்க்காதலியும், நற்குண நற்செய்கைகள் ஒருங்கேயமையப்பெற்றவளுமான பத்மா கண்ணீர் சொரிவதைக் கண்ணுற்ற மோகனசிங்கின் மனம் எவ்வாறிருந்திருக்கும். 'கனலிற்பட்ட மெழுகு' போலும் கடலிற்பட்ட துரும்புபோலுமானது.

"நடப்பது நடந்தே தீரும். இதற்காக வருந்தல் மாந்தர்க்குரிய காரியமன்று. எல்லாம் திருவுளச்செயலின்படியேயாகும். அன்றொன்றை எழுதினவன் அதனையழித்து இன்றொன்று எழுதப்போகின்றான்? ஒரு நாளுமில்லை. பத்மா! நீயேனழுவேண்டும்! பாலன் தன்னுள்ளத்தில் ஏதோ வைராக்கியம் பாராட்டுகின்றானெனத் தெரிகிறது. அவன் சொல்வது

போலவே அவனது எண்ணத்தை மாற்றப் பிரமதேவனாலுமா
காதென்றே எண்ணுகின்றேன். நாம் அவனுக்கு என்ன
தான் எடுத்துச் சொல்லினும் தற்போது, 'செவிடன் காதில்
ஊதும் சங்கோசை' க்கு அவைகள் ஒப்பாகும். அவன் ஒன்
றுக்கும் காதுகொடான். தான் கொண்ட கருத்தை நிறை
வேற்ற எண்ணங்கொண்டு விட்டான். அவனை இனித் தடுப்
பதில் சாரமில்லை. அவ்விதம் தடை செய்தால் நாம் தான்
பழிக்கு ஆளாகவேண்டி வரும். ஆகையால், அவனது மனப்
படியே அவனை நல்வார்த்தை சொல்லி அனுப்பிவைத்தலை
நலமென்றெண்ணிய போதிலும், நம் மைந்தனோ சேரநாடன்றி
வேறோர் சிறு கிராமத்தைக்கூட அறியாதவன். அவ்வித
மிருக்கப், பாண்டிநாடு, சோழநாடு ஆகிய இவைகளையடைந்து
அவ்விடங்களில் எவ்விதமிருந்து காரியங்களை நிறைவேற்றப்
போகின்றான்? அவனை அமரசிங் அறிவானாகில் இலேசில்
விடுவானோ? உடனே கொலைபுரிவானே என்றெண்ணும்போது
எனக்கு உடல் சிலிர்க்கின்றதே. மைந்தனை அனுப்பி வைக்க
மனமெழவில்லையே!" என்று மோகனசிங் பத்மாவை நோக்கி
உரையாடக்கேட்ட பால்சிங் சொல்வான்.

"பெற்றோரே சரணம். எனது பிரிவை நினைந்து தாங்
களிருவரும் மிகுந்த மனோவியாகுலத்தால் பீடிக்கப்படுகின்
றீர்களென்பதை நன்கறிவேன். பொதுவாகக் கொடியன்
அவ்வமரசிங் கென்போன் சொன்ன பொய்ச்சாட்சியத்தால்
நமக்கு இதுகாறும் நேர்ந்த துன்பத்தையும், தற்போது தங்
கட்கு என் பிரிவாலேற்படும் துயரத்தையும் எம்பெருமானரு
ளால் கூடிய சீக்கிரம் போக்குவிப்பேன்."

"பூர்வம் பீஷ்மர் தன் தந்தை சந்தனுவுக்கு யோசனை
கந்தியை மணம்புரிவித்து ஆயுள்பரியந்தம் பிரமச்சாரியாய்
இருப்பதாகச் சபதஞ்செய்து அவ்வாறே இருந்து தந்தைக்கு

யடையவில்லையா? முன்னர் அசுரர்க்கு இறைவனும் வர்ஷபர்வாவுக்குதித்தவளும் மிகுந்த வனப்புப்பொருந்தியவளுமான யௌவனை சர்மிஷ்டை தன் கோபாவசத்தால் சுக்ராச்சாரியரின் புதல்வியாகிய தேவயானையை ஓர் கிணற்றில் தள்ளி விடுசெல்ல, அச்சமயம் அவ்வழியே வேட்டைகாடச்சென்ற நஹுஷ்திருபுத்திரனை, யயாதி அவளது உயிரைக்காப்பாற்றி அவளையே மணந்துகொண்டவனை அம் மன்னனுக்கு அவனது இச்சைப்படி தனக்குள்ள இளமையை நல்கி, அவனது கிழத்தனத்தை அன்புடன் ஏற்றுப் பூருவென்னும் புதல்வன் உலகில் நற்பெயரை நிலைநாட்ட வில்லையா? அதுபோலவே, என் முயற்சியால் தங்களுக்குண்டா யிருக்கும் பழிப்பைப் போக்கி யான் ஏன் நற்கீர்த்தி யடையலாகாது!”

“என்னை அமரசிங் கண்டால், தொலைத்து விடுவானென்று தாங்கள் ஏன் அஞ்சவேண்டும்? இவ்வுலகிலிருந்து தான் என்ன பலனைக் காண்கின்றோம்? உலகில் ஒருவர் பிறப்பதும் இறப்பதும் காலையில் தினகரன் தோன்றி மாலையில் மறைவது போலாகுமல்லவா? அங்ஙனமிருக்க மண்ணில் ஒருவர் பிறக்கும்போது களிப்பெய்துவதும், இறக்கும்போது துயரத்திலாழ்வதும் என்ன யோசனை? இப்பூதலத்தில் யார் தான் சிரஞ்சீவியாய் வாழ்தல் முடியும்? அயன் முதல் தேவர் யாவருக்கும் காலவரையறை விதிக்கப்பட்டிருக்கக் கேவலம் மனிதர் எம்மாத்திரம்? ‘ஆறிலுஞ்சாவு, நூறிலுஞ்சாவு.’ பிறந்தவன்றே நாம் ஓர் நாள் இறப்பது நிச்சயமன்றோ? ஆனதால், அமரசிங்கால் எனக்குறும் இம்சைகளைத் தாங்கள் கனவிலும் கருதவேண்டாம். என்னை அவன் வஞ்சித்தாலொழிய சண்டையிட்டு ஒருநாளும் மேற்கொள்ளானென்பது திண்ணம். ‘திக்கற்றவர்கட்குத் தெய்வத்துணை’ என்ற ஆன்றோர் வாக்கின்படி, பொய்மை வெல்லப்புறப்படும் எனக்குத் தெய்

வம் அவசியம் துணை நிற்கும். அஞ்சாதீர்கள்; மேலும், 'சண்டையிற் செத்தால் மோட்சமுண்டு' என்றும் கேள்விப்பட்டிருக்கலாமே. ஆதலால், அமரசிங்குடன் யான் சண்டையிட்டு அதனால் யான் இறக்க நேரினும் எனக்கு மோட்சத்தை யடையும் பாக்கியமும் உண்டு. அன்றியும் அவ்விதமே நேரினும், என்னை நீர் அந்நியன் கொல்லமாட்டானே, என்னுடைய சிற்றப்பன் தானே கொல்வன்? பாதகமில்லை.”

“அப்பா! அம்மா! ஆதலால் மனதைரியப்படுங்கள் யான் தங்களைப் பிரிவதினால் கொஞ்சமும் சஞ்சலப்படவேண்டாம். எம்பெருமானாகிய அம்பிகை பாதகளருளால் தங்கள் கவலையைச் சீக்கிரத்தில் ஒழிப்பேன். தாங்கள் இன்புற்றிருப்பதைக்காண்பதிலும் எனக்கு வேறு இன்பமுளதோ? இல்லையே. 'ஈன்று வளர்த்த தாய் தந்தையர்கட்கு எவரே கைம்மாறியற்றினவர்?' எனக்குள்ள வயதளவும் தங்களுக்கு யான் அடிமைத்தொழில் பூண்டு, திரிலோகத்திலும் கிடைக்கும் அருமையான பொருள்கள் பலவற்றையுங் கொணர்ந்து யான் தங்களுக்களித்துத் தங்களை முறைபாக வழிபாடு செய்து வரினும் தாங்கள் என்னை ஒருநாட் பரிவுடன் வளர்த்தற்கு ஈடாகாதே. ஆனதால் என்னுயிரைப் பெரிதென மதிப்பேன் என்றெண்ணுகின்றீர்களா? இப்புவியில் தங்களை நிரபராதி என்று நிரூபிக்குமன்றோ யான் எடுத்த ஜன்மம் சாபல்யமடையும். தாங்கள் இன்பமுடன் வாழ்வதை யான் என் கண் கொண்டு நோக்குவதினும், வேறு பரமானந்தமுளதோ? ஆகையால் தயவுசெய்து இன்னும் என்னுடன் வாதாடாது கிருபை புரிந்து எனக்கு விடைதரல் வேண்டும்” என்று சொன்னதின் பின் அம்மட்டோடமையாது அமரசிங்கை நோக்கி,

“அடே! சகோதரகாதகா! கொஞ்சமும் அஞ்சாது எங்களை இக்கதிக்காளாக்கினையே! இக்கதியில் யாங்களிருப்பி

வோம்? எல்லாம் இறைவனது திருவுள்ளமெனத் தேறினோம். நீயோ மிகவும் கவனமாயிருந்து உன் காரியத்தை நிறைவேற்ற வேண்டும். உனக்கு அநேக இக்கட்டுகள் நேரிடலாம். அவை யாவையும் ஒரு பொருட் படுத்தாது 'கருமமே கண்ணாயினார்' என்பது போல நீ எடுத்துள்ள காரியத்தைப் பின்னடையாது தொடுத்து முடித்தல்வேண்டும். என்னால் சொல்லக்கூடிய புத்திமதிகள் இவைகளே. என் மனப்பூர்வமாய் உனக்கு விடைதந்தேன். மங்களமுண்டாவதாக. உன் தந்தையிடமும் ஆசிர்வாதம் பெற்றுச்செல்" என்றாள்.

"அப்பா! போய் வரட்டுமா?" என்று மோகனசிங்கை பால்சிங் கேட்கவும், "நானும் ஏன் என் அண்ணாவுடன் சென்று அவர்களுக்கு உதவி செய்து அவர்களுக்குக் கிடைக்கும் நற்கீர்த்தியை அடையக்கூடாது? இவ்விடம் தந்தை தாயர்க்கு உதவி செய்து கொண்டிருக்கலாமென்று நினைத்தாலும், வீரவர்மனுடைய நினைவே சதா நம் மனதிற் குடிகொண்டு தற்சமயம் வருத்திக்கொண்டு வருவதேபோல் தான் பின்னரும் வருத்தும். ஆகையால் அண்ணாவுடன் வெளிக்கிளம்பினால் நாம் வீரவர்மனை மறந்தாகிலும் இன்புடன் யாதொரு கவலையுமற்றிருக்கலாம் என்றபோதிலும், வீரவர்ம! உன்னையானு மறந்துவிடுவேன்? என்னாற் கூடாத கார்யமது. நான் மறக்கும்படி முயற்சி செய்பினும் என் மனம் உன்னை மறவாது. மணந்தால் உன்னையே மணப்பேன். அல்லது என் உயிர் பரியந்தம் வேறொருவனைக் கருதேன். இது சத்தியம். ஆதலால் நானும் என் அண்ணாவைப் பின்பற்றுதலே நலம்" என்று தேறின மனோன்மணி, தானும் தன் அண்ணனுடன் சென்று வருவதாகத் தன் பெற்றோரிடம் விடை கேட்க, 'மார்பிடையே வேல் பாயப்பெற்றது' போல் மனோன்மணியின் வசனங்களைச் செவியிலேற்ற மோகனசிங்கும் பத்மாவதி

யும் யாது செய்வதெனத் தோன்றாது திகிலடையப் பெற்றவர்களாய்ச் சற்றுநேரம் மௌனமாயிருந்தனர்.

சிறிதுநேரங் கழியவும், மோகனசிங், "கண்ணே! மனோன்மணி! என்ன சொல்லுகின்றாய்? பாலன் நம்மைப் பிரிய எண்ணங்கொண்டிருப்பது நீ அறிந்ததே. பாலனைக் காணாது உன் அழகிய வதனத்தையாவது கண்டு மகிழ்ச்சியடையவேண்டிய எங்களை நீயும் விட்டகல வெண்ணினால் நாங்களிவ்விடமிருந்து யாது பிரயோஜனம்? நாங்கள் மக்களையடைந்தும், அடையாதார் போலவா இருக்கக் கருதுகின்றாய். பாலனாவது ஆண் பிள்ளை. எவ்விதத்திலும் என்ன ஆபத்திற்கும் தப்பிவிடுவான் என்றுநாங்கள் அவனைத்தைரியங்கொண்டு அனுப்பிவைக்கத் துணிந்தோம். நீயோ கேவலம் பெண்பால். உன்னால் ஒன்றும் செய்யமுடியாதே. அவ்விதமிருக்க நீ விரும்புவது ஒப்பத்தக்கதல்ல. உனது எண்ணத்தை யொழி" என்ன, மனோன்மணி சொல்லுவாள்:

"எந்தையே! பெண்பாலரென்றாலென்ன? பெண்களால் ஒன்றுஞ் செய்யமுடியாது என்று நினைத்தல் வேண்டாம். 'சிறு துரும்பும் பல்லுக்குத்த வுதவுமாகையால், அண்ணாவுக்கு யான் எவ்வழியாலாகிலும் உதவியுள்ளவளாக இருப்பேனென்பது நிச்சயம். இது தாங்கள் அறிந்த விஷயமே"

"கேளுங்கள். மண்ணின்கண் மாந்தரென உருவெடுத்தோருடைய உடலோ, தோல், எலும்பு, சதை, உதிரம், நரம்பு, மூளை குணம் முதலியவற்றால் நிரப்பப்பட்டு அருவருக்தற்குரிய தோர் பாண்டமாகுமென்பதைத் தாங்களறிவீர்கள். இத்தன்மைத்தான சரீரமோ என்றும் நிலைத்து நிற்கக் கூடியதல்ல. என்றைக்காயினும் ஓர் நாள் அழிந்தே தீரல் வேண்டும். இவ்வளவு காலந்தான் உடல் நீடித்திருக்கும் என்ற காலநிர்ணயங் கிடையாது."

"இன்னும் கேளுங்கள். கண் கண்ணிமை மூடித்திறக்கு மைக்குப்போதுமோ தவன், மரணம் விழித்தெழுவது என்ன நிச்சயம். 'இப்பவோ, பின்னேயோ, இரவிலோ, பகலிலோ, எந்த நேரத்திலோ இயமன் வருவான்' என்று ஆன்றோர் பகர்ந்திருக்கின்றனர். மேலும் ஓர் விருக்ஷத்திலுள்ள அரும்பு, பூ, பிஞ்சு, காய், கனி, முதலியவைகள் எவ்வாறு நேரத்தில் கீழே விழுந்து நாசமடைவது போல், மனிதருடன், கருவிலும், குழந்தைப்பிராயத்திலும், இளம்பிராயத்திலும், முதுமையிலும் நாசமடைவதை நாம் கண்ணாரக்கண்டு வருகிறோம். மேலும், அழகிய நம் சரீரம் நம்முடையது தான் என்று நாம் இறுமாப்புடனிருக்கப் பேய், நாய், நரி, கழுகு, முதலியன 'நம்முடையது தான்' என்றெண்ணிக் கொண்டு நம்முடைய வருகையை ஒவ்வொரு நாளும் ஆவலுடன் எதிர்பார்த்து வருகின்றன. நிற்க, நீரில் எழுதும் எழுத்து எவ்விதம் கண்ணிமைப்பொழுதில் மறைகின்றதோ அதுபோலவே நம்முடைய தேகமும் ஓர் கணப்பொழுதில் அழியுந்தன்மைத்தானது. இத்தகைய நமது உடலின் மீது மனிதர் பற்றுவைப்பது மதியின்மையன்றோ! ஜீவராசிகள் இறப்பினும் அவைகளின் உடல்கள் பயன்படக்கூடியவை. ஆனால் மானிடர் இறப்பின் அவர்கள் சரீரம் எதற்குப் பிரயோஜனப்படுகிறது? ஒன்றுக்கும் பிரயோஜனமற்றவை. அவர்கள் மாண்டதின் பின் அவர்களுடன் காசு வருமா, பணம் வருமா? ஒன்றும் வாராது உடலைவிட்டுயிர் பிரியவும், அரையிலுள்ள துண்டு முதலாய் உறவினர் அபகரிக்க எண்ணங்கொள்வர். ஆதலால், 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' என்பது போல நம்முடலில் ஜீவனுள்ளபோதே நல்வினைகளை இயற்றி மறு பிறப்பிலும் இப்பிறப்பிலும் இன்பமுடன் வாழமுயலல் வேண்டும். அதற்கிணங்கவே யானும் இப்பொழுதே தங்கள் பொருட்டு அன்

ணுடன் சென்று நற்பெயரையக்கூறி விட்டேன். தாங்கள் யாதொன்றும் யோசியாது அண்ணனுடன் என்னையும் அனுப்பிவைக்கத்தான் வேண்டும். நான் முன் சொன்னது போலவே என்னும் அண்ணனுக்கு அநேகம் உதவிகள் இருக்குமென்பதிலையமில்லை. 'நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும் பேதமைத்' தாதலின், யாதொன்று மறியாத யான் சகலமும் தெரிந்துகொண்ட தங்களுக்கு இவ்வளவு தூரம் எதிரா என் சிற்றறிவிற் கெட்டியவாறு எடுத்துக்கூறினேன். எனினும், என் வார்த்தைகளின் பலனை நன்காராய்ந்து என் வேண்டுகோளை ஆதரிக்கப் பிரார்த்திக்கின்றேன். அப்பா! போய்வரவா? மேலும் என் எண்ணத்தை மாற்றத் தாங்கள் நினைப்பின் 'கற்பாறையில் கயிறு திரிப்பது போல்' ஆகுமல்லாது வேறல்ல."

"மனோன்மணி! நீயும் எங்களை விட்டுப்பிரிய நேர்ந்ததா? எங்கள் தலைவிதிப்பிரமன் எழுதின எழுத்து இப்படிப்போலும். போய் வருவாய் க்ஷேமமாய். அண்ணன் சொல்வதின்படியே நடந்துகொண்டு. ஈசன் நம் கவலையை யொழிப்பாராக. போய் வருவாய்."

"அம்மா! அண்ணனுடன் சென்று வருகின்றேன்; கவலையாமல் நீங்களும் எனக்கு விடைதாருங்கள்."

"க்ஷேமமாய்ப் போய் வருவாய் மனோன்மணி. பாலன் மனப்படி நடந்துகொள். எங்கள் தலையில் விதித்த விதிக்கு உங்களை நோவதில் யாது பயன்?" எனவே பாலனும் மனோன்மணியும் புறப்பட யத்தனிக்கையில், மோகனசிங்கும், பத்மாவும், தம் மக்கள் தம்மை விட்டுப் பிரிவதால் 'நெருப்பெய்த கனல்' போன்ற அவர்கள் கொடுந்துயரை ஆற்றார்களாகி, அழுதழுது அவர்களை மார்புறத்தழுவிக் கண்ணீர்விட்டுப் பிரி

யும் தாய்ப் பசுவேபோற் கதறிய பின்னர் மனத்திடப்முள்ள மனோன்மணியை மைந்தன் வசமாக்கவே, அன்புடைய பாலனும் தன் தங்கையுடன் பாட்டி நகர் நோக்கி நடக்கலுற்றான்.

---

## 8-வது அத்தியாயம்
## மதுரையில் மர்மவாழ்க்கை.

---

சற்றேறக்குறைய ஒரு வாரத்திற்கெல்லாம் பாண்டிநாட்டிற்கோர் திலகம் போன்று விளங்கும் மதுரையம்பதியை யடைந்த பால்சிங், இன்னும் குறைவறக் கல்வி கற்றுவரும் வண்ணம் தன் தங்கை மனோன்மணியை வடக்குவாசற் பெண் பாடசாலையில் தலைமை வகித்திருக்கும் ஓர் உத்தம வேளாளப் பெண்மணியிடம் ஒப்புவித்து, தான் கீழவெளிவீதி குணபூஷணம் பிள்ளையவர்கள் கிரஹத்தில் தனக்குத் தெரிந்திருந்த சித்ர வேலையைக்கொண்டு பிரபுக்களுக்குப் படம் வரைந்து கொடுத்து அதனால் அடைந்துவந்த ஊதியத்தால் தன் தங்கையையும் தன்னையும் போஷித்து வந்ததோடு தன் பெற்றோரின் உதவியை அவன் எதிர்பார்க்காமலே சுமார் மூன்றுமாத காலத்தை அவ்விடம் கழித்து வருவானாயினன்.

இதற்கிடையிலோர் தினம் மிக அழகிய படமொன்றை எழுதி முடித்து அதனைத் தன் அறையில் வைத்து உற்று நோக்கிக்கொண்டிருந்த காலை, யாரோ ஒருவருடைய காலடிச் சப்தம் அவனது காதிற் கெட்டியது. அப்பொழுது பாலன், "என்ன! அறைக்குப்பக்கத்தில் யாருடைய காலடிச்சப்தமோ ஒலிக்கின்றதே. இது யாருடையதாயிருக்கலாம்? பூரணம் நமக்கு உணவுகொண்டு வருகின்றாளென்றாலும், அவளுக்குத் திட்டஞ்செய்துள்ள அந்த எட்டரைமணிக்குத் தானே வருவாள். மற்றபடி இரவில் எந்த நேரத்திலும் எவ்வித முகாந்

தரத்தையுங்கொண்டு இவ்விடம் வரவேண்டாமென்று உத்திர விட்டிருக்கின்றேனே. அதனையவள் மீறி நடப்பவளில்லையே. நிற்க, குணபூஷணம் பிள்ளைதான் வருகிறாரென்றால் அவர் சாயங்காலம்தானே நம்முடன் விளையாட்டாகச்சம்பாஷித்துச் சென்றார். மேலும் இதுவரை அவர் படுக்கைக்குச் சென்றிருக்கலாமே. அவரா இந்நடுநிசியில் இவ்விடம் வருவார்? ஒரு நாளுமில்லை. ஆனதால், இக்காலடிச்சத்தம் பூரணத்தினுடையதுமல்ல, குணபூஷணம் பிள்ளையுடையதுமல்ல. இவ்வரவம் அந்நியர் வருகையையே குறிக்கின்றதென்பதிற் சந்தேகமில்லை. இருக்கட்டும். அக்காலடிச்சத்தம் எதை நோக்கித்தான் செல்கின்றதெனப் பார்ப்போம்" என்று யோசனை செய்து கவனித்துக்கொண்டிருக்கும் பொழுதே, அவ்வரவமும் இவனது அறையையே நோக்கியது. ஆகவே, பாலன், "என்ன ஆச்சர்யம்! காலடிச்சப்தம் நம் அறையையே நாடுகிறதாகத் தெரிகின்றது. வாயிலோ பூட்டப்பட்டிருக்கிறது. அந்நியர் வரமுடியாது. அவ்விதமிருக்கத் திருட்டுத்தனமாய் இவ்விடம் வந்தால், யார் வரக்கூடும்?" என்று மறுபடியும் ஆலோசித்துக்கொண்டிருக்கும் பொழுதே, அக்காலடிச் சத்தம் மெதுவாக வந்து திடீரென்று பாலனின் அறை வாயிலண்டையிலேயே நின்றுவிட்டது.

அச்சமயம் பாலன், "வாயிலண்டையில் வந்து நிற்பது யாராயிருக்கலாம்? வாயிலண்டை வந்தும் இரண்டு மூன்று நிமிஷங்களாகும் போலிருக்கின்றது. யாதொரு சத்தமும் கேட்டபாடில்லை. பூரணமாயிருந்தாலும் உடனே கதவைத் தட்டுவாள். அதுபோலவே பூஷணம் பிள்ளையுஞ் செய்வார். அவைகளுக்கு மாறாயிருப்பதால் வந்து நிற்பது ஓர் அந்நியன் என்பதும், ஏதோ ஓர் அதிரகஸ்ய கார்யத்தின் பொருட்டு வந்து நிற்கின்றானென்பதும் விளங்குகின்றது. இன்னவன்

யாராயிருக்கலாம்? ஒரு வேளை நான் இங்கிருப்பதையும், நான் வந்திருப்பதின் கருத்தையும் அறிந்து அமரசிங்கனென்னை யொழிக்கவெண்ணி வந்திருப்பானோ?" என்று யூகித்துக் கொண்டிருக்கும் பொழுதே, கதவைத்தட்டின சத்தங் கேட்டது. உடனே, "என்ன வந்தபோதிலும் சரி. அமரசிங்கா யிருந்தால் சுட்டுவிடுகின்றேன்" எனத் தைரியங்கொண்டு கையில் கைத்துப்பாக்கியை மறைத்துப் பிடித்தவனாய், கம்பீரத் தொனியுடன் "யாரது அங்கே? உள்ளே வரலாம் "என்றான்

உடனே கதவு தள்ளப்பட்டது. உச்சி முதல் உள்ளங்கால் வரை கறுப்புடை தரித்துள்ள ஓர் உருவம் வாசலண்டையில் அசைவற்று நின்றது. அவ்வுருவின் கையில் இருலிகிதமும் இருந்தன. அதைக்கண்ட பாலன் சிறிது வெருண்டான். என்றாலும், 'தைரியம் புருஷ லக்ஷணம்' என்றதற்கொப்பத் தைரியத்தைக் கடைப்பிடித்து "நீவிர் யாவர்? இங்கு வந்த காரியமென்ன?" என்று வினவினான்.

வந்த மனிதன், பிரதியுத்தரமாகப் "பாலா! என்ன சொல்லப்போகின்றேன்!" என்ற இவ்வார்த்தைகளுடன் உள் நுழையப் பாலனுக்கு யாது செய்வதெனத் தோன்றாது, சம்பாஷிக்கவும் சக்தியற்றவனாய் ஸ்தம்பித்து நிற்க, அம்மனிதன் கண்களினின்று கண்ணீர் கலகலவென்றொழுகியோட

"அப்பா! பாலா! என்ன செப்புவேன்! நீயும் மனோன்மணியும் இவ்விடம் வந்த இரண்டாம் மாதம் பத்மா விஷக் காய்ச்சலால் பீடிக்கப்பட்டு ஒரு மாத காலம் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். அச்சமயம் நான், "என் கண்ணே! நம் மைந்தர்கட்குக் கடிதம் போக்கி அவர்களை இவ்விடம் வரவழைக்கலாமா?" என்றேன். அதற்கு அவள், நாம் ஏன் அவர்களை வீணே யழைத்தல் வேண்டும்; நாம் இப்பொழுது கடித

வெகுவாய் வாய்விட்டலறிப் பாலனின் கழுத்தைக் கட்டியழ, பாலனுந் தமையனுஞ் சோகக் கடலிலாழ்ந்தாரெனினும், பின் ஒருவாறு தத்தேறித் தன் தந்தையின் துயரைத் ஆற்ற உன்னி ஒருவாறாக அவர் துயரைப் போக்கினான்.

சயபுத்தி யடைந்த சோமகனசிங், "பாலா! நீ இவ்விடம் என்ன செய்துகொண் டிருக்கின்றாய்? மகேன்மணியை எவ் விடம் விடுத்திருக்கின்றாய்?" என்று வினவ,

"அப்பா! யானிங்கு எனக்குத்தெரிந்த சித்திர வேலையாற் கனவான்களுக்குப் படம் வரைந்து கொடுத்து அதனாற் கிடைக்கும் ஊழியத்தாற் காலத்தைக்கழித்து வருகின்றேன். தங்கையை ஓர் பெண் பாடசாலையில் விடுத்துக் கல்வி கற்கு மாறு செய்திருக்கின்றேன். அப்பள்ளியின் தலைமை உபாத் தினி தங்கையை மிக்கப் பரிவுடன் பார்த்து வருகின்றார்கள். மேலும் மகேன்மணி நாளுக்கு நாள் கல்வி கேள்விகளில் மிக வுந் திறம்பெற்று வருகின்றதாகவும் தெரிகின்றது. யான் போய்த் தங்கையை அழைத்து வருகின்றேன். பார்க்கின்றீர் களா! தங்களைப்பார்க்கத் தங்கைக்கும் ஆர்வமதிகம்." எனப் பதிலுரைத்தபடியே சட்டென்றெழுந்தான் பாலன்.

"பாலா! என் வீணில் அழைத்துவர எண்ணுகின்றாய்! நான் புத்திரியைப் பார்ப்பதினால் என்னுடைய துக்கம் இன் னும் அதிகரிக்குமே யொழிய, ஆறாதே. ஆகையால், குழந் தையை அழைத்து வரவேண்டாம். நானும் பத்மாவைப் பிரிந் தபொழுதே இவ்வுலகத்தை வெறுத்துவிட்டேன். இனி இவ் விடம் ஒரு நாளுமிருக்க மனஞ்சகியேன். நான் எங்காகிலும் சென்று ஜீவிக்கலாமென எண்ணுகின்றேன். மகேன்மணிக்கு அவளுடைய விலாசம் எழுதி வந்துள்ள கடிதத்தைக்கொடுக்க மறந்துவிடாதே. நீ எப்பொழுது போய் அவளைச் சந்திக்கலா மென்று எண்ணுகின்றாய்?" என்று கேட்டார் தந்தை.

"அப்பா! யான் வாரமொருமுறை தங்கையைச் சந்திப்பது வழக்கம். இன்று போயவளைப் பார்க்கலாமென்றெண்ணுகின்றேன். அப்போது கடிதத்தையுங் கொடுத்துக் கொள்கிறேன். என்னருமைப் பிதாவே! நீங்களேன் இவ்விடமிரேனென்று சொல்லவேண்டும்? அம்மாளிருப்பினும் நாங்கள் அவர்களைக்கண்டு அகமகிழ்ந்து கொண்டிருப்போம். தாங்கள் எவ்விடத்திற்குப்போக விரும்பினும் அநுமதி தருவோம். தாங்களும் நினைத்த இடத்திற்குப் போகலாம். அவ்விதமிருக்கத் தற்போது, தாயற்ற சேய்களாயிருக்கும் எங்களை விட்டுப்பிரிதல் தங்களுக்கழகல்ல. மேலும், அம்மாளுக்குப் பின் தங்களையல்லால் வேறு யாவர் எங்களுக்குத் துணைநிற்பர்? நிற்க, யானிருக்கத் தாங்கள் ஏன் காணாத ஊர்களுக்குச் சென்று கஷ்டத்துடன் ஜீவிக்கவேண்டும்? ஆனதால், தாங்கள் ஒன்றும் வழக்காடாது என்னுடனேயே இருக்கவேண்டுமென்று மிகவும் மன்றாடுகின்றேன்"

"அப்பா! பாலா! நீ சொல்வது யாவும் உண்மைதான். அதனைப்பற்றிப் பின்னர் யோசித்துக்கொள்ளலாம். ஆனால் இப்பொழுது என் மனப்படி நடந்துகொள்ள எனக்கு நீ அநுமதி தரல்வேண்டும். இல்லையேல் வெகுசீக்கிரத்தில் நான் பத்மாவின் நினைவால் உயிரிழப்பேன். எனக்காக நீ ஒருபோதும் கவலை கொள்ளவேண்டாம். நீ என்ன சொல்லினும் தற்போது அவ்வார்த்தைகளுக்குச் செவி கொடேன். பிதா என்று நீ கருதும் பாசம் ஒருவேளை அது எனக்கே நாசம். நான் வேற்றூர் செல்வது நிச்சயம். விடைதா பாலா!"

தன் தந்தையை அவருடைய எண்ணத்தினின்றும் மாற்ற முடியாமை தனைக்கண்ட பால்சிங், "ஆமப்பா, 'இவ்விடமிரேன். அயலூரேகப்போகிறேன்' என்றுரைக்கின்றீர்களே, எந்த இடத்தைநாடித் தான் போக உங்கள் உத்தேசம்?"

"இன்ன இடமென்று என்னாற் சொல்லவுமுடியாது. எவ்வூருக்குச் செல்வேனென்பதும் எனக்கே தெரியாது. என் மனதிற்கு வந்த இடத்திற்குச் செல்வேன்."

"அப்பா! இன்ன இடமென்று குறிப்பிடாவிடில், யான் தங்களை வேண்டிய நேரத்து எவ்வாறு தான் வந்தடைவது? தங்களுடைய இருப்பிடம் தெரிந்தாலல்லவோ, யான் சிரமமின்றித் தங்களை வந்தடையலாம். அவ்விதமிருக்கத் தாங்களேகும் ஊரின் பெயரை ஏன் தெரிவிக்கலாகாது?."

"பாலா! நான் போகும் இடத்தின் பெயர் நீ அறிய வேண்டுவதில்லை என்னும் நோக்கத்துடன் பகர்கின்றேனென நினையாதே. உனக்குத் தெரிவிப்பதால் எனக்கென்ன இடையூறு நேரிடும்? வாஸ்தவத்தில் நான் எவ்வூருக்கு அல்லது எத்தேசத்திற்குப் போகலாமென்று இன்னும் நிச்சயித்தபாடில்லை. என்னுடைய விலாசம் உனக்கு அவசரமாயிருக்குந் தருணம் 'தேசபக்தன்' என்னும் பத்திரிகையில் 'மோகன பக்தர் என்பவருடைய விலாசம் தெரிந்தவர்கள் தயவுசெய்து அனுப்புங்கள்' என்று பிரசுரி. நான் எவ்விடம் சென்றபோதிலும் உன் பொருட்டு அப்பத்திரிகையின் சந்தாதாரனாகி நான் செல்லும் இடங்கள் யாவற்றிற்கும் அதனை வரவழைத்துக்கொள்கிறேன். என் விலாசம் உனக்கு என்று தேவையோ அன்று உன் கைக்குக் கிட்டும்படி அனுப்பி வைத்துக் கொள்கிறேன். அதுதான் நல்ல மார்க்கம். ஆனதால் அதனைப்பற்றி நீயொன்றும் நினைக்கவேண்டாம்."

"அப்பா! அதுவும் நல்லதோர் வழிதான், சரி,, நான் தடுக்கவில்லை. அவ்விதமே செய்து கொள்கிறேன்."

"போய் வரட்டுமா? பாலா! மனோன்மணி கவனம்."

"அப்பா! போய் வாருங்கள். நமஸ்காரம். தங்கையைப் பரிவுடன் பார்த்துக்கொள்கிறேன்" என்றதும் தனதருமை மைந்தனை ஆசீர்வதித்து மறைந்தனன் மோகனசிங்.

தன் தந்தையின் பிரிவை ஆற்றொண்ணாத் துயருடன் கண்டேங்கிக்கொண்டிருந்த பாலசிங், மோகனசிங் மறையவும், "சோதிச்சுடரே! என் செய்வேனினி! அன்னை முகத்தில் விழிக்கப் பாக்கியமற்றவனாயினேனே. அத்துயரை ஒருவாறு தந்தை முகத்தைக்கொண்டு நீக்கிக்கொள்ளலாமென்று தேறி நிற்க, தந்தையும் சொல்லொண்ணாத் துயருடன் வேற்றிடம் போயினரே! என் செய்வது!"

"அடே! இக்கதிக்கென்னை ஆளாக்கிய அமரசிங்! உன் கதியை அதோகதியாக்கினேனல்லவா! நான் ஆண் சிங்கம். மெய்யைப் பொய் வெல்லாதென்பதை முற்றும் மறந்து எங்களை இவ்வித ஸ்திதியிலாழ்த்தினையே! தெய்வச்சித்தம் எங்ஙனமுளதெனப் பார்ப்போம். இருக்கட்டும். ஆஹா! மறந்துவிட்டேன். என்ன எழுதியிருக்கக்கூடும்?" என்று கலங்கிக்கொண்டிருந்த பாலன் அருகில் தன் தந்தை கொணர்ந்து வைத்த இருகடிதங்களை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு தன் பேருக்கு எழுதப்பட்டிருந்த கடிதத்தை எடுத்து அதைப் பிரித்து மிக்க ஆர்வத்துடன் வாசித்தான்.

திருவிதாங்கூர்,

ஆவணி மீ 13உ

என்னருமைப்பாலா! கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக. நான் முதலில் மிகுதியும் வியாதி கண்டிருந்த பொழுது உங்களிருவருக்கும் கடிதமெழுதி உங்களிருவரையும் வரவழைக்கலாமென உன் தந்தை என்னிடம் கேட்டார். அப்பொழுது எனக்குச் சிறிது குணமாகத் தோன்றியதால் வேண்

டாமெனத் தடுத்தேன். இப்பொழுதோ ஜுரம் திடீரெனத் திருப்பிக்கொண்டு என்னை வெகுவாய்க் கஷ்டப்படுத்துகின்றது. வைத்தியரும் கைவிட்டு விட்டதாகத் தெரிகின்றது. நானும் இனிப்பிழைப்பது அரிதிலும் அரிதுதானென்றெண்ணியே கடைசியாக உங்களிருவருக்கும் இக்கடிதங்கள் வரையத் தலைப்பட்டேன். இப்பொழுதோ என்னால் எழுதக்கூட முடியவில்லை. என்கிலும் அக்கஷ்டத்தையும் பாராட்டாது இதுதருணம் இச்சிறு லிகிதம் எழுதலானேன்.

என்னருமைக் குழந்தாய்! நீயறியாததும் நானுனக்குச் சொல்லவேண்டியது மொன்றுமில்லை என்றபோதிலும் பின்வரும் வாக்கியங்களைமட்டிலும் நெஞ்சத்திருத்திக்கொள்வாய். அதாவது சதா உன் தந்தையுடனே உன் காலத்தைக்கழிக்க உன்னாலான பிரயாசைப்படு. மனோன்மணிக்கு உன்னையன்றி வேறு துணையில்லை யாதலால் மனோன்மணியின் பேரில் மிகுந்த பிரியமாய் இருந்துகொள். ஏனென்றால் சோகக்கடலில் மூழ்கி இருக்கும் உன் தந்தை அன்னவளைக் கவனிப்பது கூடாத கார்யமென்று தோன்றுகின்றது. அவள் உன் அடைக்கலம். நானுனக்கு வரைந்திருக்கும் முக்கியமான காரியங்களில் இதுதான் அதிமுக்கியமென்றறி. எடுத்த காரியத்தைத் தொடுத்துமுடிக்கப் பிரயாசைப்படு. வீணாகக் காலத்தைக் கடத்தாது எவ்விதத்திலும் உன் பிதாவிற்கு வந்த அபகீர்த்தியை நற்கீர்த்தியாக்கப் பார். அப்பொழுது தான் நீ என்னுடைய மகனெனக் கொள்ளத்தக்கவன். நீ நிறைவேற்றக்கடமைப் பட்டுள்ளது இலேசான காரியமல்ல. மிகவும் கவனமாயிருந்து கொள். இதோ எனது கடைசி முத்தம்.

இங்ஙனம்,

உனதருமைத்தாய்,

பத்மாவதி.

என்று வரைந்திருந்த இக்கடிதத்தைக் கண்ணுற்ற பாலனுடைய மனநிலையை இவ்விடம் எழுதவேண்டியதவசியமோ? இல்லை. இதை வாசிக்கும் நண்பர்களே இலகுவில் ஊகித்துக் கொள்ளலாம். அவ்விதமே கையில் கடிதத்தை வைத்துக் கொண்டு மேஜையின் மீது அழகிய தன் வதனத்தை வைத்து முத்துப்போலுதிர்த்தான் கண்ணீரை. தாயை நினைத்தான்; தந்தையை நினைத்தான்; பின்னர் மணமாகாத தன் தங்கையையும் நினைத்தான். இதுவெல்லாம் ஒருவாறு அவனது மனதைப் புண்படுத்தாதொழியினும், "வீணாகக்காலத்தைக் கடத்தாது எவ்விதத்திலும் உன் பிதாவிற்கு வந்த அபகீர்த்தியை நற்கீர்த்தியாக்கப் பார். அப்பொழுது தான் நீ என்னுடைய மகனெனக் கொள்ளத்தக்கவன்" என்ற இவ்வாக்கியங்களை அவன் நினைத்தலும், அவனது நெஞ்சத்தை வாள் கொண்டு சேதித்தது போன்றிருந்தது. தான் ஒன்றையுங் கவனியாது தந்தையை நிரபராதி என்று உண்மை விளக்கின அன்றுதான், நானெடுத்த ஜன்மம் மானிட ஜென்மமல்லாது மற்றபடி 'நாயினுங்கடையான ஜன்மமெடுத்தவனாவேன்' என்று மனப்பூர்வமாய்ச் சபதம் செய்துகொண்டு மற்றைய கடிதம் யாதாயிருக்கலாமெனக்கருதி அதனை எடுத்து விலாசத்தைப் படித்தான். அது மனோன்மணி விலாசத்திற்கிருந்தது.

அன்று காலை மனோன்மணியைப் போய்ப்பார்க்கும் நாளாகையால் உடனே தன்னுடன் கடிதத்தையும் எடுத்துக் கொண்டு மிகுந்த விசனத்துடன் பெண்பாடசாலை சென்று மனோன்மணியை அழைப்பித்தான். தன் தமையனைப்பார்க்க மிகுதியும் ஆர்வத்துடன் ஓடிவந்த மனோன்மணி, பால்சிங்கின் விசனக்குறியை யுணர்ந்து திகில்கொண்டு, "அண்ணா! தங்களுக்குற்றதென்ன? ஏன் இவ்விதத் தோற்றத்திலிருக்கின்றீர்கள்? என்ன நேரிட்டது?" என்று மிகப் பரபரப்புடன் வினவ,

மனந்தளர்ந்த பாலன் யாதொன்றும் பதிலுரையாது, மனோன் மணியிடம் தான் கொண்டுவந்துள்ள கடிதத்தைக் கொடுத்தான். கொடுக்கவும் மனோன்மணி எழுத்தினால் தன் தாயின் கடிதமென நிச்சயித்துத் திறந்து வாசித்தாள் அக்கடிதத்தை.

திருவிதாங்கூர்,

ஆவணிமீ 13உ

எனது பிரிய குமாரி மனோன்மணி! எங்களுக்குப் பின் இவ்வுலகில் உனக்கு உற்றதுணை பாலனையன்றி வேறில்லை. ஆதலால் பாலனுக்கு என்றும் கீழ்ப்படிந்து அவன் சொற் பிரகாரம் நடந்துவர முயலல் வேண்டும். எனக்கோ இன்று ஜுரம் அதிகமாய் விட்டது. நான் பிழைப்பது கூடாத காரியம். அதிகம் எழுதக்கூடவில்லை. பாலன் கடிதத்தையும் பார்த்துக்கொள். இதோ எனது கடைசி முத்தம். ஒன்று மறந்து விட்டேன். அதாவது, பாலன் தந்தையின் பொருட்டு எடுத்துக்கொள்ளும் பிரயாசைக்கு நீ ஓர் ஊன்றுகோல் போல் நின்று உனது வாக்குறுதிப்படி உதவவேண்டுமென்பதே எனது கடைசிக் கட்டளையென்று மனத்திருத்திக் கொள்.

இங்ஙனம்,

உனதருமைத்தாய்,

பத்மாவதி.

இக்கடிதத்தை வாசித்து முடிந்தவுடன் மற்ற சங்கதிகளொன்று மறியாதவளான மனோன்மணி, தன் தமையனை நோக்கிச் "சரியண்ணா! அப்படியானால் நாமிருவரும் நாளையே புறப்படலாமா? என்று பால்சிங்கை வினவினாள்.

"எங்கு?"

"சேரநாட்டிற்கு."

"எதற்கு?"

"அம்மாளைப் பார்க்க"

"ஐயோ! மனோன்மணி! என் செய்வோம்! அப்பா இரவு தான் எனதறைக்கு வந்து......"

"அப்பா வந்தார்களா? வந்து..."

"எனதறைக்கு வந்து இருகடிதங்களைக் கொடுத்துப் பின் அம்மாள்......"

"அம்மாள்"

"என்ன சொல்லப்போகின்றேன்? அம்மாள் இறந்து போனதாகச் சொன்னார்கள்"

"என்ன? என்ன? அம்மா இறந்துவிட்டார்களா?"

"ஆம் மனோன்மணி."

"அம்மா! ஐயோ! அம்மா! உங்களை எப்பொழுது பார்க்கப்போகின்றேன்! உங்கள் முகத்தில் விழிக்கக்கொடுத்து வைக்காத பாவிகளானோமே! அண்ணா! என் செய்வோம்?!" என்று கதறியழஆரம்பித்த மனோன்மணி பிரக்ஞையற்றுக் கீழ் வீழ்ந்தாள். மனோன்மணி படுந்துயரைக்கண்டு மனஞ் சகியாத பாலனும் தன் உணர்வற்றுத் தான் ஓர் சிறு குழந்தையைப்போல் கதற ஆரம்பித்தான்.

அழுகுரல் கேட்ட தலைமை உபாத்தினி ஓடோடியும் வந்து கீழேகிடந்த கடிதத்தைப் பார்த்து அதைக்கொண்டு அவர்கள் அழுகைக்குக் காரணம் பத்மாவின் பிரிவே எனத் தெரிந்து பாலனைத்தேற்றி, மூர்ச்சித்துக்கிடந்த மனோன்மணியைத்தூக்கித் தன் மார்போடணைத்து வேண்டிய சிகிச்சைசெய்ய, மனோன்மணி புத்தி தெளிந்தெழுந்தாள். எழுந்த

மனோன்மணியை உபாத்தினி பலவாறாகத்தேற்ற மனோன் மணி தன் துக்கத்தை ஒருவாறு ஆற்றிக்கொண்டு தன் அண் ணுவுடன் சம்பாஷிக்கத் தொடங்குவாளாயினள்.

"அண்ணு! பின்னர் அப்பா எங்கே?"

"மனோன்மணி! நேற்றிரவே அம்மாளிறந்த சங்கதிகள் யாவும் என்னிடம் உரைத்துத்தான் கண்காணுச் சீமைக்குச் செல்வதாயும் என்னிடமுரைத்து, உன்னிடமும் கேட்டதாகச் சொல்லச்சொல்லி, இங்கு நம்முடன் இருந்து வரும்படி யான் எவ்வளவோ மன்றுடியும் காதுகொடாமல் மறுத்து ஒரே பிடிவாதமாகப் பிரிந்தேகிவிட்டனர்."

"பின் நாம் எங்ஙனம் அவர்களைக் காண்பது?"

"அதற்கு ஓர் வழி சொல்லியிருக்கிறார்கள். அதனைப் பற்றிப் பேசத் தற்சமயம் நேரமில்லை யாதலால் நாமிருவரும் இனிமேல் நடக்கவேண்டிய கார்யங்களைச்செய்தல் வேண்டும். புறப்படு போகலாம். இனி நீ இங்கிருக்க வேண்டியதில்லை. எனக்குதவி செய்யவேண்டிய காலமுனக்கிதுவே யாகும்."

"அம்மா! என் தங்கைக்கு வேண்டியவனவற்றைக் குறை வறாது நல்கி அருமையுடன் பரிபாலித்துவந்த தங்களுக்கு யான் கைம்மாறு புரிவதென்! யான் என்னுயுள்பரியந்தம் தங் களின் அருங்குணத்தை மறவேன். மனோன்மணிக்கு விடை கொடுங்கள். நாங்களிருவரும் எங்கள் இல்லம் செல்லவேண் டியதவசியமாயிருக்கிறது; விடை பெற்றுக்கொள்கிறோம்."

"மனோன்மணி! விடை பெற்றுக்கொள்."

"அம்மா! போய் வரட்டுமா?" என்று மாசுபடிந்த முகங் கொண்டு விடை கேட்டனள் மனோன்மணி.

"மனோன்மணி! நாமிருவரும் பிரியக்காலம் நேர்ந்தது போலும். என் செய்வது! எல்லாம் வல்ல இறைவன் செயலிது 'அவனன்றி ஓரணுவுமசையாது' போய் வருகின்றனையா? மனோன்மணி' மறந்துவிடவேண்டாம்."

"அம்மணி! ஒரு நாளும் மறவேன். இப்போது உள்ள நிலைமையில் யாதொன்றும் இதற்குமேற் பேசக்கூடவில்லை. நமஸ்காரம். போய்வருகின்றேன் அம்மணி."

"போய் வா. மங்களமுண்டாவதாக."

"அம்மணி! இருங்கள். போய் வருகின்றேன்."

"போய்வா பாலா! உனக்கு நான் ஒன்றும் சொல்லவேண்டுவதில்லை; மனோன்மணியைக் கவனமாய்ப் பார்த்துக்கொள்."

"உபாத்தினியிடம் விடைபெற்றுக்கொண்ட இருவரும் குணபூஷணம் பிள்ளையவர்கள் வீடடைந்து அவர்களுக்கென விடப்பட்டிருந்த அறையிலிருந்து வெகு நேரம் வரை ஒருவரை யொருவர் பார்த்துப் பார்த்து விம்மி விம்மி யழுதுகொண்டேயிருக்க, அவ்விடம் வழக்கம்போல் பாலன் வரையும் படங்களைப் பார்க்கவரும் குணபூஷணம் பிள்ளையவர்கள் எட்டு வயது நிரம்பப்பெறாத தன் புத்திரி மரகதத்துடனும், புத்திரன் ஆறுவயதுள்ள ராஜுவோடும் அவ்விடம் வந்தார். வரவும், இவ்வித நிலையிலிருப்பவர்களைப்பார்த்து இன்னதென்றறியக்கூடாது தயங்கி நிற்கப்பாலன் தாயின் பிரிவையுரைக்க, அவரும் அவர்கள் மேல் வைத்த அன்பினால் மிகுதியும் துக்க சாகரத்திலாழ்ந்தவராயினர். பின்னர் அவர் தம் மனதைத் தேற்றிக்கொண்டு அவர்களிருவரையும் ஒருவாறு தேற்ற எண்ணங்கொண்டவராகி அவர்களைப் பார்த்து,

"பாலா! மனோன்மணி! அழாதீர்கள். அழுவதால் யாது பிரயோஜனமென்பது நீங்களறியாத விஷயமா? ஆண்டாண்டு

தோறும் அழுதுபுரண்டாலும் மாண்டார் மீள்வரோ? ஒரு நாளும் மீளார். மேலும் சாதலும் பிறத்தலும் வினையின் பயன். இன்பம் வந்துற்ற காலை களிப்பெய்துவதும், இடுக்கண் வந்தடையுங்கால் துயரிலாழ்வதும் மானிடர் இயற்கையே யாயினும், இரண்டையும் ஒன்ருய்ப் பாவிப்பர் கற்றறிந்தோர். நாம் எண்ணுகிறபடி காரியம் நடந்தேறுமா? நாம் விரும்பினும் விரும்பாவிடினும் வந்தடையும் நம்மை நமது வினையின் பயன். இதை யெல்லாம் யோசிக்குமளவில் நன்மை தீமையாகிய இரண்டையும் நாமே தேடிக்கொள்கின்ரேமென்பதில் தடையில்லை. அவ்விதமிருக்க, நம்மால் என்ன முடியும்? வீணாக அழுது மனதைப் புண்படுத்திக்கொள்ளாது இனி நடக்கவேண்டிய கார்யங்களை யோசியுங்கள்.''

"மேலும், இன்பம் நுகருங்காலை அவ்வின்பம் நம்மாலேயே கிட்டியதென்றுகொண்டு, துன்பம் வந்தடுக்குங்கால் பிறரையும் கடவுளையும் நோவதே நம்மியல்பு. ஆனதால் அவ்வித எண்ணங்களுக்கு இடங்கொடாது நடக்கவேண்டிய கார்யங்களை இனித்தேர்ந்து செய்யுங்கள்.'' என்று பலவாருன தேறுதல் சொல்லி அவர்களிடம் உத்திரவுபெற்றுக் குணபூஷணம் பிள்ளை தம் மக்களுடன் இல்லஞ் சென்றனர்.

குணபூஷணம் பிள்ளையைப் போய் வரும்படி விடைகொடுத்தனுப்பிய பால்சிங், அவர் உரைத்தது யாவும் உண்மையே எனத்தேறித் தன் வருத்தத்தினின்று மீண்டு, வெகுவாய்ப் பிரலாபித்துக்கொண்டிருந்த தன் தங்கை மனோன்மணிக்கு இன்னும் வேண்டிய ஆறுதல் மொழிந்து "தங்காய்! குணபூஷணம் பிள்ளையவர்கள் நவின்ற வண்ணம், மாண்டோர் ஒரு நாளும் மீளாராகையால், இனி நடக்கவேண்டிய காரியங்களைச் செய்வதுதான் அத்யாவசியம். உனக்கும் அக்கார்யம் தெரியாததன்று. நம் அம்மாள் நம்மிருவருக்கும் எழுதியுள்ள கட-

மையைச் செவ்வனே நடத்துவித்த அக்காரியம். அப்புறஞ்சி றந்தப்பெறுமென்றபோதும் சாமியின்றியிருத்தல் தகாது, நீ, எப்பொழுதும் அம்மா உனக்கெழுதிய வண்ணமே, நான் செய்யப்புகும் காரியங்கள் யாவற்றிற்கும், எனக்கு ஓர் ஊன்று கோலாக நிற்றல்வேண்டும். நானும் இனிமேல் பொருள் வரு வாய்க் கோர்வழி செய்தால் தான்; நம் வயிற்றை முதலிற் போஷிக்க வேண்டிய காரியங்களுக்குத்தனியாகப் பணத்தை நீதம் பண்ண முடியும். ஏனென்றால் 'பொருளிலார்க் கிவ்வுல கமில்லை' என்பது ஆன்றோர் வாக்காகும். ஆனதால், முதலில் எங்கு எனக்கேற்ற வேலை கிடைக்குமென்பதை அறியும்பொ ருட்டு மேலே காவி பென்றால் தகவற் கொடுக்குமிடம் வரை போய் மேலே எனக்கு ஏதாவது கிடைக்குமாவென்று பார்த்து வருகின்றேன். போய் வரட்டுமா? கவனமாய் இருந்துகொள் வாயா? அல்லது பூரணத்தைத் துணைக்கழைத்து உன்னுடன் வைத்துவிட்டகலட்டுமா?" என்றான்.

"அண்ணா! ஜாக்ரதையாக இருந்துகொள்கிறேன். பூர ணம் தேவையில்லை. நீங்கள் போய் விசாரிக்கவேண்டியன விசாரித்துக்கொண்டு அவசியம் விரைவில் திரும்பிவிடுங்கள்."

"ஆகட்டும். போய் வருகின்றேன்" என்று மகேனன் மணிக்கு மறுமொழி கூறிக்குணபூஷணம்பிள்ளையவர்கள் கிர கத்தைவிட்டுத் தான் கருதிய இல்லமமைந்திருக்கும் மேலக் கோபுரவாசலையடைந்து அதனுடைய வாயிலில் நின்று கொண்டு மெள்ளக் கதவைத்தட்டினான் பாலன்.

தட்டவும், "யாரது?" என்றோர் அரவம் கேட்டது.

"ஐயா! யான் தான் பாலன்"

"என்ன சங்கதி? இப்படி வாரும் பார்ப்போம்."

"ஐயா! ஏதாவது வேலை இவ்விடத்திலாவது அல்லது எவ்விடத்திலாவது காலி இருக்குமாவெனத்தெரிந்து செல்ல வந்தேன்" என்றுரைத்த பாலனை அவ்விடமிருந்த ஆபீஸ் மானேஜரான ஞானப்பிரகாசம் பிள்ளை, "சற்று நேரம் அவ்விடமே தயவுசெய்து நில்லும். மேனேஜரண்டைக்கு வந்துவிடாதீர். சிறிது நேரம் பொறுத்துக்கொள்ளும்" என்று பாலனுக்குச் சொல்லி மேஜைக்குச் சிறிது தூரமாகவே நிறுத்தி வைத்துக்கொண்டு, மேஜையின் ஓர் அறையை இழுத்து அதிலிருந்து ஓர் கணக்குப் புத்தகத்தை எடுத்து ஓர் பக்கத்தைத் திறந்து அதிலுள்ள ஓர் படத்தையும் பாலனின் முகத்தையும் சுமார் ஐந்து நிமிஷம் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்து பின்னர்ப் பாலனை நோக்கி, "உம் பெயர் என்ன; உம்முடைய ஊர் எது? உள்ளது சொல்லும்" என்று கேட்டார்.

அதற்குப்பாலன், இது என்ன புதுமை என்றதிசயித்து "என்னுடைய பெயர் பாலபக்தன்" என்றான்.

"உனது தந்தையர் பெயர்?"

"எனது தந்தையை 'மோகனபக்தர்' என்றழைப்பர்" என்று சிங்பட்டத்தை மாற்றிப் பக்தரென்ற பட்டத்தை ஏற்றிப் பதிலுரைத்தான் பாலன்.

"நீர் என்னை ஏமாற்ற முயலவேண்டாம். ஏன் மறைக்கின்றீர்? மெய்யைப்பொய் வெல்லாதென்பதை அறியீரோ? 'சிங்'கென்ற பட்டத்தை மாற்றிப் 'பக்தர்' என்ற பட்டத்தை வைத்துக்கொள்ளவும் உமக்கு மனம் வந்ததா? பிள்ளாய்! என்னிடம் மறைக்கவேண்டாம். உம் தந்திரசாகஸ்யங்களெல்லாம் என்னிடம் பலிக்காது. மோகனசிங் துரத்துண்ட நாள் முதல் இதுவரை ஓர் கல்யாணம் செய்திருந்தால் அவருக்குப் பிறந்திருக்கும் குழந்தை நீர் தான். ஏனெனில்

உம் சாயல் அவருடையதை ஒத்திருக்கின்றது. ஏன் ஏமாற்று கின்றீர்? உள்ள துரையும்" என்று ஞானப்பிரகாசம் பிள்ளை சொல்லி வாய்மூடு முன்னமே, பாலனின் முகம் திடீரென்று வேறுபட்டது. உடனே, பாலன், "இவர் யாராயிருக்கக் கூடும்? நம்முடைய தந்தையையும் நம்மையும் நன்கறிந்தவர் போல் காணப்படுகின்றதே. இவர் நம்மை அறிந்திராவிடில் பட்டம் மாற்றின சமாச்சாரத்தை எவ்விதம் இவர் அறியக் கூடும்? என்ன ஆச்சரியமாயிருக்கிறது! ஒருவேளை இவர் என் தந்தையை நன்குணர்ந்த அமரசிங்கின் ஆட்களிலொரு வராயிருப்பரோ? என்ன ஒன்றும் விளங்கவில்லை. அல்லது ஒருவேளை நம் தந்தையின் ஆப்தமித்திரரான குலோத்துங் கராயிருப்பரோ? இவர் குலோத்துங்கராயிருந்தால் நம் தந் தையின் பொருட்டு உயிரையும் மதியாமல் ஒப்புவந்து நடந் ததை நடந்தவாறே சொல்லி யிருப்பரே. ஆதலால் குலோத் துங்கர் அமரசிங்கின் மாய்கையால் இறந்திருக்கவேண்டும். அல்லது அமரசிங்கின் கொடுமையால் ஒருவேளை சிறையில் தான் ரகஸ்யமாய் அடைக்கப்பட்டிருப்பார். இக்காரணங்க ளால் அவராகமாட்டார் இவர். இவர் யாரென்று தான் தெளிவோம்" என்றிவ்வாறு சற்றுநேரம் சிந்தித்த பின்,

"ஐயா! எங்களுக்குள்ள பட்டம் பக்தரேயல்லால் சிங் கென்ற பட்டமல்ல. ஒருவேளை எங்களுடைய பெயர்களுடன் அப்பட்டத்தைக் கொண்டுள்ளவர்கள் உலகத்தில் வேறெத் தனையோ பேர் இருக்கலாம் என்று நினைக்கின்றேன்"

"பிள்ளாய்! என்னிடம் உன் பாச்சாபலிக்காது. உன் னுடைய தந்திரமான வார்த்தைகளைக் கண்டுகொண்டேன். நீ சோழநாட்டினின்றும் துரத்துண்ட மோகனசிங்கின்

மகனையாவாய். இதிற் கொஞ்சமும் சந்தேகமில்லை. மோகன சிங்கைத் தேடிப்பிடித்துச் சிறைச்சேதம் பண்ணவே, மோகன சிங்கின் அடையாளத்தை எளிதிற்காண என்னுடன் அரசர் மோகனசிங் உருவடங்கிய ஓர்படம் கொடுத்திருக்கின்றார். இதோ பார்த்தனையா?" என்று தான் கணக்குப் புத்தகத்தில் வைத்துப் பார்த்துக்கொண்டிருந்த படத்தை எடுத்துக் காண்பித்து "மோகனசிங்கின் முகமும் உன் முகமும் ஒத்துக் காணப்படுகின்றன. நீ மோகனசிங்கின் மகன் தான். அகப்பட்டாயா? உன் தந்தை இருக்குமிடத்தைச் சொல்லாவிடில் இப்பொழுதுன்னை விடுகிறதில்லை. உன்னைப் பிடித்துச் சோழநாட்டிற்கு அனுப்பப் போகின்றேன்" என்று

"அடே! வீரப்பா! ஓடி வாடா. இவனைக் கட்டடா பிடித்து" என்று தன் வேலையாளை அழைப்பது போன்று அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு பாவனை பண்ணினார்.

பண்ணவே இளஞ்சிங்கமாகிய பாலன் ஒன்றுந்தோன்றாது கோபவெறிகொண்டு அங்குமிங்கும் ஓடிக் கதவுகளையும் ஜன்னல்களையும் பூட்டிக்கொண்டு, "என்னையா கட்ட ஆள் கூப்பிடுகின்றீர்? இச்சமயமே என்னுடன் வந்து நான் உம்மை இருக்கச்சொல்லும் நாள் வரை இருக்கவர மறுப்பீராகில் இதோ என் கைத்துப்பாக்கியால்" என்று ஞானப்பிரகாசம் பிள்ளை வயிற்றண்டை கொண்டுபோகவே, அதைக்கண்ட அவர் தன் இருகைகளையும் உயரத் தூக்கிக்கொண்டு அடக்க முடியாது நகைக்கவே, பாலன் பிரமை கொண்டான்.

அப்பொழுது ஞானப்பிரகாசம்பிள்ளை சொல்வார்; "பாலா! மெச்சினேன் உன் தைரியத்தை. உன் மனோதிடத்தை அறியவே நான் இவ்வாறெல்லாம் செய்தேன். உன்னுடைய காரியம் கைகூடும். நான் வேடிக்கையாக சொன்ன வார்த்தைகளைப்

பொருட்படுத்தாதே. நானோ உன் தந்தையின் ஆப்தமித்தி ரர்களிலொருவன். அவருடைய நன்மையையே இற்றைவரை கருதுபவன். என்னை வேறுமாறாக எண்ணவேண்டாம்.”

“நேற்றிரவுதான் உன் தந்தை என்னிடம் வந்து என் னைப் பார்த்துவிட்டுத் தான் ‘இன்னபக்கம் போவதாக இன் னும் நிச்சயிக்கவில்லை’ என்று சொல்லி வெகுவாய் உனதன்னை யின் பிரிவால் துக்கித்தும், உன்னுடைய சங்கதிகள் யாவற் றையும் உன் தங்கையின் அபிலாசையையும் கூறி, என்னிடம் உனக்கு ஆகவேண்டிய உதவியைச் செய்யவும் சொல்லி, அதற்கு என்னுடைய வாக்குறுதியும் பெற்று அளவில்லாச் சஞ்சலத்துடன் சென்றார். ஆகையால், பாலா! உனக்கு வேண்டியதைக் கேள். என்னாலானமட்டும் நீ எடுத்த காரியங் களுக்கெல்லாம் உதவி செய்கின்றேன்” என்று வசனிக்கவே, பாலன் ஒன்றுந்தோன்றாது தன் துப்பாக்கியுடன் பேசவும் நாவெழாது சுவர்மீது சாய்ந்துவிட்டான். இவைகளெல்லாம் கனவோ அல்லது நனவோ?” எனவும் கருதினான்.

பின்னர் ஒருவாறாகத்தேறி, “எல்லாம் எனையாளும் ஈசன்செயல்தான். முதலில் பீதியடையச்செய்த இவர் இறுதி யில் நமக்குதவிசெய்யத் துணிந்த எனதருந்தந்தையினருஞ் சிநேகர்களில் ஒருவராயினர். இதுவும் திருவுளச்சித்தமே.”

“இருக்கட்டும். இவர் நம்மை இன்னாரென்று இவ்வளவு சுலபத்திற் கண்டுகொண்டனரே. இவரைப்போல் இன்னும் அநேகர் நம்மை யாரென்று தெளிந்துகொள்வது மிகவும் எளி தென்பதில் தடையில்லை. யார் அறியினும் குற்றமில்லையே! ஆனால், வன்னெஞ்சு படைத்த அமரசிங் நம்மைக் காண்பானா யின் நம்மைத்தொலைத்து விட்டல்லவா மறுவேலை பார்க்க எண்ணுவான். அவன் வலையிலாசிக்குவேன்? அவனைக் கண்ட

துண்டமாக்கிவிட எனக்குத் தைரியமில்லையா? நானென்ன சூரனுடைய வயிற்றிற் பிறக்கவில்லையா? அவனும் மனிதன் நானும் மனிதன். அவனுக்குள்ள புத்தியும் நுட்பமும் எனக்கில்லையா? பார்க்கின்றேன், பயல் வரட்டும்'' என்று இவ்விதம் சிறிதுநேரம் ஆலோசித்து நின்ற பாலன் திடீரென ஞானப்பிரகாசம் பிள்ளையைப் பார்த்து, "ஐயா! தாங்கள் சொல்லிய யாவும் உண்மையே என்றபோதிலும், எனக்குள்ள ஓர் சந்தேகத்தை நிவர்த்திசெய்வீர்களென எண்ணுகிறேன். அதாவது, என்னுடைய சிறிய தகப்பன் என் தந்தைக்கு விரோதமாய்ப் பொய்ச்சாக்ஷி சொன்னது வாஸ்தவம்தானா? தங்களுக்கு நன்றாகத்தெரியுமா?'' எனக்கேட்கலுற்றான்.

"பாலா! இதிலென்ன சந்தேக நிவர்த்தியாகவேண்டியிருக்கிறது? 'குட்டிச்சுவரில் முட்ட வெள்ளெழுத்தா?' இதென்ன எனக்கு மட்டிலும் தெரிந்த சமாச்சாரமா? உலகம் பூராவும் அறியுமே அமரசிங்கின் கல்நெஞ்சை. உனது தந்தையர் பிரிவால் பிரஜைகளுக்குண்டான கிலேசம் இவ்வளவவ்வளவென உரைக்கமுடியுமா? பாவி அமரசிங்கிற்குத் தீரா நரகந்தான். கொலைபாதகன்.'' என்று ஞானப்பிரகாசம் பிள்ளை பாலனுக்குச்சொல்லி, மிக்க இரக்கம் வைத்துப் பாலனைப் பக்கத்தோராசனத்திருத்தி மோகனசிங்கின் விருத்தாந்தங்களை நன்கறிய ஆவல்கொண்டார். அதனை யுணர்ந்த பாலன், ஞானப்பிரகாசம் பிள்ளை அவனது தந்தையின் மித்திரர் தான் என்பதை நன்றாயறிந்த பின்னும், அவரிடம் பகர்வதால் தனக்காவது தன் தந்தைக்காவது யாதொரு தீங்கும் சம்பவியாதென உய்த்துணர்ந்ததின் மேல் தான், தன் தந்தை சேரநாட்டில் வசித்து வந்ததையும், அவ்விடம் அமரசிங் அவர்களைத் தொலைக்கப் பலவிதத்திலும் வழிதேடியதையும், தந்தையின்

பொருட்டுப் பாலன் பாண்டிநகர்க்கு வந்த காரணத்தையும், வந்த மூன்றுமாதமாகிய முந்தினநாள் தன் தாய் இறந்த துக்ககரமான செய்தியைத் தன் தந்தையார் மூலமாக அறிந்த விபரத்தையும், தாய் எழுதி யனுப்பிவைத்த இருலிகிதங்களின் சாரத்தையும், தன்னுடைய தற்சமய நோக்கத்தையும் உரைத்துத் தனக்குத்தகுதியான ஓர் வேலை சோழநாட்டிலேயே வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டனன்.

இவையாவும் வாட்டமுகத்துடன் மனதிருத்திய ஞானப்பிரகாசம் பிள்ளை பெருமூச்செறிந்து, "அமரசிங் உங்களைத் தொந்தரை செய்ய அங்குமா வந்தான்! கடவுள் அவனை இலேசில் விடார். நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். யாவும் இனி தேறியும்" என்று பாலனுடன் வார்த்தையாடிக்கொண்டிருக்கும் பொழுதே ஒருவன் ஓடிவந்து, "எஜமாங்களே! மஹாராஜா அவுங்க இந்தக்கடுதாசியே, ஒங்ககிட்டே குடுக்கச் சொன்னாங்க" என்று சொல்லி ஓர் கடிதத்தை அவரிடம் கொடுத்துப் பணிவோடு நின்றான்.

அதையவர் வாசித்தபின், "அடே! காளியப்பா! கடிதத்தை என்னிடம் கொடுத்துவிட்டதாகப் போய் அரசர்க்கறிவி. கையை நீட்டு. இந்த ஒரு ரூபாயை உன் வழிச்செலவுக்கு வைத்துக்கொள்" என்று அவ்வஞ்சற்காரனுக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டுப் பின் பாலனைப் பார்த்து,

"பாலா! சற்று நேரத்திற்கு முன் உனக்கு எவ்விடத்தில் வேலை வேண்டுமென்றாய்?" என்று கேட்டார்.

"ஐயா! சோழநாட்டில் வேண்டுமென்கிறேன்."

"அதிர்ஷ்டசாலி தான். எந்த இடத்தில் வேண்டும்?"

"அரண்மனையில் கிடைத்தால் தான் எனது எண்ணம் நிறைவேறும் பொருட்டுத் துப்புத்துலக்க எதுவாயிருக்கும்."

"பாலா! கடவுளே நம் பக்கமிருக்கிறார் போலும். இப்பொழுது அஞ்சலாட்கொணர்ந்த கடிதம் உனது பாட்டனாரும், சோழநாட்டதிபருமான வில்லியசிங் அரசரிடமிருந்து வந்திருக்கின்றது. இதுவரை அரண்மனைக் காரியாதிகளை மேல் நடத்திவந்த ஸ்ரீமான் சித்திரகவி வித்வான் முத்தையா பிள்ளையவர்கள் வேறோர் உத்தியோகத்தினிமித்தம் கேரள தேசம் சென்று விட்டதாகவும், 'அவருக்குப் பதிலாய்ச் சுமார் இருபத்தைந்து வயதுக்குக் கீழ்பட்ட சௌந்தரவடிவுள்ள வாலிபராயும், உயர்குலத்துதித்தவராயும், அரண்மனைக்காரியங்கள் நடத்தும் ஆற்றல் படைத்தவராயுமுள்ள ஒருவர் கிடைத்தால் நம்முடைய மாளிகைக்கு விரைவில் அனுப்பிவை' என்றெழுதி யனுப்பப்பட்டுள்ள கடிதமிதுவே; பார்" என்று பாலனிடம் கொடுத்துப் "பிரியமானல் ஒருவாரத்திற்குட் புறப்படு; நாளையே உனது வருகையை அரசர்க்குத் தெரிவிக்கிறேன்" என்றுரைத்ததுமன்றி, "என்று புறப்பட உத்தேசம்?" என்று மறுமுறையும் கேட்டார்.

அக்கடிதத்தைக் கண்டவுடனே பாலன் ஆனந்தக்கடலிலாழ்ந்தவனாய் ஞானப்பிரகாசம் பிள்ளையைப்பார்த்து, "ஐயா! என்னுடைய கோரிக்கை கைகூடுவதற்கு இது ஓர் நற்குறிதான். இதனைக் கடவுள் முற்றுப்பெறும் வண்ணம் அருள்பாலிக்க வேண்டுகிறேன். யான் எடுத்த காரியம் ஜயமடையத் தாங்களும் கடவுளைப் பிரார்த்திப்பீர்களென நம்புகிறேன். எனக்கு இதைத்தவிர இவ்விடம் வேறென்ன அலுவலிருக்கிறது? புந்திவாரமாகிய நாளைக்கே புறப்பட்டுச் சுக்கிரவாரத்தன்று அவ்விடம் போயடைகின்றேன். இதைத் தாங்கள் முன்னடியே அவ்விடம் தெரியப்படுத்திக்கொள்ளுங்கள்."

"ஐயா! ஞானப்பிரகாசம் பிள்ளையவர்களே! இவ்வளவு தூரம் எனக்குதவிய தங்களை ஒருநாளும் மறவேன். என்று

போதிலும் யான் கேட்கும் வரையாவது, இச்சங்கதிகள் பூராவும், காரியம் முடிந்த முடிவையும் வரை, தங்களுடைய இதயங்கட்டிலடைபட்டிருக்க வேண்டுமென்பதே யாகும்; இது விஷயத்தில் சற்று ஞாபகமிருக்கவேண்டும்" என்றான்.

"பாலா! நீயாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். உன் பொருட்டு என்னாலியன்ற அளவு உதவிசெய்யக் காத்திருக்கின்றேன். உன்னுடைய எண்ணம் சரிதான். இதோ இந்த முந்நூறு ரூபாயையும் உனது வழிப்பிரயாணத்திற்கு ஏதுவாக வைத்துக்கொள். நானுமிருக்கின்றேன்."

"ஐயா! என்ன வார்த்தை யுரைசெய்தீர்கள். யான் உங்களை மறப்பேனாகில் யான் மனிதஜன்மத்தைக் கொண்டவனேவென்று நினைக்கிறீர்கள்? ஒரு காலுமில்லை. என் பேரில் மட்டும் தங்களுடைய கிருபை என்றுமிருக்கவேண்டுமென்று தங்களை மறுமுறையும் பிரார்த்திக்கின்றேன்."

"ஆனால் யான் ஒரு காரியம் மறந்துவிட்டேன்."

"அதென்ன பாலா?"

"என்னுடைய பாட்டனாருக்கு வயதெத்தனை யிருக்கும்" என்று அறிய விரும்புகிறேன்.

"ஏன்?

"இல்லை. கேட்கின்றேன்."

"சுமார் எழுபத்தைந்திருக்கும்."

"கண்கள் தெரியுமா?"

"தெரியும்."

"மிகவும் துலக்கமாய்த் தெரியுமா? அல்லது கண்ணாடி யணிந்துகொண்டால் தான் தெரியுமா?"

"அரசர்கள் கண்ணாடி போட்டுக்கொள்ளுதல் கேவல மென்றெண்ணிச் சாதாரணத்திற் கண்ணாடி உபயோகிக்கின்ற தில்லை. அதற்கிணங்கவே வில்லியசிங்கரசரும் அவ்வழக்கத் தை ஒழித்திருப்பார் என்றெண்ணுகின்றேன். ஆனால் ஒரு வேளை ரகஸ்யமாக உபயோகித்து வந்தாலும் வரலாம். ஏன் இதெல்லாம் கேட்டுக்கொள்கிறாய்? கண் பார்வை கொஞ்சம் மங்கல்தான்." என்று நினைக்கிறேன்.

"வேறொன்றுக்குமில்லை. என்னைத் தாங்கள் இலகுவில் இன்னாராகத்தானிருக்க வேண்டுமென்று ஊகித்ததுபோல, அவரும் அறிந்துவிட்டால், என்னுடைய முயற்சிகள் யாவும், 'விழலுக்கிறைத்த நீர்போல்' பயன்படாதொழியுமல்லவா? ஆனதால் நம்மை யாரென்று அறியக்கூடாத விதமாய் அவ ரிடம் எவ்விதம் நடந்துகொள்வதென்று வழி தேடவே அத னைப்பற்றித் தங்களிடம் கேட்டுக்கொண்டேன்."

"அதைப்பற்றி அஞ்சவே வேண்டாம். அவ்வளவு தெளி வாய்த் தெரியாது. உன்னையவர் எளிதிற்கண்டு கொள்ளமுடி யாதென்றே நினைக்கிறேன். நாளை கட்டாயம் புறப்படத் தானே? அப்படியானால் நான் இன்றைக்கே சோழநாட்டு மன் னர்க்குத் தகவலனுப்பிவிடலாமா?"

"தகவல் கொடுங்கள். நாளைப்பிரயாணம் நிச்சயம் தான். ஐயா! தாங்கள் என் பொருட்டெடுத்துக்கொள்ளும் பிரயா சைக்குக் கைம்மாறு என் செய்வேன்? தற்சமயம் யான் செய லற்றவனாயினும் என்னுயுள்பரியந்தம் உங்களை யான் மறவேன். போய் வரட்டுமா? உத்தரவு கொடுங்கள்; நமஸ்காரம்"

"போய்வா பாலா. ஈசனுனக்கு என்றுந் துணைசெய்வன்" என்று பாலனுக்கு விடை நல்கிய ஞானப்பிரகாசம் பிள்ளை "ஆஹா! என்ன யௌவனம்! என்ன அழகு! என்ன வீரம்!"

பிள்ளைகளென்றால் யாவரும் பிள்ளைகளாவரா? இவனன்றோ பிள்ளை. என்ன தைரியம்! தந்தையின் பொருட்டுத் தன் உயிரையும் மதியாது சோழநாட்டரசராகிய அவனது பாட்டன் அரண்மனைக்கே மாறுவேடத்துடன் துப்புத்துலக்கச் செல்கின்றானே. இவனெடுத்த காரியம் கைகூடுவதில் தடையுமுண்டோ? மேலும், அவனெடுத்துள்ள கருமத்திற்கோர் நற்குறியாக அவன் விரும்பிய இடத்தில் விரும்பிய வேலையே காலியாயிருக்கிறது. இவை யெல்லாம் நோக்குங்கால், இவனுடைய பிரயாசைக்குக் கடவுளும் துணை செய்கின்றாரெனவே கூறவேண்டியிருக்கிறது. பார்க்கலாம் கடைசி வரை. எம்பெருமானருள்புரிவாராக" என்று சிறிது நேரம் ஆலோசித்த பின்னர் ஒரு கடிதமெடுத்து அதில்,

ஸ்ரீமது சகலகுண சம்பன்னரான, அதிகார உபகார நிருதரான, அகண்டித லக்ஷ்மிப்பிரசன்னரான, அன்னதான பரிபாலரான, வில்லுக்கு விஜயனான, சொல்லுக்கரிச்சந்திரனான, வாழ்வுக்குக் குபேரனான, கொடைக்குக் கர்ணனான ராஜராஜஸ்ரீ சோழநாட்டிறைவர்க்கு ஏழையின் விண்ணப்பம்:

சமூகம் அடியேனுக்கெழுதிய வண்ணம் ஒருவரை ஏற்பாடுசெய்திருக்கிறேன். அவர் நாளைஇவ்விடம்விட்டுப்புறப்படுவார். நாளை மறுநாள் சோழநாட்டை யடைவார் என்றெண்ணுகின்றேன். அவரோ ஆணழகன்; அஞ்சாநெஞ்சம் படைத்தோன். நற்குலத்துதித்தோன். இருபத்தைந்து வயது இன்னும் நிரம்பப்பெறா வாலிபன். சகல கலைவல்லோன். இன்னும் அவரது குலத்தைப்பற்றி உரைக்கப்புகின், தங்களுடைய குலத்திற்குத் தாழ்ந்த குலத்துதித்தவரல்லரெனவே

சொல்லலாம். இவைகளைச் சமுகம் நேரிற் கண்டேயறியலாகும் பெயர் பாலபக்தர். அவருக்கு வேண்டிய விருத்தி முதலியவைகளை முன்னாடியே திட்டம் செய்யும் வண்ணம் சமுகத்தைத் தாழ்மையுடன் மன்றாடும்,

ஞானப்பிரகாசம் பிள்ளை,

உத்தியோக நியமகசாலா.

சமுக ஊழியன்,

என்றிவ்விதம் எழுதி ஒருவனது கையில்கொடுத்து அவனைப் பரிமாவின் மீதேறிச் சோழநாட்டு மன்னரான வில்லியசிங்மன்னருக்குத் தூதாகவிடுத்தார்

வாயுவேக மனோவேகமாய்த்தன் குதிரையைச் செலுத்தித் தூதுவன் அதிவிரைவில் சோழமண்டலத்திற்கோர் திலகம்போன்று விளங்கும் தஞ்சையையடைந்து அரசரை மாளிகையில் கண்டு சேவித்துத் தூதோலை கைக்கொடுத்துப் பரிசு பெற்று உடன் மதுரையம்பதி திரும்பினான்.

கடிதத்தைக் கண்ணோக்கிய வில்லியசிங், தேர்ந்தெடுத்து வாலிபனை அனுப்பியிருக்கும் ஞானப்பிரகாசம்பிள்ளையின்பால் மிகுதியும் சந்தோஷங்கொண்டு, அரண்மனைச் சேவகர்களையழைத்து, மறுநாள் நான்கு குதிரைகள் பூட்டிய வண்டியொன்றும், அதற்குப் பாராவாகச் சில சிப்பாய்களும் சோழநாட்டெல்லையிற் சென்று அவ்விடம் பாண்டிநாட்டிலிருந்து வரும் பாலபக்தனை அவ்வண்டியிலேற்றி மிக்க ஆடம்பரத்துடனும் மரியாதையுடனும் மாளிகை கொணர்ந்து சேர்ப்பதற்கு வேண்டிய ஏற்பாடும் செய்து பின்பாலன் வசிப்பதற்குத் தகுந்த இடத்தையும் இன்னதெனக் குறித்து அவ்விடத்தை நன்றாய் அலங்கரித்து வைக்கவுந் திட்டஞ்செய்தார்.

## 9-வது அத்தியாயம்.

## அரமனை உத்தியோகம்.

ஞானப்பிரகாசம் பிள்ளையிடம் விடைபெற்ற பாலன் வீடடைந்து நிகழ்ந்த சங்கதிகள் யாவையும் தன் தங்கைக்குச்சொல்லி மறுநாள் பிரயாணத்திற்கு வேண்டிய ஆயத்தத்துடனிருக்குமாறு திட்டஞ்செய்து, அதன்பின் குணபூஷணம் பிள்ளையிடமும் அவருடன் அப்பொழுது சம்பாஷித்துக் கொண்டிருந்த அடுத்த வீட்டு அருணாசலம் பிள்ளையிடமும் தான் மறுநாள் தன் தங்கை மனோன்மணியுடன் மதுரையை விட்டுச் சோழமண்டலத்திற்கு ஓர் உத்தியோக விஷயமாய்ப் பயணப்படுவதாய்ப் பகன்று விடையும் பெற்றுக்கொண்டான்.

பொழுதும் புலர்ந்தது. குறித்த இடத்திற்குப் புறப்பட இருகுதிரைகள் பூட்டிய வண்டியும் வந்து வாயிலில் தயாராகக்காத்து நின்றது. பாலனும் மனோன்மணியும் காலை போஜனமாகவும் வண்டியிலேறி தஞ்சைமாநகரை நோக்கிப் புறப்பட்டார். வண்டியில் போகும் பொழுதே பாலனும், மனோன்மணியும் ஒருவரை யொருவர் பார்த்துத் துக்கித்துக் கொண்டும், ஒருவர்க்கொருவர் தேறுதல் சொல்லிக்கொண்டுமிருக்க வண்டியும் பாண்டிநாட்டெல்லையைக்கடந்தது.

வற்கனவே காத்துநின்ற சோணாட்டு வீரர்கள் பால்சிங்கின் முன் தோன்றி, அரசர் குறித்தனுப்பிய வாலிபர் அவர் தாமெனத் திடங்கொண்டு; பால்சிங்கை வண்டியிலேற்றி வரும்படி அரசரின் ஆக்ஞை' என்று அவனை வணங்கி நிற்க, பால்சிங் தன்னருமைத் தங்கையுடன் வண்டியிலுட்காரவுமே, பாலன் மனக்கொதிப்புற்றுச் சொல்வான் தன் தங்கையிடம்

"மனோன்மணி! நான் அரண்மனைக்கு ஓர் உத்தியோகத்தின்பொருட்டுத் தானே செல்கின்றேன். என்னை ஒரு நாளும் நன்கறியாத கொற்றவர் என்னை எவ்வளவு மேன்மையான விதமாய் நாலு குதிரைகள் பூட்டிய வண்டியிலேற்றி வரவும், என்னைச்சுற்றிப் பன்னிருவீரர்கள் உருவிய வாளுடன் குதிரை மீது பாராக்கொடுத்து வரவும் ஆக்ஞையிட்டிருக்கின்றார். ஓர் சம்பளகாரனுக்கு இவ்வளவு மேன்மையுள்ள இவ்விடத்தில், நம்முடைய பிதா இருந்தால் என்ன ஸ்திதியிலிருப்பார்கள் என்று நினைத்துப்பார். நாமிருவருந்தான் எந்நிலையிருப்போமென்று எண்ணு. பாவி அமரசிங்கின் பொய்ச்சாக்ஷியத்தாலல்லவா இவ்வளவு வைபவத்தையும், நம்மைக் கஷ்ட திசையிலும் மிகப்பரிவுடன் வளர்த்த நமது தந்தை அனுபவிக்கும் பாக்கியமில்லாமற் போய் விட்டது."

"ஏ! சண்டாளா! சகோதர துரோகத்தாற் பீடிக்கப்பட்டிருக்கும் காதகா! உன்னுயிரை மறலிகையினின்றும் விடுவித்த எனதருந்தந்தையைக் குற்றவாளியென அவர்கள் மீது பொய்க்குற்றஞ் சுமத்தி அநியாயமாய் நாங்கள் யாவரும் இக்கஷ்டமனுபவிக்கும்படி ஏற்பாடு செய்தாயே. உன்னை நானோ இலேசில் விடுவேன்? உனது முடிவு காலம் இயமனிடத்தி லில்லை. என்னிடந்தானிருக்கின்றதென்பதை மனதிருத்திக் கொள். 'பூனை தன் கண்களை மூடிக்கொண்டால் உலகம் பூராவுமே இருளாற் சூழப்பட்டிருக்கும்' என்று நினைத்துக்கொள்வதுபோல, நீ சொல்லிய பொய் வேறொருவருக்கும் தெரியாதென்றல்லவா நினைத்திருக்கின்றாய். உன்னை ஈஸ்வரன் என்ன கதிக்காளாக்கத் திருவுள்ளங் கொண்டிருக்கின்றானோ அறியேன்." என்று கூறிக்கொண்டிருந்தவன் திடீரென்று

"மனோன்மணி! பார்த்தனையா இம்மலர்களின் மாக்ஷியை? அதோ பார்; உன்னத உப்பரிகையொன்று தென்படுகின்றது. அது தான் அரண்மனைக் கோபுரமாயிருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். ஆஹா என்ன அழகு!" என்றான்.

"அண்ணா! என்ன! இங்கிருந்து பார்க்கும்பொழுதே கண்களைப்பறிக்கின்றதே. என்ன அழகிய கட்டிடமிது. நம் சேரனுடைய அரண்மனையைக்காட்டிலும், பாண்டியன் மாளிகையல்லவா மேலென்று எண்ணியிருந்தோம். இக்கட்டிடத்திற்கு அவை யிரண்டும் ஈடாகாதென்றே நினைக்கவேண்டியிருக்கிறது. அமரசிங் கொடுத்து வைத்தவன் தான்."

"இருக்கட்டும், மனோன்மணி! பார்த்துக்கொள்ளலாம். இப்பொழுது என்ன செய்யலாம்? அரண்மனையை நெருங்கிவிட்டோமே. நேரே அரசரிடம் செல்லலாமா?"

"சென்றாலென்ன? செல்லலாம். அரசரைப் பார்க்கும் நிமித்தம் நேராக அவ்விடமே வண்டியை விடட்டும்."

"மனோன்மணி! அப்பாவின் சாயல் எனக்கிருப்பதை மறந்தனையோ? நானிப்பொழுது அரசரைக் காண்பேனாயின், அரசர் என்னை இன்னாராயிருக்கக்கூடும் என்று சந்தேகிக்க வேண்டி வந்தாலும் வரும். ஆதலால், இப்பொழுது அரசரைக்காண்பது அவ்வளவு நன்றன்று என நினைக்கின்றேன். ஏன்? உன்னுடைய நோக்கமெப்படி?"

"என்னுடைய நோக்கமென்ன; தங்கள் சொற்பிரகாரம் நடக்கவேண்டியது தான். இப்பொழுது போகக்கூடாது தான். நமது துரதிர்ஷ்டவசத்தால் நம்மை அவர் கண்டுகொண்டால், நாம் கருதிவந்த காரியம் வியர்த்தமாகும். நமக்கும் அவமானமுண்டாகும். மேலும், அம்மாளுடைய நெடு

தான். அங்கு அழகிய ஓர் அறையும், சமையலுக்கு ஓர் சிறு இடமும், இவர்களுக்கு வேண்டிய சகல சாமான்களும் தயாரிலிருந்தன. அவ்விடம் ஏவலாளர்களுமிருக்கக்கண்ட பாலசிங், அவர்கள் தற்சமயம் தனக்குத் தேவையில்லையென்றன்புடன் அவர்களுக்குச் செலவு கொடுத்தனுப்பிவிட்டுத் தன் தங்கையுடன் மட்டும் வசிக்க எண்ணங்கொண்டான். பின் தன்னை வண்டியிலேற்றி வந்த வண்டிக்காரர்களுக்கும், மற்றைபோருக்கும் இனாம் கொடுத்தனுப்ப, அவர்கள் 'பாலசிங்கைப்போல் தாருண்யமுள்ளவர்கள் உலகிலே இரார்' என்று மகிழ்ந்து மிகுதியும் சந்தோஷ உள்ளத்தராய்த் தம் வண்டியைத் திருப்பி அரண்மனை வாயத்தில் விடுத்துப்பாலன் வந்து சேர்ந்ததையும், விடுதியில் சிரமபரிகாரம் பண்ணிக்கொண்டிருப்பதையும் அரசருக்கறிவித்துச் சென்றனர். அதுகேட்ட வில்லியசிங் மன்னர் பாலனைக்காண அவாக்கொண்டு காலை பத்துமணி முதல் மாளிகை வாயிலில் உட்கார்ந்து அவனது வருகையை எதிர்நோக்கியவண்ணமே யிருந்தார்.

விடுதியடைந்த பாலன் தேகசுத்தி செய்துகொண்டு பகல்போஜனமுமுண்டபின் வெளியேறாது வீட்டைக்காளிட்டுக் கொண்டிருக்கும் வண்ணம் மனோன்மணிக்கு உரைத்துத் தான் அரண்மனை போய் ராஜதரிசனம் செய்து வருவதாகவும் அவளிடம் கூறி, மாளிகையினிடையிலுள்ள வனத்தைப் பார்த்துச் செல்லக்கருதிச் சுமார் மணி 12 க்கெல்லாம் புறப்பட்டான் விடுதியினின்றும். புறப்பட்ட பாலன் வழிகளிலுள்ள பசு மரங்களையும், செடி கொடிகளையும் பார்த்துக் கொண்டே சென்று, அங்கு ஓர் தாமரைத்தடாகமும், அத்தடாகத்தைச்சுற்றிலும் பல மரங்கள் குளிர்ச்சியை உண்டு பண்ணிக்கொண்டிருக்கவுங் கண்டு, மிகு குதூகலத்தோடு, ஒரு சிறு கல்லின் மேலில் உட்கார்ந்து, 'அரசிடம் எவ்விதப்

அணுகுவது அணுகி யாது சொல்வது, என்ன கேள்விகள் கேட்பரோ?' என்று இவ்விதமாக எண்ணிக்கொண்டிருந்த அவன் தன்னையும் அறியாமலே அங்குள்ள புல்லின் மீது படுத்து அயர்ந்து நித்திரை போயினன். வெகு நேரம் துயின்றான். மணியும் நாலானது. அதுவரைக்கும் பாலன் நித்திரையி னின்றும் எழுந்த பாடில்லை.

அதன் பின், சிறிது நேரத்திற்கெல்லாம் நித்திரையை விட்டெழுந்து உட்கார்ந்து, "ஓஹோ! நாம் வெகுநேரம் துயின்றோம் போலும். மணி எத்தனை என்றறியக் கூடவில்லையே" என்றெண்ணிக்கொண்டிருக்கும் பொழுதே அரண்மனைக் கடிகாரத்தில் மணி ஐந்தடித்தது. உடனே, "இது தான் அரசரை யணுகும் தருணம்" என்றெழுந்தான். அக்ஷணம் தூரத்தில் ஒரு பொற்சிலையும் அதன் பக்கலில் மற்றோர் சிலையுமிருக்கக்கண்டு, "ஆஹா! இந்தச் சிலைகளை எந்தச் சிற்பி வார்த்தனனோ! என்ன அழகிய சிலைகள்! சிலைகளிலேயே இவ்வளவு அழகு படிந்திருக்குமாகில், இச்சிலைகளிரண்டும் வாஸ்தவமாகவே இரு பெண்மணிகளாயிருப்பின் என்ன அழகு வாய்ந்தவர்களாயிருப்பர்! அவர்களுடை வனப்பை யாரே வர்ணிக்கவல்லார்! என்ற சொற்களைப் பாலன் சொல்லி முடிக்குமுன்னமே, அச்சிலைகள் சற்று அசைவதாயும், அவைகள் தன்னை நோக்கியே வருவதாயும் கண்டான். சற்றுத் தாழ்த்தும், அவையிரண்டும் அழகிய இருமாது சிரோமணிகளாகத் தென்படவே, யாது செய்வதென அறியாது பாலன் மயங்கி நிற்கும் போழ்து, அந்நங்கையர்க்கரசிகளும் நம் கதாநாயகனைக் கண்ணுற்றனர். அவனுடைய யௌவனத்தையும், ரூப லாவண்யத்தையும் கண் கொண்டு பார்க்க நாணப்பட்டவர்கள் போற் பாலனைக்கண்ட அந்த க்ஷணமே வந்த மார்க்கமாகவே

திரும்பிச் சற்று நேரத்திற்குள் அதிவிரைவாய் நடந்து பாலன் கண்களினின்றும் மறைந்தனர்.

அவர்களுடன் சம்பாஷிக்க ஆவலோடு காத்துக்கொண்டிருந்த பாலன் அவர்கள் மறைதலை நோக்கவே மிகுதியும் சோகமுற்றானாயினும், தான் நினைத்த கருமத்தை முதலில் முடிக்கவெண்ணிக் காவலைக்கடந்து அரண்மனை யடைந்து, அதனுட் போய்ப் பார்த்தான். ஒருவரையுங் கண்டிலன். மாடிக்குச் சென்றான். அவ்விடமும் நிசப்தமாயிருந்தது. பின்னர், இரண்டா மாடிக்குச்செல்ல, ஆங்கு இவனையே பார்க்க வெகு அவாவுடன் பார்த்துக்கொண்டிருந்த வில்லிய சிங் இவனை நோக்கி, "அப்பா! பாலனென்பவன் நீதானா?" வென்று மிக்க ஆவலுடன் கேட்டார்.

அதற்குப் பாலன் அவர்க்கு முதலில் சேவை செய்தபின், "ஆம். அரசே! என்னைத்தான் பாலனென்றழைப்பர்" என்று மறுமொழி பகர்ந்து மிக்க சாந்தமாய் நின்றான்.

"சரி. மிகவும் சந்தோஷம். நானும் காலை முதல் ஏறக்குறைய மணி ஐந்து வரையும் உன் வரவை எதிர் நோக்கிய வண்ணமாகவே கீழறையிலிருந்தேன். உன்னை இதுவரை காணாது, ஒரு வேளை பிரயாணத்தாலுண்டான களைப்பினால் இவ்விடம் வரச் சாத்தியப்படாமல் நாளை என்னைக்காண உத்தேசித்திருக்கின்றாயோ? என நினைத்தே சுமார் 5 நிமிஷத்திற்கு முன் தான் இவ்விடம் வந்தேன்."

"நல்ல வேளையாய் நான் நினைத்தபடியே எனக்கு வாய்த்தாய். அறைக்குவா பாலா! போய் உட்கார்ந்து பேசலாம்" என அவ்விடம் நன்றாயலங்கரிக்கப்பட்டிருந்த ஓர் அறைக்கு அழைத்துப்போய் யவன் மனச்சம்மதத்திற்கு விரோதமாய்ப் பாலனையும் ஓர் ஆதனத்திருத்தித்தானும் மற்றொன்றிலமர்ந்து

பாலனுடன் சம்பாஷிக்கலாயினர். சிறிது நேரம் தன்னை யவர் இலகுவில் பார்க்கக்கூடாத விதமாய் முகத்தை மற்றொரு புறம் திருப்பி உட்கார்ந்திருந்த பாலனுடன் வார்த்தையாடி விட்டு, வில்லியசிங் மெல்லத் தன் சட்டைப்பையில் வைத்திருந்த கண்ணாடியைப் போட்டுக் கொண்டார். உடனே பாலன் அந்நேரமுழுவதும், மனோதிடத்தை முழுதும் சிதற விடாமல் தான் உட்கார்ந்தபடியே இருக்கலானான். அப்பொழுது அரசர் அவனை உற்று நோக்கி,

"பாலா! நான் ஒரு மகனை இழந்த பாவி. எனக்கு மோகனசிங் என்ற பெயர் கொண்டிருந்த ஓர் மைந்தனிருந்தான். மிகப்பராக்கிரமசாலி. அதிசுந்தரன்."

"அத்தகைய மைந்தனையா இழந்தீர்கள்?"

"ஆம் அந்தவண்ணமுடைய மைந்தனைத்தான்."

"எவ்வளவு காலத்திற்கு முன்?"

"சுமார் பத்தொன்பது வருடத்திற்கு முன் தான்"

"பாலா! அம்மைந்தனுக்கு நான் இளவரசை விவாகம் நடத்தியிருந்தேன். அவனுக்கோர் ஆண் குழவி பிறந்திருந்தமாயின், அக்குழவி உன்னையே ஒத்திருக்குமெனபதிற் கொஞ்சமும் சந்தேகமில்லை. ஏனென்றால் பத்தொன்பதாம் பிராயத்தில் என் மகனுடைய முகம் எவ்விதமிருந்ததோ, அதுபோலவே தற்சமயம் உன்னுடைய முகமும் காணப்படுகின்றது. உன்னைக் கண்டவுடன் எனக்கு மோகனசிங் தான் வந்துவிட்டானென்றே நினைக்கிறேன்."

"அரசே! தாங்கள் சொல்வதை நோக்கின், தங்களுடைய மகன் இறக்கவில்லை போலிருக்கிறதே?"

"இறக்கவில்லை. நான் தான் அவன் செய்துள்ள ஓர் குற்றத்தின் பேரில் என் முகத்தில் விழிக்கவேண்டாமென அவ

னுக்குரைத்து அவனை வீட்டை விட்டுத் துரத்திவிட்டேன். அக்கவலை யிருக்கட்டும் பாலா. அது என் மனத்தைப் புண் படுத்துகிறது." என்று வில்லியசிங் சொல்லவுமே, பாலன் தன் தந்தையின் கதியை நினைந்து அரசர் படும் துக்கத்திலும் பன் மடங்கு தன் மனத்திலே துக்கித்தான்.

அதன் பின் நிருபர் பாலனைப் பார்த்துப் "பாலா! நானுன்னை யடைந்ததற்கு மிகுதியும் சந்தோஷிக்கின்றேன். நீ எனதரண்மனைக் காரியஸ்தனாகவே பாவித்து நடக்கவேண் டியதவசியமில்லை. இதை உன் அரண்மனையாகவே நினைத்துக் காரியத்தை நடத்திவா. பொக்கிஷசாலையின் திறவுகோல் இதோ இருக்கிறது. கைக்கொள். உனக்கு வேண்டியவளவு திரவியங்களை என் அனுமதியை எதிர்பாராது எடுத்து மேல் நடத்திவா. அதோ இருக்கும் குதிரை லாயத்தில் நிற்கும் குதிரைகளில் உனக்குப் பிரியமான குதிரை யொன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள். இவ்வரண்மனையிலுள்ள சகலரும் உனக்கமைந்து நடக்கும்படியாக ஏற்கனவே திட்டஞ்செய் துள்ளேன்" என்று சொல்லி மிகுந்த அன்புடன் பாலனைப் பொக்கிஷசாலைத் திறவுகோலுடன் அவனது விடுதிக்கு அனுப்பி வைக்குமுன்னர், தன்னை ஒவ்வொரு நாளும் பாலன் காணும் வண்ணம் கேட்டுக்கொண்டு சந்தோஷ மனத்தினராய் அவனைக் கொற்றவர் அனுப்பிவைத்தார்.

மணியோ ஆறடிக்கும் சமயமாயிற்று. தனது ஜாகைக்கே புறப்பட்ட பாலன், குதிரை லாயத்தின் ஞாபகம் வரவே, எதிரிலிருந்த லாயத்துக்குச்சென்று அவ்விடத்து நின்ற எண் ணிறந்த பரிகளுள் ஓர் கறுப்புக்குதிரையைத் தேர்ந்தெடுத் துத் தட்டிக்கொடுத்துக் கொண்டிருந்தான்.

அச்சமயம் 'அழகே அவதாரமெடுத்தவளோ இவள்' என்று யாவரும் ஐயுறும் வண்ணம் அவ்வளவு வனப்புப்பொ

ருந்திய ஓர் இளம் பெண் பாலனைக்கண்டு மிகுதியும் திடுக்குற்று, மிகுந்த பரபரப்புடன் மேன் மாடியினின்றும் கீழிறங்கி ஓடிவந்து, 'ஐயோ! அந்தக்குதிரையைத் தொடவேண்டாம். தொடவேண்டாம். தயவுசெய்து தொடவேண்டாம்'' என்று பாலனைப்பார்த்துச் சொன்னதும் தவிர அவனது கையையும் பிடித்து அப்புறம் வரும்படி மிகவும், அவனது நாடியில் மற்றோர் கையையும் வைத்துக் கெஞ்சி நின்றாள்.

"இதென்ன! கனவோ அல்லது நனவோ" என நினைத்துக் கலங்கிய பாலன் "ஏ! மங்கையர் திலகமே! இவ்வாறு நீ ஓடிவந்துரைக்கக் காரணம் யாது? நீயோ அந்தப்புர ஸ்திரீ போல் தோன்றுகின்றையே. உனக்கோ இன்னும் மணமாகவில்லையெனத் தோன்றுகிறது. அவ்விதமிருக்க, தனியனாய் நிற்கும் என்னை அணுகி, எனது கையைத் தொட்டிழுக்கவும் உனக்குத் தகுமோ? என அக்காரிகை

"ஐயா! நீவிர் யாதுரைத்தபோதிலும் கிஞ்சித்தும் யான் கிலேசப்படேன். யான் அந்தப்புர ஸ்திரீயாயிருப்பினும், மணமாகா இளம்பெண்ணாயிருப்பினும், ஒருவருக்கு ஆபத்து வருங்காலையில், வந்ததையறிந்தும் வறிதே அதனைப்பார்த்துக்கொண்டிருப்பது அழகென்று நினைக்கின்றீர்? ஒருபோதுமில்லை. ஆதலால் தான் உமக்கு ஆபத்துநேர இருக்கிறதே என்று உமதுயிரைக் காப்பாற்றக் கருத்துக்கொண்டு மாடியினின்றும் இவ்விடம் தீவிரித்து ஓடிவந்தேன். இதனால் யாதும் குற்றமில்லை யென்றே கருதுகின்றேன்."

"பெண்ணாரமுதமே! எனக்கு அவ்விதம் யாதொரு அபாயமும் வந்ததாகத் தெரியவில்லையே. வீணே ஏன் பொய்யுரை செய்கின்றாய். இது உனக்கழகல்ல. பார்ப்போர் ஏதா

கிலும் நினைத்துச் சந்தேகிக்க இடந்தரும். ஆதலால், உடனே இவ்விடத்தைவிட்டு அகலுமாறு பிரார்த்திக்கின்றேன்.''

"ஐயா! தற்சமயம் உமக்கிருந்த ஆபத்தையானறிவேனல்லது வேறொருவரும் அறியார். மேலும் யான் மெத்தையினின்று இதுவரைஓடிவந்துஉம்மை இங்கு தடுத்து வார்த்தையாடியிருக்காவிடில், இதற்குள் உமது கதி அதோகதியாகவே இருந்திருக்கும். யான் உம்மிடம் வந்தது தவறுதான். க்ஷமிக்கவேண்டுகின்றேன். போய் வருகின்றேன்'' என்று பகன்று வாடிய முகத்துடன் ஓர் காலைஎடுத்துவைக்கப் பாலன் அவள் முன்னின்று மறைத்து "ஏ பாவாய்! நான் என்ன ஆபத்திலிருந்தேனென்றெனக் கறிவியாது, நான் மொழிந்த சிற்சில வார்த்தையின் பொருட்டு, என்னைக் குறைவாக மதித்து, நானறியா அவ்வாபத்தையும் எனக்குத் தெரிவியாது மிகவும் சஞ்சலத்துடன் போதல் சரியோ?" என்றான்.

அதற்குக் கனகாம்பாள், "ஐய! யான் அதனை உரைப்பதற்கு முன்னரே என்னை நீர்தானே இங்கிருப்பதெனக் கடாது என்று செப்பி என்னை இவ்விடத்தினின்றும் பெயரச் சொன்னீர். அதற்கிணங்கி யான் போகப் புறப்படும்பொழுது ஓர் கன்னிகையாகிய, என்னை முன் நின்று மறிப்பது உம்மைப் போன்ற வாலிபருக்கு அழகோ?" என்றாள்.

எனவே பாலன் முகவாட்டங்கொண்டு, "இதென்ன! 'கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது' போலிருக்கின்றது. பெண்ணே! நான் உலக இயல்பை எடுத்துக்கூறினேனல்லால் வேறொன்றும் மொழியவில்லையே. ஏ! மாதர்க்கணிகலமே! நான் பகன்ற அவ்வார்த்தைகளுக்காகச் சற்றே தயவுசெய்து என்னை மன்னித்து என்னை வந்தடுத்த அவ்வாபத்தை எனக்குத்தெரிவிக்க வேண்டுகின்றேன்" எனக்கேட்டான்.

அதற்குக் கனகாம்பாள் கழல்வாள்: 'ஐயா! சொல்லுகின்றேன் கேளும். மற்றெல்லாப் பரிகளைக்காட்டிலும் இக் கறுப்புக் குதிரையே மிகவும் பராக்கிரமமும் சாந்த குணமுமுள்ள குதிரையாக ஓர் காலமிருந்ததெனக் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆனால் இப்பொழுதோ அக்குதிரை தன் எஜமானனை இழந்ததால் வேறொருவரையும் நெருங்கவொட்டாது முன்னால் போகின்றவர்களைக் கடிப்பதும் பின்னால் நெருங்குகின்றவர்களைச் சரியானபடி உதைப்பதும் ஆகிய இக்குணங்களையுடையதாயிருக்கின்றது. இதன் கடியாலும் உதையாலும் என் கண் காண இறந்தோர் பலர். ஆனதினால் தான் அக்கதி எங்கே உம்மையும் கிட்டுகின்றதோவென அச்சங்கொண்டு, உம் உயிரைக்காக்க ஓடிவந்தேன். நீவிர் யாவர்?"

"காரிகையே! அஃதிருக்கட்டும். நீ இந்தக் குதிரையில் செல்லவேண்டாமென்ற எண்ணத்துடனல்லவா என்னைத் தடுக்கின்றாய். இதோ பார் நான் ஏறிச்சவாரி செய்கின்றேன்" என்று சொல்லிக் குதிரையண்டை மறுபடியும் பாலன் போகப் புறப்பட்டுத் தன் பாதங்களை அடி எடுத்து வைத்தான்.

"வேண்டாம், ஐயா! வேண்டாம். பொல்லாக்குதிரையது. கேளும். கேளும்" என்று கனகு கழறினாள்.

அதுகேட்ட பாலன் "கேட்க வேண்டியதென்ன?" வென்று கனகின் பேதமைக்காகப் புன்னகை பூத்தான்.

"முன்னோர் தினம் எனது மாமா அதனை நெருங்க, அவருக்குக்கிடைத்த உதையால் மூன்றுமாதம் கால் நடக்கமுடியாது படுத்த படுக்கையிற் கிடந்தார். அவரோ சேனைத்தலைவர். அவரைக்காட்டிலுமா நீர் பராக்ரமசாலி" என்று மிகுதியும் வருந்திப் பாலன் கையிரண்டையும் பிடித்துக்கொண்டு பாலன் முன் வந்து பாலனை மறைத்தபடியே நின்றுகொண்டு குதிரையின் மீதேறவொட்டாது தடுத்தனள்.

அவ்விதம் தடுத்த கனகைத் தைரியமாக இருக்கச்செய்து, "என்னுடைய வல்லமையைப் பார்" என்றுமிரண்ட கறுப்புக் குதிரையைத் தட்டிக்கொடுத்து அதனை லாயத்தினின்றும் வெளியே இழுத்துக் கொணர்ந்து, சேணமில்லாமலே அதன் மீதிருந்து அரண்மனையை ஓர் சுற்றுச் சுற்றிவந்தான், கனகு மிகுந்த ஆச்சர்யமடைந்து, "ஐயா! தங்களுடைய பராக்கிரமமே பராக்கிரமம். தங்களைப்போல் யான் இதுவரை இவ்வளவு பலசாலிகளையும், மனோதிடமுள்ளவர்களையும், உயிரைத் திரணமாய் மதிப்போரையும் எங்கும் கண்டதில்லை. தாங்கள் யார்?" என்று பாலன் மீது காதல்கொண்டவளாக வினவினாள்.

"நங்கையே! நான் தான், சித்ரகவி வித்வான் ஸ்ரீமான் முத்தையா பிள்ளைக்குப்பதிலாய் இவ்வரண்மனைக் கார்யங்களை மேல் நடத்துதற்கு வந்திருப்பவன்"

"தங்களது பெயர்?"

"பால பக்தன் என்பவன். நீ யார்?"

'நீயார்?' என்று கேட்கவுமே, கனகு சிறிது நாணித்தலை கவிழ்ந்து அவ்வினாவிற்குப் பதிலளியாது "நாளை இந்நேரம் பூங்காவில் தடாகக்கரையில் சந்தியுங்கள். பேசிக்கொள்ளலாம். தோழி ஞானம் வருகின்ற நேரமாயிற்று. யான் போய் வருகின்றேன்" என்று பாலனிடம் விடைபெற்றுத் தன் மனையடைந்து "ஆ! நாமென்னமெண்ணி அவ்விடம் சென்றோம், அவ்வெண்ணம் மாறிக் கடைசியில் அவ்வாலிபரை யாரென்று அறியுமுன்னமே அவரைக் காதலிக்கவேண்டியதாயிற்றே. அவரோ தான் அரண்மனை உத்தியோகஸ்தர் என்கின்றாரே. அவரைக் காதலித்தது வேறு யாருக்காவது தெரியவந்தால் என்ன அவமானம்! நம் குலத்திற்கு என்ன அபகீர்த்தி! ஐயோ! என் செய்வது? இவையெல்லாம் நினைத்து அக்காதலை

மாற்றி இன்னொருவருக்கு மனைவியாயின், யானுயிர் வைத்திருந்தும், உயிரற்ற பிணம் போலாய் விடுவேனே. எனது பதிவிரதா தர்மத்திற்குப் பங்கம் ஏற்படுமே. என்ன செய்கின்றதெனத் தெரியவில்லையே. ஈஸ்வரா! இது தான் உனது திருவுள்ளச்சித்தமோ? அறியேனே. என்னவரினும் சரி, காதலித்த பாலனை யான் என் ஆயுள் வரை காதலிப்பேனே தவிர இனியொருவரைக் காதலித்தல் மிகத்தவறு. ஆனதால் என்றும் பாலனையே காதலிப்பேன்" என்று நினைந்து பாலன் நினைவாகவே இருக்கத் தலைப்பட்டாள் கனகாம்பாள்.

அப்பொழுது கனகின் அறைக்குப்பக்கத்து அறையில் இருந்து ஞானம் ஓடிவந்து வாடியமுகத்துடன் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டிருந்த கனகின் முன் நின்று "அம்மணி! போஜன வேளையாயிற்றே. ஏன் இவ்வித மனச்சஞ்சலத்துடன் உட்கார்ந்து கொண்டிருக்கின்றீர்கள்?" என்றாள்.

"ஞானம்! ஒன்றுமில்லை. ஏதோ இன்று உடலுக்கொரு மாதிரியாக இருக்கிறது."

"உடலுக்கென்ன அம்மணி? கொஞ்ச நேரத்திற்கு முன் சுகமாய் இருந்தீர்களே? ஆனால் இவ்வளவு நேரம் தாங்கள் எங்குச் சென்றிருந்தீர்கள்?"

"எங்கும் போகவில்லையே? இங்கு தானே இருந்தேன். என்ன சங்கதி ஞானம். ஏன் இவ்விதம் கேட்கின்றாய்?"

"இல்லை. இவ்வளவு நேரமும் உங்களைத் தேடினேன். தங்களைக் காணோம். அதுதான் கேட்டேன்."

"நீ எங்கேயோ சுற்றித்திரிந்து விட்டு இப்பொழுது தான் வந்தாய். அது எனக்குத்தெரியும். அதற்காக உன்னைக் கோபிப்பேனென்று நினைத்து நீ முந்துகின்றாயோ? தெரியும். நீ எங்குச்சென்றிருந்தாய் இவ்வளவு நேரம்?" உள்ளதுசொல்.

"ஓரிடமும் செல்லவில்லை யம்மணி. இங்கே தானிருந்தேன் நான் என்ன பொய் கூறுவேனு?'

"ஞானம் ஏன் பொய் சொல்லுகின்ருய்? உள்ளதையுரை. நான் உன்னை என்ன செய்யப்போகின்றேன்?"

"அம்மணி! சொல்லுவேன். பயமாயிருக்கிறது."

"சொல்லடி ஞானம். உன்னை ஒன்றும் செய்யவில்லை என்ருல், விளையாடுகின்ருய். சீக்கிரம் சொல். போஜன வேளையாயிற்றென்று நீயே சொல்லினை. இப்பொழுது வழக்கம்போல் விளையாடத் துவக்கிவிட்டாய். சொல்லு சீக்கிரம்."

"நீங்கள் என்னைக் கோபிக்கக்கூடாது."

"இல்லை."

"வாஸ்தவமாக."

"சொல்லேண்டி"

"'வாஸ்தவமாக' என்று சொல்லுங்கள். அப்பொழுது தான் நான் சொல்லுவேன்."

"அவ்விதம் சொல்லாவிடில்"

"நானும் ஒன்றும் சொல்லவில்லை. வாருங்கள் போகலாம். போஜன முடிந்து பேசிக்கொள்ளலாம்."

"ஞானம்! வாஸ்தவமாக உன்னைக் கோபிக்கவில்லை. சொல். எங்கே போயிருந்தாய்?"

"நீங்கள் போன இடத்தைச் சொல்லக்கூடாதோ?"

"நான் ஓரிடமும் செல்லவில்லை. நீ யெங்குச் சென்றிருந்தாய்? அதைச்சொல்லு முதலில்"

"நான் சொல்லுகிறேன். கோபிக்கக்கூடாதம்மா?"

"இல்லை. இல்லை. சொல்லு."

"குதிரைலாயத்து வரை சென்றிருந்தேன்."

ஞானம் இவ்வார்த்தைகளை உரைக்கவுமே, கனகின் மனம் திகிலடைந்தது. எனினும் அதனை வெளிக்குக்காண்பியாது சிரித்த முகத்துடனே மறுபடியும் சம்பாஷிக்கலானாள்.

"ஏன் குதிரைச் சவாரி செய்யவா?"

"குதிரைச்சவாரி செய்யவல்ல. சும்மா போயிருந்தேன்."

"பின் எதற்காக அவ்விடம் போயினை?"

"நம் கறுப்புக்குதிரை ஏறவந்த ஓர் வாலிபனைத் தடுப்பதற்காக."

"சரி தடுத்தாயா?"

"தடுத்தது மட்டிலுமா! ஆஹா! என்ன சொல்லுவேன்!"

"என்னடி பாசாங்கு செய்கின்றாய். சீக்கிரம் முடி."

"அம்மணி! எவ்விதம் சீக்கிரம் முடிப்பது? கேளுங்கள். அவ்வாலிபர் மிக்க தைர்யசாலி. தடுத்தேன். கேட்கமாட்டேனென்றார். அதைக்கண்ட நான் 'அப்படியானால் உம்மிஷ்டம் போல் நடந்துகொள்ளும்' என்று சொல்லிவிட்டு நம் அறைக்குத்திரும்பினேன். திரும்பவும், அவர் என்னை யழைத்து மறைந்து நின்று பார்த்துக்கொண்டிருக்கச் சொன்னார். சரி என்று நானும் அப்படியே செய்தேன்.

"அதன் பின்."

"அதன் பின், அவர் அக்குதிரையில் சவாரி செய்தார். அதைக்கண்ட நான் உடனே அவரை யாரென்று தெரிவதற்குள் காமுற்றேன். அவர் என் மனத்தில் குடி புகுந்துள்ளார். அவர் ஞாபகமே என்னை இப்பொழுது வருத்துகின்றது."

என்று ஞானம் இவ்வார்த்தைகளை யுரைக்கவும், இன்னும் என்னென்ன சொல்லிவிடுகின்றாளோவெனப் பயந்து தன் நாற்காலியினின்றும் எழுந்து ஓடி ஞானத்தின் வாயைப் பொத்திக்கொண்டாள் கனகு.

அப்பொழுது ஞானம், "ஏனம்மணி! இவ்விதம் வந்து என் வாயை மூடுகின்றீர்கள். இன்னும் பாதியும் சொல்ல வேண்டாமென்றா? அப்படியானால் சொல்லவில்லை. முன்னிருந்தபடி போய் உட்காருங்கள்" என்றாள்.

"ஞானம்! வேண்டாம். இனி ஒன்று முரையாதே. போதும். என்னுடன் இவ்விடம் உட்காரு" என்று ஞானத்தையும் கனகு தன்னுடன் வேறொரு ஆதனத்தமர்த்தி தன் கையை அவளது தோளின், மீது போட்டு மற்றொரு கையால் அவளது நாடியைத்தாங்கி "ஞானம்! இவையெல்லாம் எங்கிருந்து நீ பார்த்துக்கொண்டிருந்தாய்?' என்றாள்.

"என்ன, அம்மணி' என் கதையைச்சொன்னால், நீ எங்கிருந்து பார்த்துக்கொண்டிருந்தாயென்று கேட்கிறீர்கள்?"

"ஞானம்! தெரியும். நீ வேடிக்கையாகப் பேசுகிறாயென்று நான் அறிவேன்; நீ வேடிக்கையாக வேறு யாரிடமும் சொல்லிவிடாதே."

"நானா சொல்வேன்? அவ்விதம் சொன்னால் யாருக்குக் கேவலம். எனக்குத்தானே. நீங்கள் என்னுடைய எஜமானியானது பற்றி யான் உங்களிடம் சொன்னேன். இல்லாவிடில் உங்களுக்கும் சொல்லமாட்டேன். நல்ல அழகுவாய்ந்த வாலிபரவர். அவரைத் தாங்கள் பார்க்கவேண்டுமானால், நாளை அவரை என்னைத் தடாகக்கரையில் சந்திக்கச்சொல்லி யிருக்கிறேன். அவர் கட்டாயம் அங்கு வருவர்; அப்பொழுது உங்களையும் கூட்டிச் செல்கின்றேன். வருகின்றீர்களா?

"நானே உன்னையுமழைத்துச் செல்கின்றேன். எங்கிருந்து இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தாய். நீ இவ்விடம் இல்லை யென்றல்லவோ நினைத்து மோசம் போனேன். பரவாயில்லை. நீ தானே பார்த்தனை. வேறொருவரும் பார்க்கவில்லையே. ஞானம் உள்ளதுரை; என் மனம் பதை பதைக்கின்றது" என்று கனகு மிக்கப்பயம் கொள்ளவே, ஞானம் தான் இனியும் இவ்விதமாகக் கேலி செய்வது அழகல்லவென்றெண்ணி "அம்மணி! தாங்கள் பயப்பட வேண்டாம். என்னைத்தவிர ஒருவரும் பார்க்கவில்லை. நான் அடுத்த அறையில் உடுப்புக்களைச் சரி பார்த்துக்கொண்டிருந்தேன். அதில் நாளை எவ்வுடை தாங்கள் உடுக்கப் பிரியப்படுகின்றீர்களென்று கேட்பதற்காகத் தங்களைத் தங்களிருப்பிடம் வந்து தேடினேன். காணவில்லை. உடனே சாளரத்தின் வழியாய் நோக்கவே தங்களை லாயத்திற் கண்டேன். காணவும் தங்களுடன் ஓர் ஆடவர் வார்த்தையாடிக்கொண்டிருக்கவும் என்ன சம்பாஷணை செய்கின்றீர்களென்று அறிய ஆவல்கொண்டு ஒருவருக்கும் தெரியாமற் பக்கத்தில் மறைந்து இவையெல்லாம் கேட்டு விட்டு, மறுபடியும் யானிருந்த இடத்திற்கு வந்துவிட்டேன். அவரை மணக்க இஷ்டந்தானோ?'

"அதைப்பற்றி நானொன்றும் சொல்லமுடியாது தயங்குகிறேன். அவரெப்படி ஞானம்?"

"நல்லவர் தானென்று நினைக்கிறேன்."

"அவர் யாரென்று தெரியுமா?"

"தெரியாதே. அவர் யாராம்?"

"அவர் தான், சித்ரகவி வித்வான் ஸ்ரீமான் முத்தையா பிள்ளைக்குப் பதிலாய் அரண்மனைக் காரியாதிகளை மேல்நடத்த நமது அரசரால் நியமித்து வந்திருக்கின்றவராம்."

"அவரை மணக்கத் தங்களுக்கிஷ்டந்தானே?"

"அது தான் யோசனையாக இருக்கிறது."

"என்ன யோசனை. காதலித்தாய் விட்டது. அதனை மாற்றக்கூடாது. எப்பொழுது ஒருவரை மனதில் நினைத்து விட்டோமோ அவரையே மணத்தல் வேண்டும். அவ்விதமில்லாது, அவருடைய வேலையை நினைத்துக்கொண்டு, அவரைத் தங்கள் மனதினின்றும் அகற்ற எண்ணங்கொள்வீராகில், உங்களுடைய கற்புநிலை குன்றும் என்பது வேதவாக்கியம். மேலும் அவ்வாலிபர் தங்களுக்கேற்றவர் தான். அவர் ஓர் அரச குமாரனாகத் தானிருக்கவேண்டும். ஏனென்றால் அவருடைய முகத்தில் இராஜலக்ஷணம் பொருந்தியிருக்கின்றது. ஆதலால் தாங்கள் அவரைக் காதலிப்பது வீண் என்று நினைக்கவேண்டாம். அவரையே காதலியுங்கள். இதுதான் என் அபிப்பிராயம். தங்களுடைய மனது எங்ஙனமிருக்கிறது?

"ஞானம்! என்னுடைய அபிப்பிராயமுமதுவே. ஆனால் அவருடைய மனது எப்படியிருக்கிறதோ அறியேன். அவர் என்னை மணக்கச் சம்மதியாவிடில் என் வாழ்நாள் வீண் நாளாகவன்றோ முடியும் என்று நினைக்குந்தோறும் என் மனமுடைகின்றது. ஆதலால் நாளை அவரைத் தடாகக்கரையிற் சந்தித்து அவருடைய மனதையறிந்து விடுகிறேன்."

"மனதை என்ன அறிகிறது? அவர் மாட்டேனென்று சொன்னால் விட்டு விடுகின்றதா என்ன?"

"பின் செய்வதென்ன?"

"அவரை எவ்விதமாவது வசப்படுத்தவேண்டும். இல்லையேல் தங்களுக்கு என்றுந் துயர் வந்தடையுமே?"

"ஆம். ஞானம். நீ சொல்வது தான் சரி. கடவுளிருக்கின்றார். பார்ப்போம் நாளை" என்று இவ்விதம் சம்பாஷித்துக்கொண்டிருக்கும் பொழுதே, வேலையாளொருவள் போஜனங்கொணர, இருவரும் உண்டபின் ஒருவரை ஒருவர் பிரிந்து வழக்கம்போல் தத்தம் படுக்கைக்குச் சென்றனர்.

இங்கு இவ்வாறிருக்க, கனகியிடம் விடைபெற்ற பாலன் தன் விடுதியடைந்து "என்னுடன் சம்பாஷித்துச் சென்ற அணங்கு யாராயிருக்கலாம்? வார்த்தையாடி நாணிச்சென்ற அவளது எண்ணம் என்னவாயிருக்கலாம்? அவளது கருத்தை நாளை அறிந்துவிடுவோம். என்ன சௌந்தர்யம்! அன்ன நடையைப்பின்ன நடையாக்கும் அவள் நன்னடையே நடை. வடிவிற் சிறந்த வனிதையவள். அழகிற் சிறந்த அம்பிகை என்பதற்குச் சற்றும் சந்தேகமில்லை. பொலிவிற் சிறந்த பொற்பாவையவள் என்பதை யார் மறுக்கக்கூடும். ஒருவரும் மறுக்க இயலாது" என்று தன்மனதிலெண்ணிப்பின்னர்த் தன் தங்கையிடம் அரசைத்தரிசித்து வந்த விபரத்தை சவிஸ்தாரமாக நவின்று, இரா உணவருந்தி துயில்வானாயினான்.

மறுநாள் மாலைப்பொழுது சமீபித்தது. கனகாம்பாளோ பாலனைச் சந்திக்கக்கருதித் தன்னறையிற் பாலன் ஞாபகமாகவே நல்லுடைகளை யணிந்துகொண்டிருந்தாள். அப்பொழுது ஞானம் அவ்விடம் தோன்றி, "அம்மணி! என்னை மறந்து விட்டீர்கள் போலும்?" என்று கேட்டனள்.

அதற்குக் கனகு, "ஞானம்! நன்றாய் மறந்தேனே! நான் உடுத்திக்கொண்டு உன்னை யழைத்துச் செல்லலாமென்றே நினைத்துக்கொண்டிருந்தேன். நீயும் நல்ல வேளையாய் வந்து விட்டாய். வருகின்றாயல்லவா?" என்று கேட்டாள்.

"யான் வரத்தடையில்லை யம்மணி. ஆனால் இவ்விதக் கோலத்துடனோ தங்களுடன் வருவது?"

"ஞானம்! என் இவ்விதக்கோலத்துடன் வரவேண்டும்! போய் விரைவில் ஆடையாபரணலங்கிருதையாக ஓடிவா."

"அவ்விதமே வருகின்றேன். சற்றுப் பொறுங்கள்" கனகிடம் அனுமதிபெற்றுச்சென்ற ஞானம் அவள் சொல்லிற்கிணங்கவே அதிசீக்கிரம் ஆடையாபரணலங்கிருதையாய்க் கனகை அடைந்தனள். உடனே இருவரும் முன் பேசிக்கொண்டபடி தடாகக்கரையை நோக்கிச்செல்வாராயினர்.

பாலனும் சங்கேதப்படி இவர்கள் இருவரின் வருகைக்கு முன்னதாகவே "நாம் சீக்கிரம் போனால் தான் நலம். இல்லையேல், காண்போர் மனத்தைக் கணப்பொழுதில் அழிக்கும் நம் காரிகை நம்மைக் காணவில்லை என்று திரும்பிவிடுவாள்" என நினைந்து தடாகக்கரை சேர்ந்து கனகின் வருகைக்காகக் காத்துக்கொண்டிருந்தான். அப்பொழுது கனகும் அவ்விடம் வர, ஞானம் கனகின் கருத்தை யறிந்தவளானதுபற்றிக் காதலர் கூட்டுறவைப்பிரிக்க மனஞ்சகியாது, தனது எஜமானியைப்பிரிந்து, சற்றுத் தூரத்திலிருந்த சித்தசன் குன்றுக்கருகில் சென்று அவ்விடம் மலர்ந்திருந்த பூக்களின் பெருமையை ஆராய்பவள் போல அமர்ந்திருந்தாள்.

கனகு பாலனை அணுகி ஓர் பூச்செடியின் மறைவில் நின்று தலைகவிழ்ந்து பூவொன்றைக் கையில் வைத்து நசுக்கிக்கொண்டு 'ஆடவனுடன் முதலில் எவ்விதம் சம்பாஷிப்ப'தென்று மனக்கூச்சங்கொண்டு நின்றுகொண்டிருந்தாள். அதனைக்கண்ட பாலன் அவள் நின்றுதிகைக்கும் கருத்தையறிந்து அவளை நெருங்கிப் பகர்வான்:

"பெண்ணே! நேற்று நீயே உன் பவளவாயால் என்னை இவ்விடம் வரும்படி சொல்லினை. அதற்கிணங்க நானிவ்விடம் வெகுநேரம் உன் வருகையைத்தேவதைகள் வரவிற்காகத் தவசிகள் எதிர்பார்ப்பது போல் எதிர்பார்த்து நிற்க நீயும் தேவதைகள் ரிஷிகளிடம் தோன்றுவது போலவே என் முன் தோன்றினாய். அவ்விதம் தோன்றும் தேவதைகள் உடனே வரந்தருவது தான் வழக்கமென்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கின்றேன். அவ்விதமிருக்க நீயோ தற்சமயம் அதற்கு மாறாக, என்னை யணுகியும் சங்கோஜப்பட்டுக்கொண்டு நிற்பது உனக்கு அழகோ? என்றாலும் பாவாயில்லை. இந்நாணம் பெண்களுக்குரியது தான். நான் நேற்று உன்னை "நீயார்' என்று கேட்டதற்கு மறுமொழியுரையாது இன்று சொல்வதாய்ச் சொல்லிச் சென்றனையே, அந்தப்படி இன்று தான் நீயாரென்று புகலக்கூடாதோ?"

இவ்வார்த்தைகளுக்குச் சீரில் சிறந்த சிந்தாமணி யாதும் பதில் கூறாது புன்னகை பூத்தவளாய் மௌனஞ் சாதித்தது கண்ட பாலனும் கனகின் மீது காதல்கொண்டவனாகி, அவளை யணுகி, அவளது கையைப்பற்றிக்கொண்டு மறுபடியும், "என் கண்ணே! நீயார் என்று எனக்கு அவசியம் சொல்லல் வேண்டும்" என்று கேட்க நாணத்தில் மூழ்கி அதற்கும் பதிலுரையாதிருந்தாள் எழில் நலம்படைத்த கனகாம்பாள்.

அதன் பின் பாலன் மெல்லத் தன் கையை அவளது தோளிற்போட்டு மற்றோர் கைகொண்டு அவளது நாடியைத் தாங்கினவனாய் "என் மரகதமே! ஏன் மௌனஞ் சாதிக்கின்றாய்?" என்று கேட்க, ஆடவன் கை தன் தோளில் விழக்கண்ட மீனாள்மணி நடுக்கங்கொண்டு யாதொன்றுஞ் செய்யச் சக்தியற்றவளான கனகு திடீரென்று மூர்ச்சித்தாள்.

இதனைப் பார்த்துக்கொண்டிருந்த ஞானம் ஓடோடியும் வந்து பாலனை "யாது நடந்த" தென வினவ, பாலன், "ஒன்றும் நடக்கவில்லை. பின்னர் பேசிக்கொள்ளலாம். இக் கைக் குட்டையைத் தடாகத்தண்ணீரில் நனைத்துக்கொண்டு சீக்கிரம் ஓடிவா" என்று தன் கைக்குட்டையைக் கொடுக்க; ஞானம் ஓடி அவ்விதமே அத்துண்டைத் தண்ணீரில் நனைத்துக்கொணர்ந்தாள். பாலன் அதனை வாங்கிக் கனகைத் தன் மார் மீதணைத்து, அவளது முகாரவிந்தத்தில் தண்ணீரை விட்டுத் துடைக்கவே, கனகு பிரக்ஞை பெற்று விழிகளைத் திறந்து பார்த்தாள். பார்த்ததும், தான் பாலன் மார்பின் மீது சாய்ந்திருப்பதையும், தன் பக்கத்தில் தன்னருந்தோழி ஞானம் நிற்பதையுங்கண்டு மிகவும் லஜ்ஜைப்பட, ஞானம் மறுபடியும் ஓடி மறைந்துகொண்டாள். அப்பொழுது பாலன் கனகின் மயக்கத்திற்கு மிகுதியும் வருந்தினவனாகிக் கனகை நோக்கி, "பெண் பாவாய்! உனக்கு மயக்கம் வர நான் என்ன காரியம் பண்ணினேன்? ஒன்றுமில்லையே என்றான்.

"எனக்கொன்றுந் தெரியாது. எதனால் தான் யான் பிரக்ஞை தப்பினேனென்று இன்னும் எனக்கே தெரியவில்லை. ஞானம் இங்கு ஓடிவந்தனளோ?"

"ஆம். அவளையுமா உடனழைத்து வந்தாய்?"

"ஆம். நான் வரும்போது அவளும் வருகிறேனென்றாள். அதனாற் கூட்டிவந்தேன்."

"எங்கு 'வருகிறேன்' என்றாள்?"

"இவ்விடத்திற்குத் தான்."

"நம் சமாச்சாரம் அவளுக்குத் தெரியுமோ?"

"தெரியும்."

"எவ்விதம்?"

"நேற்றுக் குதிரை லாயத்தில் நடந்த நம் சம்பாஷணை பூராவும் அவள் கேட்டு விட்டாள்."

"எங்ஙனம்?"

"லாயத்தின் பக்கலில் ஒளிந்து."

"மிகக் கெட்டிக்காரி தான்."

"அதிலென்ன சந்தேகம்.?"

"சரி இருக்கட்டும்; அதனைப்பற்றிப் பின்னர் பேசிக் கொள்ளலாம். இப்பொழுதெங்கே யவள்?"

"நம் சம்பாஷணையைத்தடுக்க மனமில்லாது துலைவிற் சென்று மறைந்திருக்கின்றாளென நினைக்கின்றேன்."

"அவள் புத்திசாலி தான். அதனாலல்லவா மறைந்து கொண்டாள். நல்லது. நேரமாகிறது. என்னை ஏன் இன்னும் வருத்துகின்றாய்? என் செல்வமே! இப்பொழுதாவது உன் பெயரையும் நீயாரென்றும் எனக் குரைக்கக்கூடாதோ?"

"யான் இனிமேல் எனக்குதவி செய்து என்னை என் மயக்கத்தினின்றும் தெளிவுண்டு பண்ணிவைத்த தங்களிட முரையாது வேறு யாரிடம் உரைக்கப்போகின்றேன்? யான் கிழவரசரின் பேர்த்தியாவேன். அவருக்கு ருக்மணி என்ற ஓர் பெண்ணும் அமரசிங்கென்ற ஓர் மகனுமுண்டு. நான் ருக்மணியின் வயிற்றிற் பிறந்தவள். எனது அன்னையும் பிதாவும் என்னை என் சிறு வயதில் விட்டிறக்க, என்னை எனது மாமனார் தான் வளர்த்து வருகின்றார்?"

"யார் அமரசிங்கென்பவரா?"

"ஆம். அவர் தான். என் பெயர் கனகாம்பாள் என்பர்."

"உன் தாயாருடன் பிறந்தோர் வேறு யாருமிலரோ?"

"மோகனசிங் என்றொருவர் இருந்ததாகவும், அன்னவர் ஏதோ ஓர் குற்றத்திற்காகத் துரத்துண்டதாகவும் இலை மறைவு தலை மறைவாகச் சொல்லிக்கொள்கிறார்கள். எனக்கு அவ்விருத்தாந்தம் நன்றாகத் தெரியவில்லை."

"ஓஹோ! அப்படியா? உனக்குத் தெரிந்தவரையிலும் அவர் துரத்துண்டு எத்தனை வருடகாலமிருக்கலாம்?"

"சுமார் 19 அல்லது 20 வருடமிருக்கலா மென்று சொல்லிக்கொள்கின்றார்கள்."

"உனது மாமாவாகிய அமரசிங்கென்பவர்க்குக் குழந்தைகளிருக்கின்றனவா?"

"அவருக்கு இன்னும் விவாகமே ஆகவில்லை. அத்துடன் அவருக்குக் கல்யாணமே செய்ய விருப்பமுமில்லை. அதனால் தான் என்னையவர் ஓர் குழந்தைபோற்பாவித்து வருகின்றார்."

"அவர் இப்பொழுது எங்கிருக்கின்றார்?"

"இப்பொழுது பாண்டியிலிருக்கின்றார்."

"அவர் உன்னைக் குழந்தைபோல் வைத்திருக்கின்றார் என்கின்றனை. 'அவர் எங்கே?' என்றால் பாண்டிநாட்டிலிருக்கின்றார் என்கின்றனை. மிகவும் நன்றாய் இருக்கின்றது."

"யான் சிறு வயதாயிருக்கும்போது அவருடன் தான் இருந்து வந்தேன். வயதடையவும் அரசர் தான் என்னை இவண்விடுத்து ஏகும்படி மாமாவுக்கு ஆக்ஞை செய்தார். அதன் பிரகாரம் யான் இவ்விடம் காலங் கழிக்கின்றேன்."

"பாண்டிநாட்டிலேயே இருந்து வருகின்றாரா, அல்லது இவ்விடமும் வந்து போய்க்கொண்டிருக்கின்றாரா?"

"இவ்விடமும் வந்து போய்த்தானிருக்கிறார்."

"எவ்வளவு நாளைக்கொருதரம் இவ்விடம் வருவார்?"

"மூன்றுவருடத்திற் கொருமுறை."

"எதற்காக?"

"என்னையும் எனது பாட்டனாராகிய அரசனையும் பார்த்துச் செல்வதற்காகவே."

"அப்படியானால் அவர் கடைசிமுறை பார்த்துச்சென்று எவ்வளவு காலமிருக்கும்?"

"இப்பொழுது தான் சுமார் மூன்று மாதங்களுக்கு முன்னர் வந்துபோனார்."

"வரும் ஒவ்வொரு முறையும் அவர் எத்தனை நாட்கள் வரை இங்கு தங்குவார்?"

"வெகுநாட்கள் தங்கார். ஒருவாரமிருந்துவிட்டுப் பின்னர் மறுபடியும் பாண்டிக்கே ஓடிவிடுவார்."

"ஏனவர் இங்கிராது அவ்விடமே செல்லல் வேண்டும்?"

"என்ன காரணமோ தெரியவில்லை. யான் ஒரு தரம் இக்கேள்வியைக் கேட்டேன். தனக்கு இவ்விடமிருக்கப் பிரியமில்லாததனால் தான் அவ்விடம் தங்கி வருவதாகப் பதிலுரைத்துச்சென்றார். ஆனால், எனது செவிலித்தாய் அவரது அண்ணன் பிரிவிற்காக வருந்தியே அவர் நாட்களை எல்லாம் பாண்டிநாட்டிற் கழித்துவருகின்றார் எனச்சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். இதுதான் எனக்குத்தெரியும்."

"இன்ன குற்றத்திற்காகத்தான் அவரது அண்ணன் துரத்துண்டாரென்பது உனக்குத்தெரியாதோ?"

"மோகனசிங் என்னும் அவரது அண்ணன் போர்முனையில் ஓர் கால் முதுகுகாட்டி வந்ததற்காக என்று யாரோ ஒருவர் என்னிடம் சொல்லக்கேட்டிருக்கின்றேன். ஆனால் இன்னார் தான் என்று திடமாய்ச் சொல்லுதற்கு ஞாபகமில்லை."

'மோகனசிங்' என்ற வார்த்தையைக் கேட்டவுடனே வெய்துயிர்த்துப் பாலன் சிறிது மாறுபட்ட முகத்துடனிருக்கவுமே, ஞானம், வீட்டிற்குச் செல்லும் சமயம் கிட்டிவிட்டதென்றும், இன்னொரு தினம் சகலமும் பேசிக்கொள்ளலாமென்றும் அங்கு வந்து மெதுவாயுரைத்துக் கனகை யழைக்கப் பாலனும் கனகும் ஒருவர்க்கொருவர் விடை பெற்றுக்கொண்டு தத்தம் இருப்பிடம் சென்றனர்.

இவ்விதமாகக் கனகுடன் அடிக்கடி சம்பாஷித்துக்கொண்டும், அரண்மனைக் கார்யங்களை மேல் நடத்திக்கொண்டும், தன் அன்னையையும் பிதாவையும் நினைந்து நினைந்து வருந்திக்கொண்டும் பாலன் சுமார் இரண்டு வருடங்களை அவ்விடம் கழித்தானாயினும், கனகிடமிருந்து முதல் நாள் சம்பாஷணையால் அமரசிங் சோழநாட்டில் தங்குகிறதில்லை என்று மட்டுமறிந்தானே யொழிய வேறுவிதமாய் வேறொரு துப்பும் கிடைக்காது மயங்கித் தவிக்கலானான். ஆனால் ஒன்று மட்டிலும் பாலன் மனத்திலிருந்து ஒன்றும் விளங்கவொட்டாது செய்துகொண்டிருந்தது. அதாவது, 'அமரசிங் ஏன் அவனது சுயநாட்டில் வயது சென்ற அவனது தந்தைக்கு உதவிசெய்துகொண்டிருந்து வராது, சண்டையில் ஜயிக்கப்பட்ட வேம்பனது நாட்டிலிருந்து வரவேண்டும்?' என்பதே.

"கனகின் செவிலித்தாய் கனகிற் கறைந்ததுபோல், அமரசிங் நம் தந்தையின் பிரிவாற்றாமை சகியாமற்றான் பாண்டியிலிருந்து வருகின்றானென நினைத்தால், அவசியம் நமது தந்தையை எங்கிருந்தாவது தேடிக்கொண்டு வரும்படி எத்திக்கிலும் அவன் ஆட்கள் அனுப்பியிருக்கலாமே? அங்ஙனமிருக்க அவ்விதமவன் முயற்சித்ததாகத் தெரியவில்லையே. ஆனால் ஒரு வேளை அண்ணன் அரசாளவேண்டிய இடத்தில்

தம்பியாகிய அவனிருந்து அரசாளின் நகரத்தோர் யாவரும் பணிவரென்றெண்ணி, என்னைத் தொலைத்துவிட்ட பின்னரே அரசாள எண்ணுகின்றான் போலும். இருக்கட் டும் அறிவோம்' என்றெண்ணிய பாலன் தன் தங்கைமகேனன் மனைவியுடனும் இதனை நன்கு விபரமாயுரைத்துக் காலத்தை ஒருவாறு போக்கி வருவானாயினன்.

இங்ஙனமிருந்து வரும் ஓர் தினம், பாலன் தன் கறுப் புக்குதிரையின் மீது ஏறிச் சவாரிசெய்யக் கருதி அக்குதிரை யை லாயத்தினின்றும் வெளிக்கொணர்ந்து சேணமிட்டு ஏறி உட்கார்ந்து வடதிசையை நோக்கிச் செலுத்தலுற்றான். அவ் வளவு தான் தாமதம். குதிரை ஒரே ஓட்டமாக வடதிசையை நோக்கியே நிற்காது ஓட ஆரம்பித்தது. பாலன் தன்னாலான மட்டும் அதனை அடக்கப் பிரயாசைப்பட்டான். கூடவில்லை. அதனாற்பாலன் 'எங்குதான் செல்கின்றதென்பதைப் பார்ப்போம்' என்றெண்ணி அதன் மனம்போற் போன போன இடமெல் லாம் போகட்டுமென்று விட்டு விட்டான். அதுவுமோ காடு, மலை, கால்வாய், ஆறு, குளம் ஆகிய இவைகளை யெல்லாம் கடந்து கடந்து போய்க்கொண்டே யிருந்தது. காலை 6 மணிக்குப் புறப்பட்ட பாலனும் மணி 12 ஆகியும் மனஞ்சலி யாது அதன் மனப்படியே விடுத்துச் சென்றான். அது சுமார் 4 மணிக்கெல்லாம் மற்றோர் காடையடைந்து அப்பாலே தக் கென்று ஓரிடத்தில் நின்றுகொண்டது.

அவ்விதம் நின்ற தன் புரவியை மற்றும் செலுத்த எவ் வளவோ பிரயாசைப்பட்டும் கூடாமையாற் பாலன் யாது செய்வதென்றறியாது ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டு நிற்குங் கால், 'பளீர், பளீர்' என்ற அரவமும் ஓர் அழுகைக்குரலும் தொனிக்க, உடனே பாலன் நாற்புறமும் சுற்றிப் பார்த்தான்.

எவ்விடமிருந்து தான் அவ்வொலி வருகின்றதென அறியக் கூடவில்லை. சற்று நேரங்கழியவும் வடதிசையிலிருந்து வருவதை யுணர்ந்து அத்திக்கை நோக்கி நடக்கலும், பெரியதோர் விருக்ஷத்தில் பெண்ணொருத்தியைக் கயிறுகொண்டு வரிந்து ஓர் ஆடவன் சவுக்கால் அடித்துக்கொண்டிருக்கக் கண்டான். இன்னது தான் செய்வதென்றறியாது கட்டுண்டிருக்கும் பெண் மீது மிகுதியும் இரக்கங்கொண்டு யாதொன்றும் அவ்விருவரில் ஒருவரிடமாவது உசாவ மனமற்றவனாய் அவளை அடித்துக்கொண்டிருந்தவனைப் பிடித்து மற்றோர் மரத்திற் கட்டி வைத்து அவன் கைக்கொண்டிருந்த சவுக்கையே தன் கைக்கொண்ட பாலன், அதனைக்கொண்டே அம்மனிதனைச் சன்மானித்தான். அதன் பின்னர் பெண்ணின் கட்டவிழ்த்து விட்டு நடந்த சங்கதியை அறிய ஆவல்மேற் கொண்டவனாய் அடிபட்ட பெண்ணை நோக்கிப் "பெண்ணே! நீயார்? உன்னை ஏன் இவன் இவ்விதமாக அடிக்கலானான்? இவன் உனக்கென்ன வேணும்?" என வினவினான்.

அதனைக்கேட்ட அம்மனிதன், "ஒனக்கென்னடா எம் பொண்டாட்டியே அடிச்சா!" என்றான்.

"பயலே! பத்திரம். சவுக்கடி இன்னும் பொழியப்போகின்றேன். மரியாதையாகவிரு."

"எம் பொண்டாட்டியே அடிச்சுக்குட்டிப் போகவாடா இந்த மாதிரியெல்லாஞ் செய்றே?'

"அடியே சூனி! ஒன்னைக் கொன்னுடுவேன். அவங் கூடப்போகவா பாக்குறே? என் உசிரு போனாத்தான் ஒன்னை அவங்கொண்டுக்குட்டிப் போக முடியும். இல்லாட்டா முடியாது பாத்துக்கோ" என்ற அப்பயலைப்பிடித்துப் பாலன் மறுபடியும் கட்டிவிட்டு, இவளை நோக்கி, "உன் வீடெது?"

என்ன, அவள், "ஐயா! அதோ பாருங்கள்; அந்தா இருக்கே அந்தக் குச்சுத்தான் என் வீடு" என்றாள்.

"இவன் யார்?"

"ஏம்புருசேங்க."

"ஏனுன்னை இவ்விதமாக அடிக்கிறான்?"

"அதை ஏஞ்சாமி கேக்குறிங்க. சொன்னவயத்தெரிச்ச."

"அதனைச் சொல். நீயாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். அவனைப்பற்றியே கவனிக்கத்தேவை இல்லை. அதற்குத் தகுந்த பரிகாரம் பண்ணச்செய்கின்றேன்."

"அடி! முண்டே! எதாச்சுஞ் சொன்னே, ஒன்னைத் தொலச்சுட்டுத்தான் மறு சோலி பாப்பேன்"

"சாமி! அவனே இன்னி ஒன்னுஞ் செய்யாதிங்க. அவங் கெடக்குறான். கேளுங்க நீங்க. இவன் காத்துட்டுக்கூடச் சம்பாரிக்கமாட்டேங்குறான். என்னை எப்பவும் ஒதச்சு, நாங் கூலிக்கிக் குத்திக்கிட்டுவர அரிசியையும் வித்துவித்துக் குடிக்கிறான். நாந் தினந்தினம் பட்டினி கெடக்க வேண்டியிருக்கு. இன்னக்கி எனக்குள்ள வெசாதியாலே நெல்லுக்குத்தப் போகல்லே. 'ஏண்டி போகல்லே?' ன்னு இவன் என்னைக் கேட்டான். நான் 'சொகமாயில்லே' ன்னேன். அதுக்குப்பொற, முந்தி ஏங்கிட்ட 50 ரூபா குடுத்து வச்சிருந்தான். பத்தொம்பது வருஷத்துக்கு முந்திக்குடுத்த ரூபா இன்னமிருக்குமா சாமி? அதையும் அவன் எளவுக்குத்தான் குடுத்துட்டேன். 'அதுலே மிச்சமிருந்தாக்குடுடி' ன்னு இப்போ இருக்குமா? நீங்கதாஞ் சொல்லுங்க சாமி ஞாயத்தே."

"அந்த 50 ரூபாயும் அவனுக்கு எப்படிக் கிடைத்தது?"

"அடியே! அதைச் சொனனின்னுப் பார்த்துக்கோ? ஜாக்கிறதே ஒன்னே ஒரே வெட்டுத்தான்."

"நீங்க அந்த வெவரத்தைக்கேளுங்க சாமி. அந்தக் குடிகாரப்பய பேச்சுக் கிடக்கட்டும். அவனைப் பாக்காதிங்க."

"சொல், சொல்."

"முந்தி மாராசா புள்ளே ஒருத்தர் இருந்தாருங்க. அவருடைய அண்ணம் பேருலே அவரு இவனே ஒரு பொய்ச் சாச்சி சொல்லச்சொல்லி அதுக்கு 5000 ரூபா குடுக்குறேண்டு சொல்லி அம்பது ரூபா முன்னுப்பிலே குடுத்தார். அதை இவன் வாங்கிக்கிட்டு மாராசா மூத்தபுள்ளே பேருலே பொய்ச் சாச்சி துணிஞ்சு சொல்லி அவரைப் பட்டத்துக்கு ஆளாகாத படி விரட்டிவிட்டான். பொற, எளையராசாட்ட அவரு குடுக்குறேன்னு சொன்ன தொகையை கேக்க, "எனக்கென்ன? நாந்தரமாட்டேன். நீ வெளியே சொன்னு நானுன்னேக் காட்டிக் குடுத்துற்றேன். பின்னுலே ஒங் கெதி என்னகு முன்னு நீயே யோசுச்சுக்கோ" ன்னு பயமுறுத்திட்டுப் போயிட்டாருங்க. அன்னக்கியிருந்து இவங் கிருக்குப்புடுச்சவனுட்டமாகி திருடத் தலப்பட்டான். இப்போ இவங் குட்டு எல்லாருக்குந் தெருஞ்சிருச்சு. அதுனுலே திருடமுடியல்லே. என்னயே வந்து தொந்தரவு செய்றுன். பொம்பளையால் என்னுமுடியுஞ் சாமி?" என்று சொன்னுள். சொல்லவே கட்டியிருந்த பாப்ஜானே அவிழ்த்துவிட்டு, அவனே அவன் உள்ளதொளியாது நடந்ததைச் சொன்னுல் அவனைக் காட்டிக் கொடுக்கவில்லை யென்றும், அவனைத்தானே போஷித்து வருவதாகவும் வாக்குறுதி செய்ய, பாப்ஜான் வந்தது வரட்டுமென்று நடந்ததை நடந்தவாறே சொன்னுன். பாலன் அவனுரைத்ததை யெல்லாம் ஓர் கடிதத்தில் எழுதிக்கொண்டு

அவனையும் அவனது மனைவியாகிய வீராயையும் அக்கடிதத்திற் கையெழுத்து வைக்கச்சொல்ல, அவ்விருவரும் அக்காகிதத்திற் கையெழுத்திட்டனர். அன்னவர்களுக்குப் பாலன் பத்துப்பவுன் தந்து, அவர்களைத் தான் மற்றொரு முறை பார்க்கவேண்டி யிருக்குமென்றும் அவர்களிடம் தெரிவித்துத் தன் குதிரையின் மீது உட்கார்ந்து, "இப்பொழுது தான் கடவுள் நமக்குதவி செய்ய நினைத்திருக்கின்றார் போலும்" என நினைத்து அகக்களிப்புக்கொண்டு தீவிரித்து வீடடைந்தான். ஆங்கு மனோன்மணியுடன் நடந்த யாவையும் விளம்பி அவன் கையெழுத்துடன் கொணர்ந்த கடிதத்தை மனோன்மணியின் கையிற் கொடுத்தான். அவளதைப் பார்த்தவுடன் அளவில்லா ஆனந்தங்கொண்டு ஓர் சிறு இரும்புப்பெட்டியில் வைத்து மூடித் தன் படுக்கைக்குக் கீழ் ஓர் சிறிய பள்ளமொன்று உண்டுபண்ணி, அப்பெட்டியை அதனுள் வைத்து அதை இராப்பகலாய் அவளது உயிரைப்போலக் கருதி மிகுந்த கவனத்துடன் பாதுகாத்து வந்தாள்.

இது இவ்வாறிருக்க, வழக்கம்போற் பாலன் கனகைச் சித்தசன் குன்றின் பக்கலில் ஓர் சாயரக்ஷை சந்தித்தான். அச்சமயம் கனகு அமரசிங்காகிய அவளது மாமன் அவ்விடம் மறுதினம் வரப்போகிறதாயும், அவர் பொருட்டு விருந்து நடக்கும்பொழுது பாலனும் அவனது தங்கை மனோன்மணியும் அவ்விருந்திற்குக் கட்டாயம் வந்து போகும்படியும் அவனிடத்து விரும்பி வேண்டினள்.

அப்பொழுது பாலன், "அதற்கென்ன? பார்த்துக்கொள்ளலாம். நான் அரசரைக் காணவேண்டிய நேரமாயிற்று. மற்ற சங்கதிகள் பிறகு பேசிக்கொள்ளலாம்." என்று கனகிற்கு

விடைகொடுத்தனுப்பி விட்டு தனது இல்லஞ் சென்று தேக சுத்தி செய்து, நல்லுடை யணிந்து அரண்மனை சென்றான். அவ்விடம் அரசருடன் மிகவும் உல்லாசமாய் வார்த்தையாடிக் கொண்டிருக்கும் அமயம் அரசரும் பாலனிடம் தன் மைந்தன் பாண்டிநாட்டிலிருந்து மறுநாள் வரப்போகிறதால், அவருக்கு வைக்கும் விருந்திற்குப் பாலனும் அவசியம் தங்கை மனோன்மணியுடன் வரவேண்டுமென்று கேட்டனர். பாலன் அதுவரை அழைத்த அவருக்கு எப்பொழுதும் சில சாக்குப் போக்குகள் சொல்லிப் தப்பிவந்தானாயினும், அன்றும் மறுத்தால் அரசர் சஞ்சலத்திற்குள்ளாவார் என்றெண்ணி அரை மனதுடன் பாலன் அவர் சொல்லிற் கிணங்கித்தான் தன் தங்கையுடன் அடுத்த நாள் வருவதாக வாக்களித்தான்.

அந்தச் சமயத்தில் ஒருவன் திடீரென அங்குத் தோன்றி, "மகாராஜாவே! திருடர்கள் பலர் நம் கோட்டைவாயில் பின்புறத்திலிருக்கும் ஓர் அறையைக் கொள்ளையிடுகின்றனர்" என ஓலமிட்டான். உடனே எழுந்து ஓடி அவர்களைத்தாக்க முயன்ற பாலனை, நிருபர் பிடித்துக்கொண்டு, "பாலா! நீ இதற்காகப் போகவேண்டாம். அவர்கள் கொடிய துஷ்டர்கள். ஏனையோர் அவர்களைத் துரத்தி விடுவர். நீ போகவேண்டாம். வீணில் நீயேன் அவ்விடம் கஷ்டப்படவேண்டும்? இவ்விடத்திற்றானே இரு; சம்பாஷித்துக்கொண்டிருக்கலாம்" என்று அவன் மீது வைத்துள்ள அன்பினால் அவனைத் தடுத்தார்.

அதற்குப் பாலன், "வேந்தே! யானோ இத்தகைய காரியங்களைக் கவனித்துக்கொள்ள வந்தவனல்லாது சுகமாயிருந்து அரண்மனைச் சம்பளம் பெறவந்தவனல்லன். மேலும், யான் இக்கொடிய துஷ்டர்களை விடேன். தாங்கள் தயவு செய்து

என்னைத் தடுக்கவேண்டாம்" என்று பதில் மொழிந்து அவர் உத்திரவை எதிர்பாராமலே எழுந்தான்.

அதுகண்ட கொற்றவர், "ஏது பாலன் நிற்கமாட்டான்" எனவறிந்து பாலனைப் பார்த்து, "பாலா! உனக்குப் பிரிய மிருப்பின் நீ உன் கையில் ஒன்றுமில்லாது அவர்களுடன் எதிர்க்கக்கூடாது என்று" சொல்லி அரண்மனைக்குள் ஓடி, ஓர் அருமையான கைத்துப்பாக்கியோடு திரும்பினர். பாலன் அதனைப்பார்த்துப் "பெருமானே! இதெதற்கு?" என்றான்.

"உனக்காகத்தான்"

"எனக்காகவா! என்னிடம் ஒன்றிருக்கின்றதே. அது போதாதென்று இதனைக்கொணர்ந்தீர்கள்?"

"பிள்ளாய்! உன்னிடமிருக்கின்றதை நான் அறிவேன். உன்னதால் மூவரைத்தான் வீழ்த்த முடியும். ஆனல் என்ன தால் பன்னிருவரை வேலே சாய்க்கலாம். ஆகையால் உன துடன் இதனையும் கைக்கொண்டாற் பதினைந்து மனிதரை நமனுலகிற்கு அனுப்பி வைக்க முடியும். ஆகையால் இதனையும் கைக்கொள்" என்று தான் கையில் வைத்திருந்த துப்பாக்கி யையும் பாலன் கையிற்கொடுத்தார்.

அதனைப்பெற்ற பாலன் மறுவார்த்தை யுரையாது மாளி கையின் பின் புறத்தை யடைந்து அவ்விடம் திருடிக்கொண் டிருந்த நால்வரைச் சுட்டு வீழ்த்தினன். அதுகண்ட மற் றெல்லோரும் போன இடந்தெரியாது ஓடி யொழிந்தனர். ஒரே ஒருவன் மட்டிலும் பாலன் கண்களுக்குத் தென்பட, பாலன் அவனைக் கீழ் விழும் வண்ணம் சுடாது, 'ஓர் அடை யாளமிருக்கட்டும்' என உன்னி அவனது வலக்காதை மட்டி லும் கோரப்படுத்தி ஓடி விடும்படி விட்டான். சூடுபட்ட நால்

வரைக்கொணர்ந்து காராக்ரஹத்தில் அடைத்துவிடும்படி திட்டஞ்செய்து, பின் அரண்மனை சென்று நடந்தவற்றை அரசனுக்கறிவித்து, அன்னவரிடம் விடைபெற்றுத் தன் மனை அணுகி ஆங்குத் தன் தங்கைக்கும் நிகழ்ந்தவற்றை ஒன்றும் விடாது நவின்றான். அன்றியும், அடுத்த தினம் அமரசிங் வருவதையும், அமரசிங்குடன் போய் இருவரும் விருந்துண்ண வருவதாய்த்தான் அரசருக்கு அளித்துள்ள வாக்கையும் தெரிவித்துப் போஜனமுண்டு துயில்வானானான்.

மறுநாட் பாலன் தன் தங்கையுடன் தனக்குக் கிடைத்திருக்கும் பாப்ஜானின் வாக்கு மூலமே தன் தந்தையை நிரபராதி யென்று நிரூபிக்கப் போதுமான வழியென்று உல்லாசமாய் வார்த்தையாடிக் கொண்டிருந்தான். அச்சமயம் இருவர் ஓடிவந்து அமரசிங் இளவரசர் பாண்டியிலிருந்து காலையிலேயேவந்து விட்டதாகவும் அவருடன் போஜனமருந்த அவர்களிருவரையும் அரசர் அழைத்துவரச் சொன்னதாகவும் கூறி வணங்கி நின்றனர். அவர்களிடம் தான் மனோன்மணியுடன் வருகிறதாக அறிவிக்க உத்தரவிட்டு அவர்களை அனுப்பிவைத்து, மனோன்மணியை நல்லுடை தரிக்கச்செய்து தானும் சுத்தமான ஆடையணிந்து அரண்மனைக்கு ஏகப்போகுந் தருணம் மனோன்மணி தமயனைப்பார்த்து

“ஆம் அண்ணா, நேற்று ‘ஒருவனைக் காதில் மட்டிலும் கோரையுண்டு பண்ணி ஓட்டிவிட்டேன்’ என்றீர்களே. அவன் யாவன்?” ஏன் அவன் பேரில் மட்டிலும் இரங்கினீர்கள்?

“மனோன்மணி! அவனை உயிர்வதை செய்திருந்தால் நம் காரியம் ஒன்றுமே சித்தியடையாது.”

“ஏன்! அவனால் நமக்கென்ன?”

“அவனை நீ இன்னும் அறியவில்லை போலும்,”

"ஆம். அது யார்?"

"அவன் தான் பாப்ஜான். அவன் எழுதிக்கொடுத்த கடிதந்தான் முன் நான் கொண்டுவந்தது. அவன் இறந்து விட்டால் வேறு யார் சாட்சி சொல்வது என்று எண்ணியே அவனைச்சுடாமல் அவ்விதம் செய்தேன்."

"அவ்வித எண்ணங்கொண்ட தாங்கள் அவனை ஏன் ஒன்றுஞ்செய்யாமல் விட்டு விடக்கூடாது?"

"அப்படியா! அப்படியானால் அவன் திருடினதற்குத் தண்டனை வேண்டியதில்லையோ?"

"சரிதான். அது இருக்கட்டும். இப்பொழுது எங்குச் செல்வதற்கண்ணா என்னை உடுக்கச்சொன்னீர்கள்?"

"மனோன்மணி! நேற்றே உனக்குச் சொல்லவில்லையா? மேலும் சற்று முன் வந்த இருவரிடமும் நாம் வருகிறதாகப் போயறையும் வண்ணம் மொழிந்தனுப்பவில்லையா?"

"விருந்திற்காகவா?"

"ஆம். விருந்திற்காகத்தான்."

"அண்ணா! எனக்கு விருந்திற்கு வரக்கொஞ்சமேனும் பிரியமில்லையாயினும், தாங்கள் கொடுத்திருக்கும் வாக்குறுதி தவறிவிட லாகாதென்றே யானும் புறப்படவேண்டியிருக்கிறது. இருந்தபோதிலும் உங்களுடன் வருவதென்றால் எப்படியும் எனக்குப் பயம் பயம் தான்."

"ஏன் மனோன்மணி பயமாயிருக்கின்றது?"

"வேறொரு பயமுமில்லை. எங்கே நீங்கள் அமரசிங்கைக் கண்டவுடன் மனக் கொதிப்புற்றுத் திடீரென அவனை என்னவாகிலும் செய்து விடுகின்றீர்களோவென்ற பயந்தான்."

"என்னை அவ்விதம் நினைக்காதே."

"அண்ணா! உங்கள் குணத்தை யானென்ன அறியாதவளா? நிச்சயமாய் அவனைக்கண்டவுடன் என்னவாகிலும் செய்யாதிருக்கமாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும்."

"மனோன்மணி! நானென்ன புத்தியற்றவனென்று நினைக்கின்றாய்? அமரசிங்கின் கைக்குட்பட்ட நாடாகிய இச்சேரநாட்டில் நான் தான் மோகனசிங்கின் மைந்தனெனக் காண்பித்தேனானால், அமரசிங் என்னை இலேசில் விடான் என்பதை நான் நன்குணர்ந்தும் அவ்விதம் செய்துகொள்வேனா? ஒருபொழுதும் அவ்விதம் செய்துகொள்ளேன். இதனை நம்பு."

"ஆம் அண்ணா, பார்த்துக்கொள்ளுங்கள். கைக்கெட்டினது வாய்க்கெட்ட வேண்டியிருக்கிறதையும் கவனித்துக்கொள்ளுங்கள். 'அவசரப்படேல்' என்ற ஆன்றோர் வார்த்தைகளை அறமறந்து விடவேண்டாம். மேலும் உங்களுக்குப் பின் பெண்ணாகிய யான் என்ன கஷ்டமனுபவிக்க வேண்டுமென்றும் யோசித்துக்கொள்ளுங்கள். நீங்களறியாத விஷயமொன்றுமில்லை, என்றாலும், எனக்குச் சந்தேகம் சந்தேகந்தான். வாருங்கள். போகலாம்" என மனோன்மணி கூறினாள்.

"தங்காய்! நீயொன்றுக்கும் அஞ்சவேண்டாம். நான் அவ்விதம் நடந்துகொள்ளவே மாட்டேன்" என மனமுழன்று மனோன்மணிக்கு இன்னும் பலவாறான தைரியங்கூறி அன்னவளை விருந்திற்காக மாளிகைக்கழைத்துச்சென்றான். அவ்விடம் இருவரும், அமரசிங், வில்லியசிங், கனகு, முதலியோருடன் சென்று, மனோன்மணி, கனகுடனும், பாலன் வேந்தருடனும் அன்னமருந்துதற்காக நியமித்தபடி உட்கார்ந்தனர்.

பாலனையே பார்த்தவண்ணமாக இருந்தான் அமரசிங். மனோன்மணியும், பாலனும் மற்றையோரை ஏறிட்டு முதலாய்ப்பார்க்காமல் உண்டிகொண்டனர். பாலன் யாவருக்கும் முன்னதாகவே அன்னமருந்திவிட்டு, அவ்விடமிருக்க மனம் பொறாது, உமிழ்நீர் துப்ப வருபவன் போன்று பாவனை செய்து வெளியே சென்றான். சிறிது நேரங் கழிந்தது. மனோன்மணி, கனகுடன் சற்று சம்பாஷித்த பின் அண்ணனைக்கவனிக்க, பாலனைக்காணாது விழிக்கலாயினள். ஏனையோரும் 'பாலனெங்கே?' என அங்குமிங்கும் நோக்கினர். பாலன் அகப்பட்டபாடில்லை. அப்பொழுது அமரசிங் ஆழ்ந்த கலவரத்துடன் தன் தந்தையை நோக்கி உரைப்பான்:

"அப்பா! இவ்வாலியன் யார்?"

"இவன் தான் நானுனக்குரைத்த பாலபக்தன்."

"நம் அரண்மனைக் காரியங்களை மேல்நடத்த அழைத்துள்ள பையன் இவன் தானோ?"

"ஆம்; இவன் தான்."

"இப்பையன் யாராயிருக்கக்கூடுமென்று நீங்கள் அபிப்பிராயப்படுகிறீர்கள்?"

"எனக்கொன்றுந் தெரியவில்லையே. யாராயிருக்கக்கூடுமென்று நீ உத்தேசிக்கின்றாய்?"

"எனக்கு ஓர் சந்தேகந் தோன்றுகின்றது. இவ்விடமிருந்து சென்ற அண்ணா ஓர் கல்யாணம் முடித்திருக்கலாம். அதன் பின் இப்பையன் அவருடைய குழந்தையாக உதித்திருக்கலாம். அவருக்கு வாய்ந்த புத்திரன் இவனையன்றி வேறல்ல. என்று நான் உணர்கின்றேன். தாங்களும் சிறிது கூர்ந்து பார்த்தால் நன்கறிவீர்கள். இதில் சந்தேகமில்லை."

"குழந்தாய்! நானும் அவ்விதந்தான் முதலில் நினைத்தேன். ஆனால் அந்த நினைவை ஓர் ஊர்ஜிதத்திற்குக்கொண்டு வரச் சில அசந்தர்ப்பத்தினால் முடியவில்லை."

"சரி. அவனிடம் அவனது தந்தையர் பெயரை எப்பொழுதாயினும் வினவினீர்களா?"

"இன்னும் வினவிக்கொள்ளவில்லையே."

"அதிருக்கட்டும். இங்குக் கனகுடன் உட்கார்ந்து சம்பாஷித்துக்கொண்டிருக்கும் இப்பெண் யார்?"

"இவள் அவனது தங்கை தான்."

"இப்பெண்ணிடம் அவளது தந்தையின் பெயர் என்னவென்று கேட்டுத் தெரிந்துகொள்ளலாமா?"

"அமரசிங்! பொறு. முதலில் பாலனெங்கே எனக்கண்டு, அவனிடம் உனக்குவேண்டியவற்றைக் கேட்டுக்கொள்ளலாம். பின்னர். வா, எங்கு சென்றானென அறியலாம்" என்று அரசர், அமரசிங்குடனும், மற்றிருபெண்களாய மனோன்மணியுடனும் கனகுடனும் அரண்மனையிலுள்ள ஒவ்வொரு அறையாகத் தேடத்தலைப்பட்டார்.

இங்கு இவ்வாறிருக்க, அமரசிங்கைக் காணவே கோபவெறிக்குள்ளான பாலன் அதனை யடக்க வெளிச்சென்று "ஈஸ்வரா! இக்கொடிய பாவியினாலன்றோ எங்கள் கதி இவ்வாறாயிற்று. இவனை இப்பொழுதே தொலைத்துவிடலாமா? என்ன நேரும்? ஒன்றும் நேராது தான். ஆனால் இவனைக் கொன்றுவிட்டாற் பின்னர் யாரை வைத்துத் தந்தை நிரபராதி என்று நிரூபிப்பது? ஒன்றும் முடியாமற் போய்விடும். இவ்வளவு முயற்சியும் வீணாகி விடும்" என்று சிந்தித்துக்கொண்டே அரண்மனை யடைந்தான். அவ்விடம் ஓர் அறையில் வில்லிய

சிங்கிற்கு முன்னதாகச் சோழநாட்டைச் செங்கோன் முறை கோணாது அரசு செலுத்தி வந்தவர்களுடைய படங்களும், தற்சமயம் ராஜ்யபாரம் நடத்துபவராகிய வில்லியசிங்கனுடைய படமும் மாட்டப்பட்டிருந்தன. அதனைக் கண்ணுற்ற பாலன் அவ்வறையினுள் நுழைந்து அப்படங்கள் யாவற்றையும் வெகு கவனத்துடன் உற்று நோக்கிக்கொண்டிருந்தான். அவ்வித மிருக்குந்தருணம் அப்படங்களுள் ஓர் படமட்டிலும் புற மாறாக அதாவது படமுள்ள புறம் வெளித்தெரியா விதமாக மாட்டப்பட்டிருந்தது. அதனைக்கண்ட பாலன் 'அது என் அவ்விதமிருக்கவேண்டும்? மற்றப் படங்கள் போலிருக்கட்டுமே' என நினைந்து உடனே அப்படத்தை எடுத்து ஏனைய படங்கள் தூக்கப்பட்டிருந்தது போலவே, அதனையும் சுவரில் தூக்கின பின் 'அப்படம் யாருடைய சாயலைக்கொண்டுள்ளதெனக் கண்ணோக்கினான். நோக்கலும், பாலன் அடங்காக் கோபங்கொண்டு அவ்வறையைச் சுற்றிப்பார்த்தான். சகல படங்களுக்கும் மத்தியில் அமரசிங்கின் படம் சேனைத்தலைவனாதல்பற்றி வெகு உன்னதமாய்த் தூக்கப்பட்டிருப்பதைக் கண்டு மனஞ்சகியாப் பாலன், "ஆ! இச்சண்டாளன் படத்தை அலங்கிர்தமாய் வைத்து எனது அருமை பெருமை வாய்ந்த பிதாவின் படத்தை திருப்பி மாட்டிவைத்த இவர்களை என்ன செய்யலாம்? யார் இவ்விதம் செய்தவர்களென்று தெரியவில்லையே. தெரியுமாயின் அவர்களை இலேசில் விடேன். பார்த்துக் கொள்ளலாம். பரமதுஷ்டர்கள் என் தந்தை குற்றவாளியென்றல்லவா நினைத்து அவர் சாயலடங்கிய அப்படத்தை அவ்வளவு மரியாதைக்குறைவாய் வைத்திருக்கிறார்கள். இப்பொழுது எனது பிதா குற்றமற்றவரென்றும், அமரசிங்கே அபராதி என்றும் நிரூபிக்க என்னால் கூடுமே" என்று சபதித்து அமரசிங் படத்தைச் சட்டென்று இருந்தவிடம்

பெயர்த்தெடுத்து வாசலருகே எறிந்துவிட்டுத், தனது தந்தையாகிய மோகனசிங்கின் படத்தைச் சகல படங்களுக்கும் மத்தியில் வைத்துச் சிங்காரித்து அப்படத்தின் பெருமையைக்கண்டு ஆனந்தித்தும், ஒருபுறம் "இவ்வளவு அழகு வாய்ந்திருந்த என் தந்தையை மாசுள்ள முகத்தினராகும்படி செய்தவன் இந்த அமரசிங்கல்லவா?" எனக் கோபங்கொண்டு வாசலண்டை எறியப்பட்டுள்ள அமரசிங்கின் படத்தின் மீது மிதித்துத் துக்கித்துக்கொண்டிருந்தான். அச்சமயம், பாலனைத் தேடிவந்த நால்வரும் அவ்வறை வாயிலை நெருங்கினர். அவர்களில் அரசர் எறிபுண்டு கிடந்த தன் மைந்தன் அமரசிங் படத்தைக்கண்டு, திகைத்து, "இப்படம் இவ்விடம் இவ்வளவு அலங்கோலமாய்க் கிடப்பதேன்?" என்று சொல்லிக்கொண்டே மற்றையருடன் அவ்வறையினுள் நுழைந்தார். நுழையவே அதனைக்கண்ட பாலன் அவர்களைக்கண்டும் காணாதான் போல ஜன்னலண்டை சென்று வெளியே எதையோ கவனிப்பதுபோலப் பாசாங்கு செய்து நிற்பானாயினன்.

அறைக்குட்சென்ற அரசர் அமரசிங்கின் உருவடங்கிய படமிருந்த இடத்தில் மோகனசிங் படமிருப்பதை யுணர்ந்து பாலனைப்பார்த்து மிகவும் ஆங்காரத்துடன் "பாலா! இது யார் இவ்விதம் செய்தது?" என்று கேட்டார்.

அதற்குப் பாலன் "அரசே! யான் தான்." என்றான்.

'அரசே! யான் தான்.' எனப் பாலன் மறுமொழி பகரவே அரசர்க்கு இன்னது தான் செய்வதென்று தெரியவில்லை. க்ஷணத்தில் கோபங்கொண்டு "பாலா! இவ்விளையாட்டு உன்னை யார் விளையாடச் சொன்னது? 'சிறுக இளக்காரங் காண்பித்தால் அது கிடைக்கிறண்டு ஆடி கேட்கும்' என்றது போலவல்லவா ஆகிவிட்டது. நீ இத்தகைய அப்பனென்று எனக்

குத்தெரிந்திருக்குமாகில், இவ்வித மரியாதை உனக்கு ஒரு நாளும் கொடுத்திரேன். இன்றிருந்து யாருடன் எவ்விதமிருக்கவேண்டுமென்ற பாடத்தை எனக்குக் கற்றுவைத்தாய். ஏ! முட்டாள்! படத்தை முன்போல வைக்கின்றனையா, என்ன?" என்று பாலனை நோக்கிக்கூறித் தன் கட்கத்தைக் கையிலெடுக்கப் பாலன் தன் கைத்துப்பாக்கியை வெளியிலெடுத்து வைத்துக்கொண்டு, "யாராகிலும் எனது தந்தையாகிய மோகனசிங்கின் படத்தை இடம்பெயர்க்குமாறு என்னிடம் இன்னொரு முறை அறைவீர்களாகில், உடனே அவ்வித மறையவரைச் சுடத் தயாராக இருக்கின்றேன். நீங்களிருவர் தற்போது நிற்கும் நிலைதவறி ஓரடி முன் வைத்தாலும் உங்களிருவரின் கெதி அதோகெதியாக முடியும்" என ஆர்ப்பரித்தான்.

பாலன் தன்னை மோகனசிங்கின் மைந்தனென அறியப் பண்ணவுமே, வில்லியசிங்கும், அமரசிங்கும், அக்குடன் கனகும் ஸ்தம்பித்து நின்று விட்டனர். மனோன்மணி யாது செய்வதென்றறியாது திக்பிரமை கொண்டவளாகி அப்படியே அசைவற்ற மரம் போலானாள்.

அக்ஷணத்திலேயே பாலன் தன் தங்கை மனோன்மணியை வீட்டிற்கு அழைத்துவர, அவ்விடம், "அண்ணா! உங்கள் குணத்தையறிந்தே உங்களுடன் வரத்தயங்கினேன். 'ஒன்றும் செய்யவில்லை' என்று உறுதி செய்துவிட்டு, நீங்கள் சொன்ன சொல்லைக் கருதாது என்ன காரியம் செய்தீர்களென்று நினைத்துப்பாருங்கள். எனக்கு மிகவும் அச்சங்கொடுக்கிறது. இப்பொழுதோ அமரசிங்கும் அரசரும் நம்மை இன்னாரென்றறிந்துவிட்டனர். அமரசிங் நம்மை இனிமேல் எவ்விதத்திலும் தொலைக்க வழி தேடுவான். இனிமேல் என்ன செய்யலாமென்று எண்ணுகின்றீர்கள்?" என்று சொல்லிப் பாலனுடன் தொடர்ந்து வெதுவாய்ப் பிரலாபித்துக்கொண்டு சென்றாள்.

அது கேட்ட பாலனும் யாது செய்வதெனத் தோன்றாது மனோன்மணியிடமே பின் செய்யவேண்டியவற்றிற்கு வழி கேட்பானானன். அப்பொழுது மனோன்மணி:

"அண்ணா! இன்றே நாம் இந்த ஊரைவிட்டு வேறூர் செல்லவேண்டும். அதுதான் எனக்கு நல்லவழியாகத் தோன்றுகின்றது. அவ்வழியை இகழ்ந்து இன்னும் இவ்விடமே இருக்கத் தலைப்படுவோமானால் ஆபத்தாய் முடியும். ஏனென்றால் எவ்விதத்திலும் பாப்ஜான் மூலமாய் நமக்குக் கிடைத்திருக்கும் கடிதத்தின் சாரமும் அமரசிங்கிற்குத் தெரிந்துவிடும். தெரிந்துவிடில் இன்னும் எவ்வளவு ஆக்ரோஷங்கொள்வான் அமரசிங் என்று நீர்க்க ஆலோசியுங்கள். ஆதலால், அண்ணா! எவ்விதத்திலும் இன்றல்லது நாளையாவது அவசியம் வேற்றூர் ஏகல் வேண்டும். தங்களுடைய அபிப்பிராயம் யாதோ, அறியேன்." என்றாள்

"தங்காய்! பெண்ணென்பது சரியாகவன்றோ இருக்கின்றது. நாம் ஏன் அஞ்சவேண்டும். நாம் பிறந்த அன்றே இறப்பதுதான் நிச்சயமொழிய, மறுபடி பிறப்பது நிச்சயமல்ல. ஆதலால், நீ என்றும் உயிரைத்திரணமாய் மதி."

"அண்ணா! தாங்கள் சொல்வது உண்மையே. ஆனால் நாம் இத்தருணத்தில் மாள்வோமாயின், நாமெடுத்துள்ள பிரயாசைகளெல்லாம் அழியும். மேலும் ஒருவன் விளக்கைப் பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுவதற்கு ஒப்பாகும். நிற்க, விதியையும் மதியால் வெல்லக்கூடாதோ?"

"மனோன்மணி! நீ சொல்வது யாவும் உண்மை தான். உன்னிஷ்டப்படியே நடக்கின்றேன். அஞ்சற்க. நாளையே இவ்விடத்தை விட்டுப்புறப்பட்டு வேறோர் இடம் சென்று, அங்கிருந்து நமது அப்பாவைக்காணப் பிரயாசைப்படவேண்

டும். முன் நான் சொன்னதுபோல உன் படுக்கைக்கடியில் பதிந்துகிடக்கும்அந்த ஒரு துண்டுக்காகிதமே நம்தந்தையைச் சோழநாட்டிற்கதிபதி யாக்கிவிடும். நாளையே இவ்விடத்தை விட்டகன்று விடுவோம். ஆதலால், நான் போய் அரசரிடம் என் கணக்கைத் தீர்த்துக்கொண்டு சடுதியில் திரும்பிவருகிறேன். நீ மட்டிலும் நான் திரும்பி வரும் வரை கவனமாய் இவ்விடம் இருந்துகொள்வையா?"

"ஆகட்டு மண்ணு; போய் வாருங்கள்" என்று தன் தங்கையை அங்குத் தனியே விடுத்துத் தான் அரச மாளிகையை நோக்கிப் புறப்படலானுன்.

இஃதிவ்வாறிருக்க, திக்பிரமைகொண்ட அமரசிங் பெருத்த கலவரத்தோடு தன் தந்தையை நோக்கி யுரைப்பான்'

"அப்பா! யான் இவ்விடம் வந்தவுடனேயே பாலனைப் பார்த்து அவனது முகம் அண்ணுவின் முகச்சாயலையே ஒக்கின்ற" தென்றதற்குத் தாங்கள், "இவன் மோகனசிங்கின் புத்திரனுகான். மோகனசிங்கிற்கு விவாகம் எவ்வாறு நடந்திருக்குமென்று சந்தேகித்தீர்களே. இப்பொழுது பார்த்துக் கொண்டீர்களா அவ்வாலிபன் யாரென்று?"

"ஆமப்பா அமரசிங்! இப்பொழுது தான் எனக்குத் தெரியவந்தது; இனி நாம் இவனை என்ன செய்கின்றது?"

"வந்த வழியாகவே ஓட்டி விடவேண்டியது தான. அண்ணுவிற்கே சொந்தமில்லா இவ்விடத்தில் இவனை வைத்துக் கொள்வது நன்ருகாது. இவன் மிக நெஞ்சுரங்கொண்டவனைத் தோற்றுகின்றுன். இவனுல் அநேக கெடுதிகள் நமக்குச்சம்பவிக்கும். என்பது திண்ணம்; ஆதலால், இவனை உடனே விட்டுடுங்கள்" என அமரசிங் மொழிய, வில்லியசிங்,

"அமரசிங்! என்னுடைய பேரனவனென்றறிந்தும் அவனை நான் துரத்துதல் முறையோ? மோகனசிங்கிற்குப் பதிலாய் இவனையே வைத்து ஆதரித்து வருவதே எனது முக்கிய நோக்கம். மேலும் யாவற்றிலும் வல்லவனாகக் காணப்படுகின்றான். முந்தின நாளிரவு அவனே நம் அரண்மனையைக் கொள்ளையடிக்க வந்த திருடர்களில் நால்வரை வீழ்த்திக் காராக்ரஹத்தில் அடைத்து வைத்திருக்கின்றான். மேலும் அரண்மனைக் காரியங்களிலும் மிக ஒழுங்காய் நடந்து வருகின்றான். அவ்விதமிருக்க, நான் அவனை என் வாயால் ஒரு நாளும் 'போ' வென்றுரையேன். பாலனே தான் போக வேண்டுமென்று பிடிவாதம் பண்ணினல் மட்டிலும் அவன் இவ்வரண்மனையை விட்டகலும்படி சம்மதிப்பேன். இல்லையேல் ஒரு நாளும் சம்மதியேன்" என்றார்.

இவ்விதமாகச் சம்பாஷித்துக்கொண்டே இருவரும் கனகுடன் தத்தம் இருப்பிடம் சென்றனர். விடுதி யடைந்த கனகாம்பாள், வில்லியசிங்கிற்கும் அமரசிங்கிற்கும் நடந்த சம்பாஷணையையும், படங்கள் நிறைந்துள்ள அவ்வறையில் பாலன தான் மோகனசிங்கின் மைந்தனெனத் தெரியப்பண்ணியதையும் சிந்திக்கலானாள். தன்னால் காதலிக்கப்பட்ட ஆடவன் தன் சொந்த மாமன் மகன்தானென்றறிந்து அகமகிழ்ச்சி கொண்டாள். ஆனல் அமரசிங்கிற்குப் பாலன் மேல் வெறுப்பிருப்பதை யறிந்த அவள் மிகவும் துக்கித்து, "சர்வேசுரா! நல்ல விதமாகவே என்னுடைய மனத்தையும் பாலபக்தருடைய மனத்தையும் ஒற்றுமைப்படுத்தினீர். அதுபோலவே எங்களது மணமும் சீக்கிரம் முடிவடையும் வண்ணம், அதுவரை அவருக்கு யாதொரு தீங்கு நேரிடவொட்டாது திருவருள் புரியவேண்டும்" என்று ஈஸ்வரனைப் பிரார்த்தித்தாள்.

அத்தருணம் ஞானம் கனகின் முன் தோன்றி "அம்மா' ஏது இன்று ஒரு மாதிரியாகக் காணப்படுகிறீர்கள்?"

"ஞானம்! ஒன்றும் விசேஷமாயில்லை. எப்பொழுதும் போலவே தான் இப்பொழுதும் இருக்கின்றேன்."

"இவ்வளவு நேரம் எங்குச் சென்றிருந்தீர்கள்?"

"எனது மாமா வந்திருக்கின்றார்களல்லவா, அதற்காகத் தான் அவரைப் பார்க்கப் போயிருந்தேன்."

"அவரைப்பார்க்கவா போயிருந்தீர்கள்! சொல்லுங்களேன் விருந்திற்குப் போயிருந்தேனென்று."

"உனக்குத் தெரிந்ததை ஏன் சொல்லவேண்டும்?"

"யார் யாரம்மா அவ்விடம் வந்திருந்தனர்?"

"வேறு அந்நியர் ஒருவரும் வரவில்லை. இது அவ்வளவு பெரியவிருந்தல்ல; எல்லாம் நாங்கள் தான்."

"பக்தர் வரவில்லையோ?"

"ஞானம்! நீ எப்பொழுதும் விளையாட்டாகத்தான் பேசுவாய். அவர் வந்திருந்ததை நீயறிந்தும் அதை என்னிடம் வீணில் ஏன் கேட்டுக்கொள்கின்றாய்?"

"என்ன அம்மணி இவ்விதம் சொல்கின்றீர்கள்? அவர் வந்திருந்தாரென்று உங்கள் வாயாலுரைக்க யான் கேட்பது எனக்கு மிகுதியும் ஆனந்தத்தைவிளைவிக்கும். அதனாற்றான்."

"ஆம். அவரும் தான் வந்திருந்தார்."

"அவருடன் வேறு யாரும் வரவில்லையோ?"

"அவரது தங்கையும் வந்திருந்தார்கள்."

"அவரது தங்கையை யான் ஒரு நாளும் கண்டதில்லை. அவர்களென்ன அழகுள்ளவர் தானோ?"

"ஞானம்! என்ன இவ்விதம் கேட்கின்றாய்? அவர்களைப் போல் சுந்தரவதி நம் நாட்டில் இருப்பரென்று நினைக்கின்றாய்?

"அவர்களுடன் கலந்தீர்களா?"

"ஆம். சற்று நேரம் தான் சம்பாஷித்தேன்."

"நல்ல குணம் படைத்தவர்கள் தானா?"

"அழகிற்கேற்ப குணமும் அமைந்திருக்கின்றதே! அது தான் வியக்கத்தக்கது. ஞானம் என்றால் அவர்களை விட்டுப் பிரியவே முடியவில்லை. ஆனால் என்ன சொல்லப்போகின்றேன். ஒரு காரியம் அவ்விடம் நிகழ்ந்தது. அக்காரியத்தினாற்றான் அவர்களுடைய அநுமதி முதலாய்ப்பெற்று வீட்டிற்குத் திரும்பும் பாக்கியம் எனக்குக் கிட்டவில்லை."

"அம்மணி! என்ன அத்தகைய காரியம். உங்களிவருக்கும் அவ்விடம் ஏதாகிலும் வருத்தமேற்பட்டு விட்டதோ?"

"எங்களிருவருக்குமல்ல"

"வேறு அவர்களது அண்ணனுக்கும் தங்களுக்குமோ?"

"ஞானம்! ஏன் இவ்விதம் என்னைக் கேலிசெய்கின்றாய்?"

"பின்னர் யார் யாருக்கும் அம்மணி? கோபித்துக்கொள்ளாதேயுங்கள். குற்றம் என்று தெரியாமற் கேட்டுவிட்டால் மன்னித்துக்கொள்ளுங்கள்."

"ஞானம்! பாலபக்தரும், மனோன்மணியும் யாவரென்று தெரியுமா? 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பது ஒரு நாளும் பொய்யாகாது. என்று நீதானே கூறுவாய்"

ஆம்; அது சரிதான்! "யாவரவர்கள்?"

"ஞானம்! எனது மாமாவாகிய அமரசிங் கிளவரசருக்கு ஓர் அண்ணன் மோகனசிங் இருந்தாரென்று நீ எப்பொழுதாவது கேள்விப்பட்டிருக்கின்றையா?"

"ஆம். கேள்விப்பட்டிருக்கின்றேன்."

"அவருடைய மக்களாம் அவ்விருவரும்."

"என்ன அம்மணி! உண்மைதானு?"

"நானென்ன பொய்யா சொல்கின்றேன்?"

"எவ்விதம் தெரியும் உங்களுக்கு?"

"அவரே இன்று அவர் வாயால், தான் மோகனசிங்கரின் புத்திரனென்றுரைப்பதற்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டுவிட்டது."

"அம்மா! அப்படியானல் தாங்கள் செய்த பாக்கியமே பாக்கியம். கடவுள் எவ்விதம் மாற்றிவிட்டனரென்று பாருங்கள். முதலில் அவரை ஓர் உத்தியோகஸ்தரென்றல்லவா நினைத்தோம். பின்னர் எவ்விதம் முடிந்ததென்று பார்த்தீர்களா? தங்களுடைய சொந்த மாப்பிள்ளையாகி விட்டனரே. ஆமம்மா! அவருடைய சம்மதியை அறிந்தீர்களா? இதுவரை அறிந்திருப்பீர்களென்றே எண்ணுகின்றேன்.

"ஞானம்! உன்னிடம் உரையாது வேறு யாரிடம் உரைக்கப்போகின்றேன். அவருக்கு என் மேல் பிரியந்தானென்பதில் இலவலேசமும் ஐயமில்லை. ஆனல் அவர் வாயால் என்னையே மணக்கின்றேனென்று இன்னும் மொழியவில்லை."

"மொழியாவிட்டால் என்ன? அவருடைய மனது உங்கள் வசந்தானே இருந்துவருகிறது?"

"அதிலென்ன சந்தேகமா?"

"ஆம் அம்மணி! என்னவோ ஓர் காரியம் நிகழ்ந்ததென் றீர்களே, அக்காரியம் யாது?" என வினவின ஞானத்திற்கு, கனகாம்பாள் படங்கள் நிறைந்துள்ள அறையில் நிகழ்ந்த சம்பவங்கள் யாவும் விடாது நவின்றாள்.

அதனைக்கேட்ட ஞானம் பாலன் மோகனசிங்கின் மைந்தனென அறியப்பண்ணியதற்கு மிகுதியும் ஒரு புறம் சந்தோஷித்தாளாயினும், மற்றொரு புறம் அமரசிங்கிற்குப் பாலன் மீதுள்ள வெறுப்பால், பாலனுக்கு யாது நேரிடுமோவெனப் பயந்தாள். பின்னர் இருவரும் பாலனது சரீர சௌக்கியத்திற்குக் கடவுளைத் தோத்தரித்து வழக்கம்போலத் தத்தம் வேலைகளைப் பார்த்து வருவாராயினர்.

வீட்டை விட்டுப்புறப்பட்ட பாலன் மன்னவரை யணுகித்தான் மறுநாளே அவ்விடத்தைவிட்டுப் புறப்படுகிறதாகவும், அதனால் தன் கணக்கைத்தீர்த்து விடும்படியும் வேண்டி நிற்க, அரசர் மிகத்துயரிலாழ்ந்து, "பாலா! இதுவரை ஏன் என்னிடம் உள்ளதுரையாது இருந்து வந்தனை? பரவாயில்லை. போனது போகட்டும். இப்பொழுது நானுன்னைப் போக விடேன். நீ எனது பேரனென அறிந்தும் இனி நானுன்னைப் போகவிடுவேனென்று நினைக்கவேண்டாம். நீ வேறிடம் செல்லவேண்டியதில்லை. இன்று முதல் நீயே அரசனல்லாது யானல்ல. நாளையே இளவரசுப்பட்டஞ் சூட்டிக்களிக்க என் மனம் நாடுகிறது. உனது தங்கை எனது பேத்தி. ஆனதால் மினுன்மணியை இனிமேலாக நான் அவ்விடமிருக்கவிடேன். நீயும் மினுன்மணியும் என்னுடன் தானே இருந்து வரல் வேண்டும்" எனப் பாலனைப் பார்த்துரைத்தார்.

"அரசே! தங்களது வார்த்தைகட்கு இணங்கி யான் நடக்கும் நாளிதுவல்ல. அதற்கு இன்னும் சிறிது நாட்கள்

காளிருக்கின்றனை. எனது தந்தையோ யாதொரு குற்றமு மற்றவர். அவரைத்தீர விசாரியாது கோபத்தால் அவர்களை வீட்டினின்றும் விலக்கிய பெரும்பழி தங்கள் மேல் இருந்து வருகின்றது. பொய் செப்பிய அமரசிங் என்ன சதிக்காரனாக இருக்கின்றனோ அறியேன். யாவும் கூடிய விரைவில் கண்டு கொள்ளலாம். மேலும் என் தந்தைக்குரிய இச்சிங்காதனத் தில் எனது தந்தை இருக்கயாறு இருந்து அரசாள்பவன்? அவ்விதம் யான் செய்தேனாயின் என்னைக் கேடுவந்தடையும். ஆகையால் 'பொறுத்தார் அரசாள்வார்' என்னும் பெரியோர் வார்த்தைக்கிணங்க இன்னும் கொஞ்சவேளை பொறுத்து பாரேன். என் தந்தையைத் தேடி இவ்விடம் கொண்டுவந்து தங்களுக்குப்பின் அக்கொடிய அமரசிங் அமர்ந்திருக்கும் அவ் வரச ஆதனத்திருத்தி மகுடாபிஷேகம் செய்வித்துக் களிப் படையாவிடில் யான் ஆண்பிள்ளையல்ல."

இதனைச் செவிகளிலேற்ற அரசர் மிகுதியும் துக்கித்துப் பாலனிடம் அவனது தந்தை எவ்விதம் குற்றமற்றவர் என வும் அத்துடன் எங்கு வசித்து வருகின்றாரெனவும் வினவ, பாலன், "இப்பொழுது ஒன்றுமுரைக்க முடியாது எனக்கு. வரவேண்டிய பணத்தைத் தருகின்றீர்களா அல்லது தரமுடி யாது என்கின்றீர்களா? நாழிகையாகிறது. மேலும் யான் புறப்படுவதற்கு வேண்டிய ஆயத்தமும் செய்யவேண்டியிருக் கிறது. பணமில்லை யெனினும் விசனமையுடன் இதோ போ தக்கபார்" என்று தன் இல்லிடத்தை நோக்கவும், அரசர் பாலன் கையைத் தன் கைக்கொண்டு, பாலன் அவரது சொற்க ளுக்கோர் எள்ளளவும் சம்மதியானென நன்கறிந்து, "பாலா! நீ வாலிபனாதலால் என் சொல்லைத் தட்டுகின்றாய். அது போகட்டும். உன்னிஷ்டப்படியே செய்துகொள். ஆனால் உனக்கு வேண்டியவளவு திரவியங்களாவது என்னுடன் எடுத்

டுச்செல்லவேண்டு"மென்று கூற, பாலன் ஒரு சல்லி முதலாய் தனக்குச் சேரவேண்டிய நாணயத்திற்கு மேல் எடுத்துக் கொள்ளாது, அரசிடம் விடையும் பெறாது, "இவரது தயவு நமக்கெதற்கு? நாம் உழைத்தோம். உழைத்ததற்கு பணத்தையும் பெற்றுக்கொண்டோம்" என நினைத்து விரைவுடன் வீடடைந்து மனோன்மணியிடம் சங்கதி யாவும் நவின்று பிரயாணத்திற்கு வேண்டியவற்றை ஆயத்தப்படுத்தி வைக்கும்படியும் திட்டஞ்செய்து அன்று இரா தன் தங்கையுடன் மேல் நடக்க வேண்டியவைகளுக்காக என்ன செய்வது என்பது பற்றி ஆலோசனைசெய்துகொண்டிருந்தான்.

மணியோ 12 ஆய்விட்டது. உள்ளபடியே பாலன் அமரசிங் அன்று அவனை யாதாகிலுஞ்செய்வானென்றெண்ணிக்கொஞ்சம் அஞ்சியே இருந்து வந்தான். வெண்ணிறச் சந்திரனோ களங்கமற்ற ஆகாயவீதியில் தன் மனைவியரான நக்ஷத்திரக் கூட்டங்களுக்கிடையில் நர்த்தனம் செய்துகொண்டிருந்ததென்றாலும், அரண்மனைத் தோட்டத்திலுள்ள பெரிய விருக்ஷங்களாலேற்பட்ட நிழலால் பாலன் இருக்கையைச் சுற்றிலும் இருள் மயமாயிருந்தது. கோட்டை வாயிலோ அடைபட்டிருந்தது. யாதொரு அரவமுமில்லாத எத்திக்கிலும் அமைதியாகவேயிருந்தது. மரங்களின் இலைகள் கூட 'பாலனுக்கு என்னதான் தீங்கு நேரிடுகிறதோ, அதனைப் பார்க்கலாம்' என நினைத்து ஒருவர் கண்களுக்கும் தென்படாது ஒளித்துக்கொள்வதுபோல் அசைவற்று இருந்து வந்தன. அச்சமயம் பாலன் பக்கத்திலிருந்த கண்ணாடி ஜன்னலண்டையில், "ஐயா! ஐயா!!" என்ற சப்தம் சப்தித்தது. கொஞ்சநேரங்கழியவும் மெள்ள மெள்ள ஜன்னலைத் தட்டுகிற சப்தமும் ஒலி செய்தது. மனோன்மணி பெண்ணாகையால் சற்று திடுக்கிடப் பாலன் அவளைத் தேற்றித் தன்கையில் ஓர் துப்பாக்-

கியை எடுத்துக்கொண்டு, "தங்காய்! கதவைச் சட்டெனத் திறக்கின்றேன். அமரசிங்காயிருந்தால் சுட்டுவிடுகின்றேன் பார்" என்று பாலன் அந்த ஜன்னல் கதவருகிற்போய்த் தயாராக நின்றுகொண்டிருந்தான். மறுபடியும் ஜன்னலைத் தட்டும் சப்தமும், "ஐயா! ஐயா!! என்ற சத்தமுங் கேட்கப் பாலன் திடீரெனக் கதவைத் திறந்து, "நீயார்? உள்ளதைச் சொல்லாவிடில் உடனே சுட்டுவிடுவேன்" எனத் தன் துப்பாக்கியைக் காண்பிக்க, அவ்விடம் வந்து நின்ற மாது பயந்து நடுநடுங்கிக்கொண்டு உரைப்பாள்:

"ஐயா! நாந்தான் பாப்புஜான் பொண்டாட்டிங்க."

"ஓஹோ! நீயா! ஏன்! என்ன சங்கதியாக இவ்விடம் இந்நடுநிசியில் வந்தனை?"

"சங்கதியைக் கேளுங்கோ சாமி கேளுங்கோ. இன்னக்கி சாங்காலம் எளையராசா வீட்டுக்கு வந்தாரு. வரவும் ஏம்புருசேன் அவருட்டப் பாக்கிப்பணத்தைக் கேட்டான். அவரு தர முடியாதுன்னாரு. அப்ப, அவென் ஒங்ககிட்ட எல்லாத்தையுஞ்சொல்லி எழுதிக்குடுத்து அந்தக்காயித்திலே கையெழுத்தும் போட்டுட்டேன்னு சொன்னுங்கோ. ஒடனே அவரு பித்துப்புடிச்சவரு போலாயி, "அடே! என்ன காரியமுடா செஸ்லே. போயே போச்சடா. நம்ம இன்னி உசுர் வச்சிருக்கக்கூடாதேடா. ஐயையோ! அவம் பொல்லாப் பயலுடா. அவன் இப்புடிச் செஞ்சிருப்பான்னு நெனச்சேசு ஒங்கிட்ட இப்ப நான் ஓடி வந்தேன்" என்று அலறுனாரு.

அலறவும் ஏம்புருசேன், "நீங்க பயப்புடாதிங்கய்யா. அவன் எழுதிக் கிட்டிப்போயி நம்பளை என்ன செய்ய முடியும் என்று இப்படிப் பதறி அழுறீங்கோ?" என்றான்.

அதற்கு அவரு, "அடே பாவிப்பயலே! அவந்தானடா அந்த மோகனசிங்கு மகன்" என்றார்.

"ஒங்களுக்கு எப்புடி சாமி அவன் அவரு மகன்னு தெரியு" முன்னு அவங் கேட்டான்.

"இன்னக்கி மத்தியானந்தாண்டா அவன் மோகனசிங்கு மகன்னு சொன்னான் அவன் வாயிட்டே." என்றாரு. அவரு.

"ஆமா சாமி, இருக்கும். இருக்கும். அவம் பொல்லாத வந்தான். அவென் மொதநா ஏமுன்னாலே நிக்கவும் நானு எங்கே மோகனசிங்கு தான் வந்துட்டாரோன்னு நினச்சே. முந்தாநாத்து நா அரமனைக்குத் திருடப்போனேன், ஏங்காத்தைச்சுட்டுட்டான்" என்று அவங்காத்தையுங் காமிச்சான்க"

கடாசியாக, ஒங்களை வேலை சாய்க்காட்டா அவுங்க ரெண்டு பேத்துக்கு அனத்தம் புடிச்சுக்குருச்சுன்னும், ஒங்களை வேலை சாச்சுட்டா அனுப்பு விட்டுச்சுன்னும் அந்தப்படிக்கி இன்னகி ராத்திரி 2 மணி சுமாருக்கு ஆளுகசகிதமா வந்து ஒங்களை வேலை சாச்சுடுறதுன்னு பேசியிருக்குறாங்க. இதை யெல்லாங்கேட்ட எம் மனசு கேக்குமா சாமி? ஒரு நாளாயினும் வம் பசிப்புணியத் தீத்தீங்களே அதே மறப்பனா?"

"நீ சொல்கின்றதைக் கவனித்தால் அவர்கள் இவ்விடம் வர இன்னும் இரண்டு மணி நேரந்தானிருக்கின்றதோ?"

"ஆமாங்க சாமி. பத்திரமாயிருந்துக்குங்க. அதச்சொல் லிட்டுப்போகத்தான் வந்தேஞ்சாமி. நாம் போயிட்டு வாரேன். நேரமாச்சு" என்று சொல்லிப் புறப்பட்ட பாப்ஜானின் இல்லாளிடம் 5 பவுன் நல்கி அவளை அனுப்பி வைத்துவிட்டு மனோன்மணியைப் போய்க் கனகுடன் இருந்துகொள்ளும்படி

பாலன் செப்ப, மனோன்மணி, "அண்ணா! யான் உங்களுக்குதவிசெய்ய வந்தேனேயல்லாது உங்களது பாதுகாப்பிற்குள்ளிருக்கவா யான் பெற்றோரைப்பிரிந்து உங்களைப் பின்பற்றினேன்? இதுவரை யான் எவ்வளவோ தங்களிடம் ஏதாவது அரண்மனையில் துப்புத்துலக்கப் பிரயாசைப்படுகிறேன் என்றதற்கு 'வேண்டா' மெனத் தடுத்து வந்தீர்கள். யானும் தங்கள் மனத்திற்கு விரோதம் செய்யலாகாதென்றெண்ணியே இதுவரையும் தங்களுக்கிணங்கி நடந்துவந்தேன். ஆனால் இப்பொழுதோ தங்களுக்குப் பெரியதோர் ஆபத்துவர இருக்குந் தருணம் தங்களுக்கு யான் உதவி செய்யாது யானிருந்து என்ன பலன்? என்னைத் தாங்கள் வறிதே கனகிடம் போகச் சொல்லல் முறையோ? ஒரு நாளும் இவ்விடத்தை விட்டகலலேன்" என்று ஓடி அதிசீக்கிரம் ஓர் ஆண் உடை தரித்துக் கையில் பாலன் துப்பாக்கி ஒன்றையும் எடுத்துக்கொண்டு பாலன் முன் தோன்றி, "அண்ணா! இப்பொழுது பாருங்கள். பெண் போலவா இருக்கின்றேன்? உங்களையும் என்னையும் யாவராவது பார்த்தால் அண்ணன் தம்பி என்றுரைப்பார்களன்றி அண்ணன் தங்கை யென்றெண்ணவே மாட்டார்கள். மேலும் தங்களுடைய தீரத்தில் எனக்கு அரைக்கால் வாசியாவது இருக்குமென்றெண்ணுங்கள். தங்களுக்குப் பிரியமானால் அரண்மனை சென்று துயிலுங்கள். தாங்களோ யான் என்று சகலரும் நினைக்கும் வண்ணம் செய்து தங்களைத் தொலைக்க வழி தேடுகின்றவர்களை ஒரு கைபார்க்கின்றேன்." என்று தன் தங்கை வெகு மனோதிடங்கொண்டு நிற்கவே, பாலன் மனோன்மணியின் வீரதீரத்திற்கு மெச்சி, அவள் மனத்திற்கு மாறாக நடக்காமல், அவளது எண்ணப்படியே அவனுடன் இருந்து அவனுக்குதவி செய்யும் வண்ணம் அநுமதித்து அறையிலுள்ள கதவுகள் யாவற்றையும் நன்கு தாளிட்டுக்

கொண்டு, பின்னர்த் தென்கோடியிலுள்ள கண்ணாடி ஜன்னலண்டை தானும், வடகோடிப் பல கணியினருகில் பராக்ரம மீனுன்மணியும் துப்பாக்கி சகிதமாய்க் கீழே உட்கார்ந்து கொண்டனர். வீட்டில் பிரகாசித்துக்கொண்டிருந்த விளக்கின் திரியை இறக்கி விட்டு வெளிச்சம் சிறிது மங்கலாகத் தோன்றும்படியும் செய்துகொண்டனர்.

அரண்மனைக் கடிகாரத்தில் மணி 2 அடித்தது. சலசல வென்ற சப்தம் கேட்கலாயிற்று. மீனுன்மணியும் பாலனும் வெகு ஜாக்ரதையாகவிருந்து வந்தனர். அச்சமயம் திடீரென ஓர் கல்லெறி மீனுன்மணியின் சாளரத்தின் கண் விழவே, கண்ணாடிகள் தவிடுபொடியாயின. பின்னர் ஒரு கூட்டத்தார் மடமடவென அக்கண்ணாடி ஜன்னல் வழியாய் உள்ளே பிரவேசிக்க ஆரம்பிக்க, மீனுன்மணி தலையை நீட்டின ஒவ்வொருவரையும் கழுத்திலும்,மார்பிலும், இருதயத்திலும்,தலையிலும் சுட்டுக் கால் மாடு தலை மாடாக உள்ளேயே இழுத்திழுத்துப் போட்டுக்கொண்டிருக்கும் பொழுது, பாலன் ஜன்னல் வழியாய்த்தோன்றின மற்றோர் கூட்டத்தாரைச் சுட்டு வீழ்த்தவே, யாவரும் ஓட ஆரம்பித்தனர். பாலன் தன் தங்கையை மிக்க ஜாக்கிரதையாய் இருக்கச்சொல்லி ஓடினவர்களைப் பின் பற்றிச் சுட்டு வீழ்த்திக்கொண்டே தானும் ஓடத் திடீரென ஒருவன் பாலனைக் கல்லொன்றால் எறிந்தான். எறிபட்ட பாலன், பிரக்ஞை தப்பிக் கீழ் வீழ்ந்தான்.

அச்சமயம், பாலன் வீட்டிலிருக்கும்படி சொல்லிச் சென்றும், மீனுன்மணி அதனைக் கவனியாது, தன் அண்ணுவிற்கு என்ன நேரிடுமோ வெனப்பயந்து அவனைத் தானும் பின் பற்றவே, தன் அண்ணுவை ஒருவன் பின் தொடர்ந்து ஓடுவதை யுணர்ந்தாள். உடனே அவனையும் சுட்டு வீழ்த்தி

விட்டு, இன்னொருவன் ஓடவே அவனைக் கைப்பிடியாகப் பிடித்து நிறுததிக்கொண்டு "நீயாரடா?" வென்றுகேட்டாள்.

அதற்கவன் "ஐயா! நான் தான் பாப்ஜான் என்னைவிட்டு விடுங்கள்" என்று அவள் காலில் விழ, மனோன்மணி அவனைப் பின் கட்டாய்க் கட்டிக்கொணர்ந்து வீட்டிலிருக்க வைத்து விட்டுத் தன் அண்ணனைத் தேடிச்சென்றாள். பலவிடங்களில் தேடியும் அவ்விருளிற் பாலனைக் காணாது வீடடைந்தாள்.

ஈதிங்ஙனமிருக்க, பிரக்ஞை பெற்று எழுந்த பாலன், "என்னை யடித்தவன் யாவனாயிருக்கலாம்? கொஞ்ச தூரத்திற் குள்ளிருந்து தானே அவன் எறிந்திருப்பான்? நான் விழக் கண்டும் என்னையவன் வறிதே விட்டகன்று சென்ற காரணம் யாது?" என்று யோசித்துக்கொண்டே திரும்பி அறைக்கு வரும் வழியை நாடிவர, ஓர் கல்லிடறின மாத்திரத்தில் பாலன் தன் கையைக் கீழே ஊன்ற, அவனது கையிரண்டும் மனோன் மணியால் சூடுபட்டவன் மீது வீழ்ந்தன. விழவும், பாலன் அவனைக் கையால் இறுகப்பிடித்துக்கொண்டு "அடே! நீதானா என்னைக் கல்லாலெறிந்தாய்? எனக்கேட்டான்.

அதற்கவன் "ஆம், ஐயா! பாவி அமரசிங்கால் இவ்விதம் யாங்கள் கஷ்டப்பட வேண்டியதாயிற்று, நானோ பிள்ளை குட்டிக்காரன். என்னைவிட்டு விடுங்கள்" என்று பாலனின் காலில் வீழ்ந்து கிடக்க, பாலன், "உன் பெயர் என்ன?" என்றான்.

"என் பெயர் சாத்தன்" என்றுரைத்த அவனை 'இவனால் நமக்கு யாதும் பிரயோஜனமில்லை" என்று கண்டு அவன் பேரில் இரக்கங்கொண்டு அவனை ஒன்றும் செய்யாது "பாப்ஜான் எங்கே?" என, அவன் "என்னையா? நீங்கள் தானே

அவனை இப்பொழுது பிடித்துப் பின் கட்டாய்க்கட்டி அவனைக் கூட்டிக்கொண்டுபோகப் பார்த்தேன்" என்றான்.

உடனே பாலன், "சரிதான் நம் தங்கை தான் கொண்டு போயிருக்கக்கூடும். தங்கையைத்தான் நான் என்று ஏமாந்து மொழிகின்றான்." என வறிந்து அவன் பேரில் இரக்கங் கொண்டு அவனை ஓடி விடும்படி துரத்திவிட்டான்.

பின்னர்ப் பாப்ஜானைப் பார்க்கப் புறப்பட்டு வீட்டுக்கு வரும் வழியில் சித்தசன் குன்றின் பக்கலில் வரவேண்டியிருந்தது. வரும் பொழுது சித்தசன் குன்றை ஓர் உருவம் சுற்றிக் கொண்டே யிருக்கக்கண்டு, அதனை உற்று நோக்கினான். அவ்வுருவம் கனகு. உடனே "கனகு தினம் நம்மைச் சந்திக்கும் வழக்கத்தை மனதில் நினைத்துக்கொண்டே யிருக்கிறதனாற்றான் தூக்கத்தினின்றும் எழுந்து வந்திருக்கின்றாள்" எனத் தேறி மெள்ள அவளது கையைப்பிடித்துத் தனதிருப்பிடம் சேர்த்து மனோன்மணியை அழைத்துத் "தங்காய்! கனகு தூக்க வெறியில் சொர்ப்பனங் கண்டு வெளியிலெழுந்து வந்து விட்டதாகத்தெரிகிறது. இன்னும் அவளது சொர்ப்பனம் முடிவடையவில்லை. ஆதலால் நம் படுக்கையொன்றிற்கிடத்தி விசிறிக்கொண்டிரு" என்க, மனோன்மணி மெள்ளக் கனகைத் தன் படுக்கையில் சயனிக்க வைத்து விசிறிக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது இதுதான் சமயம் என்றெண்ணிய பாப்ஜான் தன் கைக்கட்டுடனே ஓட்டம் பிடித்தான். அதே சமயத்தில் பாலன் மனோன்மணியைப் பார்த்துத் "தங்காய்! பாப்ஜானைப்பிடித்து வந்தனையா?" என, மனோன்மணி "உங்களுக்கெப்படித்தெரியும்? அடுத்த ஜன்னலண்டை பாருங்கள்" என்றாள். பாலன் பார்த்தான். பாப்ஜானைக் காணவில்லை. உடனே

ஜன்னல் வழியாக இவ்வழியாகத்தான் ஓடியிருக்க வேண்டு மென்று அவ்வழியாய் அதிவிரைவாய் ஓட, அதனைக் கண் ணுற்ற பாப்ஜான் இன்னும் தீவிரமாய் ஓட ஆரம்பித்தான். ஓடவே, பாலன் பாப்ஜான் காலில் சுட்டுவிட்டான். பாப்ஜான் அக்ஷணத்திலேயே அடியற்ற மரம் போல் வீழப் பாலன் அவ னிடம் ஓடி, "உன்னால் இனிப் பணம் சம்பாதிக்க முடியாது. இந்த 20 பவுனையும் கையில் வைத்துச் செலவழித்துக்கொண் டிரு. உன்னை வேண்டும் பொழுது வந்து பார்த்துக்கொள் கின்றேன். சீக்கிரம் காயத்தைக் குணப்படுத்திக்கொள். உனது மனையாளை நேசத்துடன் நடத்திக்கொள்" என்று சொல்லி அவனை இருந்தது இருந்தபடிக்கே விடுத்து வீட டைந்து நடந்தவற்றைமனோன்மணிக்கு நவின்றனன். பின்னர் மனோன்மணியின் வீரச்செயற்காக அவளைப் புகழ்ந்து, விடிய வும் பயணப்படவேண்டியது அவசியந் தான் என மனோன் மணியுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்தான்.

அச்சமயம் இக்கலக்கத்தின் ஆரவாரம் அரண்மனை எத் திக்கிலும் ஒலிக்கவே, வில்லியசிங்கும் யாதொன்றும் அறியா தான்போற் பாவனை செய்துகொண்ட அமரசிங்கும், இன்னும் மற்ற ஏவலாளர், சிப்பாய்கள் முதலானோரும், பாலன் அறை யில் தான் அவ்வெடிச் சத்தங்கள் முழங்குகின்றன என ஊகித் துப் பாலன் அறையினுள் நுழைந்தார்கள். நுழையவே, அறையெல்லாம் இரத்தக்கவுலும், பிணமும் நிறையப்பெற்றி ருப்பதைக்கண்டு ஆச்சர்யமும் திக்பிரமையுங் கொண்டவர்க ளாகிப், பாலனை யாதென்று வினவினர், பாலன், "தன்னைக் கொல்லவந்த பசுவையுங் கொல்லலாம்' என்ற மநுநீதிப்படி, என்னையொழிக்க வந்த இவ்வீரர்களைச்சுட்டு வீழ்த்தினேன்" என்றான். அங்கிடம் வந்த வீரர்கள் பாலனது தைர்யத்தை யும்மனத்திட்பத்தையும் புகழ்ந்துகொண்டே யிருக்க, அமர

சிங் "ஆஹா! இப்பொடிப்பயல் இன்னும் ஒழியவில்லையே! எவ்விதம் இவ்வளவு ஆட்களையும் கீழ் வீழ்த்தினன்! இவ்வீரர்களாலேயே இவனைத் தொலைக்க முடியாவிடில் வேறு வல்லவர் யாவரிருக்கின்றனர்? ஒருவருமில்லை. இருக்கட்டும் இன்னும் சிறிது வேளையில் இவனை நானே ஒழிக்கின்றேன்; எங்கே தப்பினன்" என்று எண்ணுவானாயினன்.

அச்சமயம் கனகு திடீரெனத் தன் நித்திரை கலைந்தெழுந்து தான் பாலன் பக்கத்தில் இருப்பதாகக்கண்டு திடுக்கிட்டு, "நண்ப! யானெவ்விதம் இவ்விடம் கொண்டு வரப்பட்டேன்?" என்று அவனது கழுத்தைத் தனது மெல்லிய கைகளாற் கோத்து முத்தமிட, பாலன் அவளுக்கு நடந்ததைச் சொல்லிக்கொண்டிருந்தான். அச்சமயம் கனகின் அரவத்தை அமரசிங் கேட்டுக் "கனகு! நீ எவ்விதம் இங்கு வந்தாய்?" என்று வினவ, அவள் தூக்கமயக்கத்தால் சித்தசன் குன்றின் பக்கலில் அதுவும் ஓர் கிணற்றண்டையில் உலாவிக்கொண்டிருக்கக்கண்ட மனோன்மணியின் அண்ணு என்னை இவ்விடம் அழைத்து வந்ததாக மனோன்மணி சொன்னதின்பின் எனக்கு நான் எவ்விதமிங்கு வந்தேனெனத்தெரியும்" என்றாள்.

அதனைக்கேட்ட அமரசிங், "கனகும் பாலனும் ஒருவரோடொருவர் காதலிக்கின்றார்கள் போலும். இல்லையேல் கனகை இவ்விடம் கூட்டி வந்து அவளருகில் பாலன் இவ்வளவு உல்லாசமாய் உட்கார்ந்து வார்த்தையாட மனம் வராது" என்று மனத்தினுள் சந்தேகித்து நிற்க, வில்லியசிங், "பாலா! உன் தைரியமே தைரியம். உனது வீர தத்துவத்தைக்கண்டு அளவற்ற ஆனந்தங்கொண்டேன். நீ இவ்விடமே இருக்க வேண்டும். என்னைவிட்டகலவே கூடாது" என்றுரைத்தார்.

அப்பொழுது அமரசிங்கும் ஓர் ஒப்பனைக்குப் பாலனைப் பார்த்துப் "பாலா! உன்னுடைய வல்லமையை என்னென்பேன்! உனது வீரமே வீரம்! மேலும் எனது மருமகள் கிணற்றில் விழுந்துவிடா வண்ணம் அவளது உயிரைக் காப்பாற்றிய உனக்கு யாங்கள் கைம்மாறு புரிவதென்னே! நீ இவ்விடத்தில் தானே இருந்து அரண்மனைக் காரியாதிகளை நடத்திக்கொண்டிருக்கவேண்டும். வேறிடம் செல்வதாகக் கேள்விப்பட்டேன்; ஏன் செல்லவேண்டும்" என்றுரைத்தான்.

அதனைச் செவியேற்ற பாலன் கடுகடுத்த முகத்துடன், "இவனது சாமர்த்தியத்தைத் தான் என்னென்பது! என்னைக் கொல்ல யமன்களை ஏவிவிட்டவன் இவன். இவனே ஒன்றுமறியாதான்போல் பாசாங்கு செய்வதுடன் என்னென்னமோ வாய்க்கு வந்தவாறெல்லாம் உளறுகின்றான்" என மனதில் நினைத்துக்கொண்டு அமரசிங்கைப் பார்த்து, "நானுமக்கு அவ்விதம் கைம்மாறு புரியும்படியான உதவி புரிந்தேனில்லை. மேலும் உம்முடைய முகஸ்துதியான வார்த்தை போதும். அம்மட்டோடு நிறுத்தும்" என்று பதிலுரைத்தான்.

இவ்வார்த்தைகளைக்கேட்ட அமரசிங் வெட்கித் தலைகுனிந்து கனகை யழைத்துக்கொண்டு, தான் மறுநாளே கனகுடன் பாண்டிநாடு செல்லவேண்டுமென்றும், கனகை அவ்விடம் வைத்தல் தகாதென்றும் எண்ணி, ஒருவாறு முடிவு கட்டிக்கொண்டு அரண்மனைக்குச்சென்றான்.

அப்பொழுது கனகு எதற்காக அவளது மாமன், அரசர், ஏனையோர் ஆகிய இவர்கள் பாலனைறைந்து வந்தார்களென ஒன்றும் அறியாளாகித் திகைத்துக்கொண்டே அமரசிங்குடன் ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டவளாக நடந்து செல்ல, மற்றையோரும் அமரசிங்கைப் பின்பற்றினர், பொழுதும்

புலர்ந்தது. பாலன் அரண்மனை யணுகித்தான் வேற்றூருக் குச்செல்வதாய் ஓரே பிடிவாதமாக அரசர்க்கறிவித்து அவரி டம் விடைபெற்று வரும் வழியில் அமரசிங் மறுபடியும் பால னைச்சந்தித்து, "பாலா! நீ என் மருமகள் பாற் செய்துள்ள உதவியை நான் ஒரு நாளும் மறவேன். நீ என்ன சொன்ன போதிலும் எனக்கு வருத்தம் ஏற்படாது. நான் நாளைப் பாண்டிக்குப் புறப்படுகின்றேன். நீ எவ்விடம் போக உத்தே சமோ அறியேன். ஆனால் எப்பொழுதாகிலும் நீ பாண்டிக்கு வர ஏற்பட்டால் என்னை வந்து பார்க்கமட்டிலும் மறந்துவிட வேண்டாம். அவ்விடம் என்னாலாய உதவியை நானுனக்குச் செய்வேனென்பது திண்ணம். போய் வருவாய் க்ஷேமமாய்" என்று கூறிப் பாலன் பதிலை எதிர்பார்த்தனன்.

இவ்விதம் பகன்ற அமரசிங்கைப் பார்த்து, "பொய் சொன்ன வாய்க்குப் போஜனமும் கிட்டாதென்பதை மறந்து சில பதர்கள் அலைகின்றன. எனக்கு உமது சகாயம் வேண்டும் போது நான் உம்மை அடைகிறேன். இரும் போய் வருகின் றேன்" என்று சொல்லி அமரசிங்கின் முகத்திலுண்டாய தோற்றத்தையுங் கவனித்தவனாகி, ஒருவருக்காவது தான் இன்ன இடத்திற்குப்போக உத்தேசம் என்பதை விளக்கிக் கொள்ளாது அவனை விட்டு விலகினன். பின் மனோன்மணி யுடன் பாண்டிநாட்டிற்கே புறப்பட்டு வருவானாயினன்.

பாலன் பாண்டியடைந்து கூடலம்பதியில் முன்போலவே தான் தன் தங்கை மனோன்மணியுடன் குணபூஷணம் பிள்ளை யவர்கள் கிருஹத்தில் இருந்து வந்தான். அவ்விடம் ஞானப் பிரகாசம் பிள்ளையையும் ஓர் தினம் அவர் வீடுசென்று சந்தித் துச் சோழனது பட்டணத்தில் நடந்த காரியங்கள் யாவையும் ஒன்றுவிடா துரைத்துத்தான். தன் தந்தையிருக்குமிடத்தைத்

தேடிச்செல்லுங் கருத்துடையனாயிருப்பதையுந் தெரிவித்து அவருடைய ஆசீர்வாதத்தையும் பெற்றான்.

பின்னர் இரண்டு, மூன்றுநாட் கழிந்து கூடலம்பதியில் யாது விசேடமென அறிய ஆவல்கொண்டு பாலன் வெளிச் செல்ல, எங்கு பார்த்தாலும் ஒவ்வொருவரும் ஒரு புத்தகத்தை வைத்து வாசித்துக்கொண்டும், அதனைச் சிலர் வாயார வாழ்த்திக்கொண்டு மிருக்கக்கண்டு, தானும் அப்புத்தகமொன்றை அடைய அவாவுடையானாகிப் புத்தகக்கடைகள் தோறும் ‘சகோதர தோஷம்’ என்று பெயர் பூண்டுள்ள அப்புத்தகத்திற்காக அலைந்தான். ஒன்றும் கிடைத்தபாடில்லை. இவன் போய் விசாரிக்கும் கடைகளிலெல்லாம், ‘இப்பொழுது தான் ஒன்றிருந்து அதோ போகின்ற அவர் தான் வாங்கிக்கொண்டு போகின்றார்; இதோ போகின்றாரே இவருக்கு இப்பொழுது தான் கொடுத்தேன். கொஞ்சம் முந்தி வராமற் போய்விட்டீர்களே’ என்று சொல்லப் பாலன் மிகுதியும் விசனித்துக் கடைசியாக எப்படியாவது எவ்வளவு விலை கொடுத்தாகிலும் வாங்கி வாசிக்க எண்ணங்கொண்டு, ஓர் கடையில் ‘சகோதர தோஷம் என்னும் புத்தகமிருக்கின்றதா?’ வென்றான்.

அதற்கு அக்கடைக்காரன், “ஐயா! என்னிடம் ஒரே ஒரு புத்தகந்தான் மீதி. அதற்கு ஞானப்பிரகாசம் பிள்ளை என்ற ஓர் பிரபு ரூபா இரண்டு முன் பணம் கொடுத்து மீதி ரூபா மூன்றையும் இன்னும் சற்று நேரத்திற் கொண்டுவந்து தருவதாய்ச்சொல்லி இப்பொழுது தான் இவ்விடத்தை விட்டுத் தன் ஆபீஸிருக்கும் மேலக்கோபுரவாசலுக்குச் சென்றிருக்கின்றார் வேறு புத்தகம் இல்லை” என்றான்.

அப்பொழுது பாலன் “ஐயா! அப்புத்தகத்தின் விலையோ தங்கள் சொற்படி ரூபா ஐந்துதானாகின்றது. அந்த ஐந்து

ரூபாவுக்குப் பதிலாக இந்தப்பவுனைப் பெற்றுக்கொள்ளுங்கள். எனக்கு அப்புத்தகம் அதிக அவசியமாயிருக்கிறது. ஞானப் பிரகாசம் பிள்ளை வந்து கேட்டால் 'பாலபக்தனுக்குக் கொடுத்துவிட்டோம்' என்று சொல்லுங்கள். அவர் மறு வார்த்தை பேசாமற் 'பரவாயில்லை' எனப்பகர்ந்து தன் இல்லம் திரும்பி விடுவார். அவர் எனக்கு மிகவும் வேண்டியவர்" என்று சொல்லி ஓர் பவுனை அக்கடைக்காரன் கையிலளிக்க, அவன் யாதொன்றும் பேசாது உடனே மீந்திருந்த அப்புத்தகத்தைக் கொடுத்துப் பாலனை அனுப்பி வைத்தான்.

பாலன் அதனைக்கொணர்ந்து வீட்டில் வைத்து அதனைப் பலரும் அதிசயிக்கும்படி எழுதியுள்ளார் பெயரைப்பார்க்க அப்புத்தகம் எழுதியுள்ளார் 'நம்இளவாசாகிய அமரசிங் தான்' எனக்கண்டான். உடனே பாலன் 'சகோதர தோஷம்' என்னும் அப்புத்தகத்தைத்திறந்து வெகு ஆர்வத்துடன் அதில் பொதிந்து கிடக்கும் கருத்தையறிய ஆவல்கொண்டு வாசிக்கலானான். 25 பக்கம் வாசிக்கவும் திடீரென ஓர் பென்சிலை எடுத்து அதிலுள்ள இரண்டு வரியைக் குறித்துக்கொண்டு அவற்றைப்பற்றி ஆலோசிக்கலானான்.

"என்ன! அமரசிங் இவ்வார்த்தைகளை இவ்விடம் எழுதியிருக்கின்றானே! இவ்விதம் எழுதியுள்ள இவன் நம்முடைய தந்தையின் பால் பொய்ச்சாக்ஷி சொல்லியிருக்க மாட்டானென்றல்லவா நினைக்கவேண்டியிருக்கிறது. அப்படி நினைத்தால் நமது பிதா நம்மிடம் 'அமரசிங் பொய்ச்சாக்ஷியத்தாற்றான் அவர் தூரத்துண்டது' என்ற வார்த்தைகள் பொய்யாக இருக்கவேண்டுமே. என்றாலும் எனது தந்தையா என்னிடம் பொய்யுரைப்பர். அவ்விதம் பகரமாட்டாரே, என்றபோதிலும் நாம் நன்றாய் இதனை யறியவேண்டும்" என நினைத்துத்

தன் தங்கைக்கும் அவ்வாக்கியங்களைக் காண்பித்து அவளது அபிப்பிராயத்தையும் கேட்கலானான்.

மனோன்மணி அதனை வாசித்த பின்னர்ச் சொல்லுவாள் "அண்ணா! நம் தந்தை ஒரு நாளும் நம்மிடம் பொய்யுரையார்- அமரசிங் உலக வழக்கத்தை முன்னிட்டே இவ்விதம் எழுதியிருக்கிறான். ஆனதினால் அவனை நிரபராதி என்று கருத்துட் கொள்ளுதல் பொருந்தாது என்று கூறினாள்."

இதனைக்கேட்ட பாலன் ஒருவாறு மனோன்மணியின் அபிப்பிராயம் போலவே தானும் அபிப்பிராயப்பட்டாலும் தீர விசாரித்தறிவதே மெய்யெனத்தேறி மனத்தில் வைத்துக் கொண்டு அவன் செய்யப்போகும் காரியத்தை மனோன் மணிக்குரைத்தால் அவள் அவனைப் போகவிடாளென எண்ணிய பாலன் தான் இன்ன இடத்திற்குப்போக விருப்பதாய்ப் புகலாது, அவளிடம் தான் கொஞ்சநேரம் வெளிச்செல்ல வேண்டியிருக்கின்றதென்றும் அதுவரை கவனமாய் அவள் இருந்துகொள்ளவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு அப்புத் தகத்தையும் தன் கையிலெடுத்துக்கொண்டு நேராகப் பழ மதுரையின் பாதையை நோக்கி நடக்கலுற்றான்.

அமரசிங் இருக்குமிடத்தைத் தானே அறிய ஆவல் கொண்டு அங்குமிங்கும் சுற்றினான். ஒன்றும் முடியவில்லை. இறுதியாக எங்கு ஓர் அரண்மனை தென்படுகின்றதெனப் பார்க்கக்கருதி அவ்விடமிருந்த ஓர் மரத்தின் மீதேறி நாலா திசையிலும் நோக்கினான். நோக்கலும் இவனுக்கு ஆச்சரிய முண்டாகிச்சட்டெனக் கீழே குதித்து ஓடி ஓர் கைபிடிச்சுவரைத்தாண்டிக் குதித்து அதனுள்ளிருந்த ஓர் நந்தவனத்தை யடைந்து ஆங்கு ஓர்செடி மறைவில்சிறிதுமறைந்துநின்றான்.

அதனைக்கண்ட ஓர் யௌவன மாது அவனிடம் துள்ளிக் குதித்து ஓடிவந்து, "நண்ப! இங்கு எவ்விதம் வந்தீர்கள்?" என்று கேட்டுப் பாலனை ஆலிங்கனஞ்செய்ய, பாலன் அவ் வணங்கையே தேடி வந்ததாகக்கூறி, அமரசிங் ஏன் அவளைச் சோழநாட்டினின்றும் பாண்டிக்கு அழைத்து வந்தானென அறிய அவாவுற்று அவளிடம் வினவினன்.

கனகு, "எனதன்பே! அவ்விரவில் தங்களது வீட்டில் தூக்க மயக்கத்திலிருந்த என்னைக் கொண்டுபோய் வைத்து என்னருகில் உட்கார்ந்து வார்த்தையாடியதற்காக தங்கள் மேல் கெட்ட எண்ணங்கொண்டு என்னை அவ்விடம் இருக்க வொட்டாது தன் கூடவே அழைத்துவந்து விட்டார். வரும் பொழுது தங்களைப்பார்க்க எவ்வளவோ ஆவல்கொண்டு ஞானத்தை முதலாய்த் தங்களது விடுதிக்கு அனுப்பினேன். அவள் தங்களது விடுதி காலியாயிருப்பதாகப் பகன்றாள். எனக்குள்ள வருத்தத்தை யாரே அளவிடுவர். இன்று தான் என் ஜன்மம் சாபல்யமடைந்தது. அதெல்லாமிருக்கட்டும் தாங்கள் இங்கு எவ்விதம் வந்தீர்கள்?" என்றாள்.

"கனகு! அதோ நிற்கின்றதே, அந்த மரத்தின் மீதேறி ஏதாகிலும் அரண்மனை தென்படுகின்றதாவெனப் பார்க்க, நினையா நேரத்தில் உன்னைத் தன்னந்தனியாய் இவ்விடம் உலாவிக்கொண்டு நிற்கக்கண்டேன். உடனே ஓடி வந்தேன். ஏன் இங்கு தனித்திருக்கின்றாய்? ஞானமெங்கே?"

"ஞானத்தையும் என்னுடன் வரவொட்டாது தடுத்து விட்டார்கள். யான் இவ்விடம் தனியளாகத்தான் இருந்து வருகின்றேன். அஃதிருக்கட்டும் நண்ப; தாங்கள் என்ன காரணத்தின் பொருட்டு இவ்விடம் வந்தீர்கள்?"

“கனகு! அக்காரணங்களை யெல்லாம் இப்பொழுது பகர எனக்குப் போதுமான அவகாசமில்லை. அவ்விதம் பேசிக் கொண்டிருக்க ஓர் காலம் கிட்டும் என்று நினைக்கிறேன் இப்பொழுது உன் மாமா எங்கிருக்கின்றார்?”

“ஏனிவ்வளவு அவசரமாகக் கேட்கின்றீர்கள்?”

“பார்க்கவேண்டியிருக்கிறது.”

“யாரை?”

“உன் மாமாவை.”

“என் மாமாவையா! ஏன், தங்களுடைய சிறிய தந்தை என்று சொல்லக்கூடாதா?”

“ஒரு நாளும் சொல்லேன். கனகு! எங்கிருக்கின்றார்?”

“அதோ அவ்வறையிலுட்கார்ந்து ஏதோ ஒரு புத்தகம் எழுதிக்கொண்டிருக்கின்றார்.”

“சரி! அவரைப்போய்ப் பார்த்துவிட்டுச் செல்கின்றேன். போய் வரட்டுமா?” என்று பாலன் விடை கேட்டான். கனகாம்பாள் யாதொரு பதிலும் தராது மிகவும் விசனத்துடன் நின்றாள். அதை உற்று நோக்கிய பாலன் கனகினருகிற் சென்று “கனகு! இவ்வளவு நேரம் சந்தோஷமாய் வார்த்தை பாடிக்கொண்டிருந்த நீ, ஏனிப்பொழுது துயரிலாழ்ந்து காணப்படுகின்றாய்? உனக்குற்றதென்ன? சொல். உடனே அத்துயர் உன்னை விட்டு நீங்கும்படியாகச் செய்கின்றேன்” என்றான். அப்பொழுது கனகு புன்சிரிப்புடன் தலை நிமிர்ந்து “எனது துயரத்தை நிச்சயமாகப் போக்குவீர்களா?” ஆலோசித்துப் பதில் கூறுங்கள் என்றாள்.

“உடனே போக்குகின்றேன்.”

“இது சத்தியந்தானா?”

"சத்தியமாகவே நான் போக்குகின்றேன்"

"அப்படியானல் முதலில் இன்று முதல் என்னை என் பெயர் கொண்டும், 'பெண்ணே' என்றும் அழைக்கலாகாது."

"பின்னர் எவ்விதம் அழைக்க? இதுதானு உனது துயர் என்று ஒரு பிரமாதமாக ஓதினை?"

"இது மட்டுமல்ல இன்னுமிருக்கின்றது. முதலில் இதைச் செவ்வை செய்துகொள்ளுங்கள்."

"பின்னர் எவ்விதமழைக்கச் சொல்கின்றாய்?"

"எவ்வித மழைப்பதென்று தங்களுக்கு யான் சொல்லித் தரவேண்டுமோ நன்றாயிருக்கிறது கதை?"

"கனகு! நீ மனதில் என்னவோ நினைத்துக்கொண்டு பேசுகின்றாய் போலத்தோன்றுகின்றது, உன் மனத்திலுள்ளதைச்சொல். அதற்கு விரோதமாய் நான் ஒரு நாளும் நடவேன். என் கண்ணே! ஏன் என்னிடம் மறைபொருளாய் வார்த்தையாடுகின்றாய்?" என்று அவள் தலையைத் தன் மார்மீது வைத்து இடக்கையைப் பாலனது இடுப்பிலும், வலக்கையை அவனது தோளிலும் போட்டு அண்ணாந்தவண்ணமாய்ப்பாலனது முகத்தைக்கவனித்துக்கொண்டிருந்த கனகை அணைத்து முத்தமிடக்கனகு உடனே "அன்பே! தாங்கள் என்னை இன்று முதல் தங்களது மனைவியாகப் பாவித்து நடத்தல்வேண்டும். மேலும் என்னைத் தாங்கள் இப்பொழுதே உடனழைத்தேக வேண்டும். தங்களைப்பிரிந்தினியொருநாளும் யான் தனியளாயிவ்விடமிரேன். நிற்க, என்று தாங்கள் அக்கறுப்புக்குதிரையின் மீதேறித் தங்கள் வீரதீரத்தை எனக்குக் காண்பித்தீர்களோ அன்றே எனதுள்ளம் என்னை யறியாமலே தங்களை வந்தடைந்தது. அதன் பின் அடுத்த தினம் தடாகக்கரையில்

மூர்ச்சித்து விழுந்த எனக்குப் பிரக்ஞையுண்டு பண்ணிய அப்பொழுதே என்னுடல் முழுதும் தங்களுக்குச் சொந்தமாயது. அதுநிற்கத் தூக்க மயக்கத்தில் கிணற்றில் விழ இருந்த என்னை இட்டுக்கொண்டு போய்த் தங்களது கிரஹகத்தில் வைத்துக் காப்பாற்றிய அக்ஷணமே என்னுடலுடன் எனதுயிரும் தங்களுக்குச் சொந்தமாகிவிட்டது. ஆதலாற்றான் அவ்விதம் பகன்றேன். வேறுவிதமாக எண்ணவேண்டாம்" என்று மிகவும் தாழ்மையுடன் விண்ணப்பித்து நின்றனள்.

அதுகேட்ட பாலனும், கனகின் வார்த்தைகட் கீடுபட்டவனாகி "என் செல்வமே! நான் உன்னிடம் எனதுள்ளக் கருத்தை முதலில் எவ்வித மறிவிப்பதென்றெண்ணியே, இதுகாறும் உன்னிடம் யாதொன்று முரையாதிருந்து வந்தேன். என்று உன் வாயாற் அச்சொற்கள் வெளிவருமோவென எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். எனது முறைப்பெண்ணாகிய உன்னை மணவாது நான் வேறொருவரையும் மாலையிடேன். நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டாம். நான் உன்னை வந்து மறுமுறை சந்திக்கும் வரை சந்தோஷமாகவே உனது மாமாவுடன் காலத்தைக்கழித்து வா. நீ சொல்வதுபோல் உன்னை என்னுடன் அழைத்துச்செல்லுதல் முறையன்று. சகலருமறிய மாலையிடுவதுதான் உசிதம் அவ்விதம் செய்தல் உலகத்தில் இழிவானதோர் காரியம். ஆதலால் என்னை மன்னித்துக் கொள். மறுபடியும் சொல்கின்றேன் உன்னைத்தவிர வேறு ஒருவரையும் ஏறிட்டும் பாரேன். இது சத்தியம். அவசர நிமித்தமாக இவ்விடம் வந்தேன். போய் வரட்டுமா? என் ஆருயிரே ஓர் முத்தம் தா" என்றான். கனகும் அதற்கிசைந்து ஓர் முத்தங்கொடுத்தாள். அக்ஷணமே பாலன் அவ்விடத்தை விட்டகல எண்ணி ஓர் அடியெடுத்துவைக்கவும் கனகு,

"நாதா! தாங்கள் இப்பொழுது இவ்விதம் உரைக்கின்றீர்கள். நாட்கள் சென்றால் என்னை மறந்து எங்கே வேறோர் மாதை மணந்து என் பதிவிரதா தர்மத்திற்குப் பங்கத்தையுண்டுபண்ணி விடுகின்றீர்களோவெனப் பயப்படுகின்றேன்; ஆடவருக்கு அது சகசந்தானே" என்றாள்.

இச்சொற்களைச் செவிமடுத்த பாலன் அரசர்க்குரிய காந்தர்வ விவாகத்தை அவ்விடமே முடிக்க நினைத்து இருவரும் தங்கள் தங்கள் மோதிரத்தை மாற்றிக்கொண்டனர். அதன் பின் பாலன் கனகிற்கு வெகுவாய்த் தைரியஞ்சொல்லிக் கோட்டை மதிலைத்தாண்டி அமரசிங் அறைக்குட் சென்றான்.

அவ்விடத்தில் அமரசிங் தான் முதலில் எழுதி முடித்துள்ள 'சகோதர தோஷம்' என்னும் புத்தகத்தினால் அதிக வருவாயடைந்து 'அரச குமாரனெனினும் பணத்தின் ஆசை யாரைத்தான் விட்டது' அதுபோன்ற மற்றொரு புத்தகமெழுதி அதனாலும் ஊதியம் கிடைக்குமென்றெண்ணி வெகு விரைவாய் மேஜையண்டையில் நாற்காலி யொன்றின் மீதிருந்து எழுதிக்கொண்டிருக்கலானான். காவலிருந்த சேவகனைக்கடந்து அமரசிங் நினையா நேரத்தில் திடீரெனப் பாலன் அவன் முன் தோன்றித்தான் கையில் கொண்டுவந்துள்ள புத்தகத்தை அவன் முன் வைத்து, "இதனை ஆக்கியுள்ளோர் நீவிர் தானோ?" என்று கேட்டான்.

அதற்கு அமரசிங், பாலனைக்கண்டு மெய்ம் மறந்து, "ஆம், நான் தான்" எனப்பதிலுரைத்தலும், பாலன் தான் குறித்து வைத்திருந்த இடத்தையும், ஓர் முக்கியமான வாக்கியமாகிய 'ஒருவன் தன் சகோதரனுக்குத் துரோகம் பண்ணுவானேயாகில், துரோகம் பண்ணுமவனுக்குத் தெய்வபலம் குன்றுவதுடன் என்றும் அவன் கடைத்தேறான்; உயிருற்றவனாயி

ருந்தும், அவன் செய்துள்ள குற்றம் வெளியாகும்போது அவன் உயிரற்றவனாகின்றான்' என்னும் வாசகத்தைக் காண்பித்து, "இது உண்மைதானா?" என்று சட்டெனக் கேட்டான். அமரசிங்கோ யாதும் பதில் மொழியக்கூடாதவனாய் வெட்கமேலிட மேஜையின் மீது முகங்குப்புற விழுந்துகொள்ள, அக்ஷணமே பாலன், "நிச்சயமாகி விட்டது. என் தந்தை ஒரு நாளும் என்னிடம் பொய்யுரைக்கவில்லை. வீண் சந்தேகத்திற்கு ஆளாகினேன். அமரசிங்கே எங்களுக்கிக்கதி வருவித்தவன். பார்க்கின்றேன்" என உன்னி யாதும் அமரசிங்குடன் மேல்வார்த்தை யாடாமல் குபீரென வெளிக்கிளம்பித் தன் மனை யடைந்து யாவையும் சதா கவலைக்குள்ளாயிருந்து வருகிற மனோன்மணிக்கு அறிவிப்பானாயினான்.

நாட்கள் சில கழிந்தன. பாலன் ஓர் தினம் வெளிச்சென்று அன்று யாது மதுரையம்பதியில் விசேடமென அறியவாக்கொண்டான். அப்பொழுது ஆண் பெண் சகலரும் நல்லுடைதரித்து வெகு உல்லாசமாய்க் கிழக்கு நோக்கிப் போய்க்கொண்டிருந்தார்கள். அதனைக்கண்ட பாலன், ஏனையோர் போல் நல்லுடை யணிந்து அவ்வழியே நடந்துகொண்டிருந்த ஓர் விருத்தரை யணுகி, "ஐயா! இன்று என்ன விசேடம்? ஆண் பெண் யாவரும் வெகு உல்லாசமாகக் கிழக்கு நோக்கிச் செல்கின்றனரே" என, அப்பெரியவர், "பிள்ளாய்! உனக்குச் சங்கதி தெரியவில்லையோ? சகலருக்கும் தெரிந்திருக்கும் சங்கதி உனக்கு மட்டிலும் தெரியாதிருப்பது வியப்பிலும் பெரிய வியப்பாயிருக்கின்றதே" என்றார்.

அதற்குப் பாலன், "ஐயா! பெரியீர்! நான் இந்த ஒரு வாரமாக அசௌக்கியமாயிருந்ததால் வெளிச்சென்று சங்கதி அறியக்கூடவில்லை; அதனால் தெரியவில்லை" எனமொழிந்தான்.

"ஓஹோ! சௌக்கியமில்லையோ! சென்ற வாரத்தில் பாண்டிநாட்டின் மேல் படையெடுத்துவந்த சேரநாட்டாரை அமரசிங் தந்திரமாக ஜெயித்து விட்டனர். அதற்காக அவர் தமது படைவீரருக்குப் பரிசளிக்கப் போகின்றனர். அங்கு சதுர்க்கச்சேரியும் நடைபெறும். அதற்குத்தான் நாங்கள் போகின்றோம். இப்போது மணி என்ன? என்றார்பெரியவர். அதற்குப்பாலன் 3 மணி இருக்கும்! ஆனால் சதுர்க்கச்சேரி எப்போது நடக்கும்? அதில் அமரசிங் இளவரசர் என்னசெய்யப்போகிறார் என்று கேட்டான்.

அதற்கப்பெரியவர், "பிள்ளாய்! சதுர் 5 மணிக்குத் துவங்குமென்று சொல்லிக்கொள்கிறார்கள். இளவரசர் அதில் என்ன செய்யவேண்டியிருக்கிறது? ஒன்று மில்லை. வேண்டுமானால் பரிசளிக்கு முன்னர் எழுந்து ஏதாகிலும் உபந்யாசிப்பர்" என்றும் தான் சென்று வருவதாகவும், இடம் முந்திவிடுமென்றும் அறைந்து பாலனிடம் விடைபெற்றுப் பழமதுரை நோக்கி நடக்கலுற்றார்.

இச்சம்பாஷணை முடிந்த க்ஷணமே பாலன் வீடடைந்து "மனோன்மணி! நான் அப்பாவின் விலாசத்தை அடையும் பொருட்டு மூன்று நாளைக்கு முன்னரே தேசபக்தனில்வேண்டிய சமாச்சாரத்தைப் பிரசுரம் செய்வித்தேன். அதற்குப் பதில் இன்று நமக்குவரும் பத்திரிகையிலிருக்கும் மணியும் நாலாயிற்று. பத்திரிகை வரும் நேரந்தான். பத்திரிகை வந்தவுடன் அதனை வாங்கிக் கவனத்துடன் வைத்துக்கொள். உடனே ஒருவேளை அப்பா இருக்குமிடத்திற்குப் புறப்படவேண்டியிருக்குமாகையால், பயணப்படத் தயாராகவுமிரு. நான் வெளிச்சென்று சிறிதுநேரத்திற்குள் திரும்புகின்றேன்" என்று மனோன்மணியிடம் பகன்றுவிட்டுத்தான் 'மதுரையில் நல்லதோர் தையற்காரன் கிடைப்பானோ?' வென்று எண்ணி

நேராகத் தையற்காரர் தெருவிற்குச்சென்று தையல் வேலையில் கெட்டிக்காரர் யாராயிருக்கலாமென்று விசாரிக்கலானான்.

விசாரித்ததில் ஒருவரும் அகப்படாது இறுதியாக அலைந்து திரிந்ததில், 'மெய்வருந்தக் கூலி தரும்' என்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க, பெருமாள் கோவில் தெரு இரண்டாம் நிம்பர் சந்தில் பரசுராம் பிள்ளை தையல் வேலையில் கெட்டித்தனமுள்ளவரெனக் கேள்வியுற்று அவரை யணுகி, "ஐயா தாங்கள் தானா பரசுராம் பிள்ளை!" என, அக்கிழவரும், "ஆம்" ஐயா! என்ன விஷயம்! என்றார்.

உடனே பாலன் தனக்கு ஓர் ராணுவ உடை 2 மணி நேரத்திற்குள் தைத்துத் தரமுடியுமாவென வினவலும், அவர் இரண்டு மணி நேரத்தில் அவ்வித உடை தைத்து முடிப்பது தெய்வ பிரயத்தனமென்றும், அவ்விதம் முடித்துவிடும் வண்ணம் பிரயாசைப்படினும், தனக்குத் தள்ளாதகாலமாய் விட்டதென்றும், வேண்டுமானால் தன்னிடம் ஓர் உடை தயாரிலிருக்கிறதென்றும், அதனை வாங்குவார் இவ்வூரிலில்லை என்றும் அது அவ்வளவு நேர்த்தியான உடை என்றும் சொன்னார்.

அவ்வுரைகளைக் கேட்ட பாலன் ஆச்சரியத்துடன், "என்ன ஐயா! பெரியவரே! அவ்வளவு அருமையான உடையா அது? 'அதனை வாங்குவார் இவ்வூரிலில்லை' என்கின்றீரே, வேறு எவ்வூரார்க்காகத்தான் அதனைத் தைத்தீர்?" என்றான்.

அதற்கு வயது மேலிட்ட பரசுராம் பிள்ளை, "பிள்ளாய்! இவ்வுடை தைத்து சுமார் 20 வருஷமிருக்கலாம். அதனை ஆக்கும்படி செய்தவர் அருமை குணம் வாய்ந்தவரும், ஏதோ ஓர் காரணத்தால் துயத்துண்டவருமான சோழநாட்டிளவரசர் மோகனசிங்கென்பவரே, அரசர்க்கென்று உண்டாக்கிய அவ்வுடையை வாங்குவார் இவ்விடத்திலில்லை என்று அக்காரணத்தினாற்றான் சொல்லவேண்டியிருக்கிறது" என்றார்.

அதனைக் கேள்வியுற்ற பாலன், தன் தந்தை துரத்துண்ட காரணத்தை அப்பெரியவர் சரியாக அறியமாட்டாரென்று தெளிந்து, அதனைக்கேட்டு நேரத்தைக்கழிக்க மனமற்றவனாகி, அப்பெரியவரை நோக்கி, "ஐயா! அவ்வுடையார் பொருட்டு ஆக்கியிருப்பினும் சரி, அதற்கு விலை கொடுத்து நான் வாங்கிக்கொள்கிறேன். அதனை எடும்" என்றான்.

பெரியவர் அதனைக்கொணரவும் பாலன் அணிந்தான். அணிதலும் பாலனுக்கென்றே தைக்கப்பட்டதோவென்றெண்ணும்படி அவ்வளவு நேர்த்தியாகவும், சரியாகவுமிருக்கக் கண்டு சந்தோஷித்த பாலன், பரசுராம் பிள்ளை கேட்ட 100 பவுனையுங் கொடுத்து அவ்வுடை மேல் ஓர் காவி வஸ்திரமுமணிந்து ஓர் சந்யாசியைப்போல் தானும் பழமதுரை நோக்கி நடந்து அமரசிங் அரண்மனை யடைந்தான்.

ஆங்கு ஏராளமான ஜனங்கள் அவரவராசனத்திலமர்ந்திருந்தனர். (ஒவ்வொருவரும் வாசனைத்திரவியங்களும், சந்தனாதி, புஷ்பத்தினுசுகளும், தடவியும், பூசியும், வைத்துமிருந்ததனாலுண்டான நறுமணம் ஓங்கி எழுந்து மாளிகை எங்கும் மணமே பரவும்படி செய்து கொண்டிருந்தது) சதுர்க்கச்சேரியும் முடிவடைந்தது. முடியவும் உல்லாசமாய் வீற்றிருந்த அமரசிங், வெற்றியடைந்த தன் ராணுவ வீரர்கட்குப் பரிசளிக்கு முன் அவர்களது வீரதீரச்செயல்களைப்புகழ எண்ணங்கொண்டு தன் சிங்காதனத்திற்குச் சமானமான பீடத்தினின்றும் எழவே, பாலன், தான் தரித்துள்ள காவி வஸ்திரத்தை எடுத்தெறிந்துவிட்டுப் பக்கத்தில் நித்திரையிலாழ்ந்திருந்த ஒரு வீரனுடைய உடைவாளை எடுத்துத் தன் உடையில் ஓர் ராணுவ வீரன் அணிவதுபோல் அணிந்துகொண்டு, சட்டென அமரசிங்கின் முன் ஓர் புலிபோற் பாய்ந்து "அடே! துஷ்டா!" என்று ஆர்ப்பரித்து நிற்கவே, "மோகனசிங்கோ?"

வெனப் பாலனை மாறுபாடாகக்கருதி யாது செய்வதென ஒன்றுந்தோன்றுனுகி மூர்ச்சிக்கலானுன் அமரசிங்.

இவ்வைபவத்தைக் கண்ணுற்ற வீரர் பலர் பாலனைப் பிடித்துத் தண்டம் செய்யக்கருதிப் பாலனைப்பிடிக்கப் பிரயத்தனப்படவே, பாலன் குபீரென அவர்கள் மத்தியில் மணிபீடத்தினின்றும் குதித்து தன் கைத்துப்பாக்கியால் இருவரைப் பழுது பார்க்கவே, மற்றையர் யாவரும் பின்னடைந்தனர். அது தான் சமயமென்றெண்ணிய பாலன் தன் வீட்டிற்கு வரும் வழியிலேயே தன் மாறுவேடத்தை மாற்றிச் சுயவேடத்துடன் மனோன்மணியிடம் தோன்றிப் பத்திரிகை வந்ததாவென்ற விபரத்தைக்கேட்க, மனோன்மணியும் நாலரைமணிக்குக் கிடைத்த தேசபக்தன் பத்திரிகையைப் பாலனது கைக்கொடுத்து அதிலுள்ள தனது தந்தையின் இலங்கை விலாசத்தையுங் குறிப்பிட்டுக் காண்பித்தாள்.

---

## 10-வது அத்தியாயம்
## கள்வர் குகை.

---

தன் தந்தையின் இருப்பிடத்தை யறிந்தது தான் தாமதம், அந்த க்ஷணமே பாலன் வண்டியொன்றிற்கு வாடகை பேசித் தூத்துக்குடித் துறைமுகத்திற்குத் தன் தங்கை மனோன்மணியுடன் புறப்பட்டுப்போய் தூத்துக்குடி யடைந்து அவ்விடமிருந்து தன்னுடன் தங்கையை மலைப்பிரதேசத்தில் வாசஞ் செய்யும் தன் தந்தையிடம் அழைத்துச் செல்வது அழகல்ல எனத்தேறி, தன் தங்கையை குணபூஷணம் பிள்ளை சிநேகரும், அவ்வூரிலேயே நற்பெயர் வகித்துள்ளவருமான தங்கையா ரொட்ரிக்ஸ் அவர்கள் வீட்டில் விடுத்துத் தான் கப்பலேறிக் கொழும்பில் இறங்கி அன்ட்ராஸ்புரஞ் சென்றுன்.

மறுதினம் கொழும்பை யடைந்து அவ்விடமிருந்து பிறகு அன்ட்ராஸ்புரம் இருக்கும் மார்க்கத்தை யறிந்து கொண்டு நேராக அந்நகரத்திற்கே செல்வானாயினான்.

அன்ட்ராஸ்புரத்தின் எல்லையைக்கிட்டவும், ஓர் ஈரேழு வயதும் நிறம்பப்பெறாத சிறுவன் பாலன் முன் தோன்றி, "ஐயா! நீர் தான் பால்சிங்கென்பவரோ?" என்றான்.

"பையா! என் பெயர் பால்சிங்கல்ல, பால பக்தன்."

"தெரியுமையா உம் விருத்தாந்தமெல்லாம் அதைப்பற்றிப்பேச இப்பொழுது நேரமில்லை. ஆனால் ஒன்று. நீர் என்னுடன் மனஞ்சலியாது பின் வரவேண்டும். அப்படி யானால் உம் தந்தையைக் காண்பிக்கின்றேன்" என்று சொல்லிப் பையன் நடக்க ஆரம்பிக்கவே, தன் தந்தையைக் காணும் ஆவலால் ஏவப்பட்டு அவ்விதம் புகன்ற பையனிடம் வேறொன்றும் கேட்காது, அப்பையனே கெதி என்று எண்ணி அவன் பின்னரே தொடர்ந்து பாலன் நடக்கலுற்றான்.

காலை சுமார் 8 மணிக்குப் புறப்பட்ட பாலன் நடக்கின்றான் பையனுடன் மணி 12 வரையும். தந்தையைக் கண்டபாடில்லை. மணி 2 ஆகவும் பாலன் சலித்துப் பையனைப் பார்த்து, "தம்பி! என்னைச் சிறு பையனாகிய நீ எவ்வளவோ தூரமிழுத்து வந்து விட்டாய். களைமேலிட்டதால் என்னால் நடக்கவும் முடியவில்லை. நீயோ என்னிலும் அதிவிரைவாய் நடக்கின்றாய். இனி என்னால் நடக்கவே முடியாது. நீ இன்னும் என் தந்தையை யடைய எவ்வளவு தூரமிருக்குமென்று திட்டமாய்ச் சொன்னாலொழிய உன் பின் வரேன்" என்றான்.

அதற்கு அப்பால்யன், யாதொன்றும் அநாவசியமான கேள்விக்கெல்லாம் என்னை ஆளாக்காது என் பின் வந்தால்

வாரும். இல்லையேல் வந்த வழி திரும்பிவிடும்" எனலும், பாலன் கோபங்கொண்டு தன் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு "அடே! சிறு பயலாகிய உனக்கு இவ்வளவு மமதை யா? இடத்தின் தூரத்தை உரையாவிடில் இதோ இப்பொழு தே உன்னைச் சுட்டுவிடுவேன்" என்று தன் துப்பாக்கியைக் காண்பித்து அப்பையனைப் பயமுறுத்த, அச்சிறுவன், "நிறுத் துமையா நிறுத்தும். உம்மைப்போல் என்னைச் சிறுவன் தானே" என அலக்ஷியங்கொண்டு என்னை அவமதித்தவர்க ளநேகர் என்னிடம் தோப்புக்கண்டம் போட்டுச் சென்றிருக் கின்றனர். உம்மையும் அவ்விதம் செய்துவிடுவேன். ஆனால் உம்முடைய அப்பாவின் முகத்திற்காக உம்மை மன்னிக்கின் றேன். ஒன்று முரையாது என் பின்னேயே வந்துகொண் டிரும்" என்று அஞ்சாநெஞ்சத்துடன் பாலனுக்கு விடை யளித்துக்கொண்டே எட்டி நடந்தான்.

சிறுவன் இவ்வித முரைக்கவும் பாலன் ஆச்சரியமேலிட் டவனாய் "சிறுவன் சித்துடையனாயிருக்கவேண்டும். அவ்வித மில்லையேல் இவ்வளவு தைரியமாயுரை செய்யான்" என்றெண் ணிப் பையன் சொன்னது போலவே வாய் திறக்காமல், அவன் பின் சென்றுகொண்டிருக்கச் சிறுவன் ஓர் அடர்ந்த வனத்தை அடைந்தான். அவ்வனத்தின் கடையில் ஓர் மலையிருக்கக் கண்டு பாலன் சிறுவன் பின்னரேயே அம்மலையில் மிக்கக் கஷ் டத்துடன் ஏறினான். ஏறலும் உச்சி மலையிலிருந்து ஓர் பெரும் பள்ளத்தாக்கிருந்தது. அதிலிறங்கி இருவரும் மற் றோர் சிகரத்தைச் சிறிது நேரத்திலடைந்தனர். அச்சிறுவன் சிகரத்தில் நின்றுகொண்டு பாலனைப் பார்த்து "ஐயா! நீர் இவ்விடமே இரும். நான் உடனே திரும்புகின்றேன். அதோ யாரென்று பாரும்" என்று ஓர் திசையைக்காண்பிக்கப் பாலன்

அத்திக்கை நோக்கவே, சிறுவன் இன்ன இடஞ்சென்றானென்
றறியக்கூடாதவிதமாய்ச்சென்று மறைந்தான்.

சிறுவன் சொல்லிய திசையை நோக்கியபின் சிறுவனைப் பார்க்க, சிறுவன் கண்ணிமைப்பொழுதில் மறைந்ததாகக் கண்டான் கதாநாயகன். ஆச்சர்யமேலிட ஓர் பொருளைத் திருடக்கொடுத்தவன் போன்று பரக்குப்பரக்கென்று விழிக்கலானான். எங்குச் சென்றிருப்பனென்று சிந்தித்தான். அவ் வழியே போயிருப்பனோவென்று நினைத்து ஓர் வழியைத் தொடர்வான். அவ்வழி பத்தடிக்கு மேல் வழி விடாததைக் கண்டு, மற்றோர் திக்கை நோக்கி நடப்பான். அதுவும் அடைபட்டிருப்பதைக்கண்டு தன்னை மறந்தவனாவான். இவ்விதம் நாலாபக்கங்களிலும் யாதாமொரு வழி தென்படுமாவென அவனாற் கூடியவரை முயன்றான். தன் முயற்சி யாவும் வீணானதாகக்கண்டான். தான் முன் செய்துள்ள பராக்ரமச்செயல்களை நினைப்பான். தான் தற்போது ஓர் சிறுவனின் சூழ்ச்சியை ஜயிக்க வழி யறியாது தயங்குவான். ஓரிடமும் செல்ல முடியாத இடத்தில் தான் அடைபட்டிருப்பதாக உன்னினான். பின் 'அச்சிறுவன் யாராயிருப்பன்? அவன் ஓர் தைர்ய புருஷனாகவே இருத்தல் வேண்டும். அஞ்சாமனம் படைத்தோனென்பதில் ஐயமில்லை. என்கினும், என்னை ஏமாற்றி என்னை இவ்விடத்தினின்றும் அகலமுடியாது செய்து போன அப் பயல் திரும்பட்டும். இத்துப்பாக்கிக்கு இரையாக்குகின்றேன். அவனால் ஏது வந்தாலும் சரி; வந்தது வரட்டும்.'

'ஆ! என்ன மதியீனம்! என்ன மதியீனம்! இவ்விடத்தை விட்டுத் தப்பிக்க வழியறியா நான் அவனை நமனுலகிற்கு அனுப்புவேனேயானால் நான் எவ்விதம் மறுபடியும் அன்ட்ராஸ்புர மடையக்கூடும்? அல்லது என் தந்தையைத்தான்

காணக்கூடும்? அதனால் இந்த யோசனை பயனற்ற யோசனை தான். ஆனதால் இவனைக்கெஞ்சி, மன்றாடினால் மட்டிலும் நாம் நம் தந்தையை யடைய வழியுண்டல்லால், இவனை எதிர்த்தால் நாம் இதுவரை செய்துள்ள பிரயத்தனமெல்லாம் வீண் தான்' என்று இவ்விதமாகப் பாலன் ஆழ்ந்த சிந்தனையிலிருந்து கொண்டிருக்கவே, யாரோ ஒருவன் பாலனது கண்களைத் திடீரென மூடினான். பாலன், "அது யார்?" என்று வெகுண்டு சரேலெனத் திரும்பவே, அவன் தான் நம் சிறுவன். பாலன் அச்சமயம் கோபாவேசத்தனாயினும், அதனை அடங்காமகிழ்ச்சியாக மாற்றிச் சிறுவனை நோக்கி, "பாலயா! நீ பலே கைகாரன். நான் உன்னை யொத்த சிறுவர்களை இதுவரை எங்கும் கண்டிலேன். வெகு சமர்த்தன் நீ. என்னைத் தனியே விட்டு எங்குச் சென்றிருந்தாய்?" என வினவினான்.

"பதில் தரும் நேரம் இதுவல்ல. உன் தந்தையைச் சீக்கிரம் காணக் கருதுவையாகில் என்னிடம் யாதொரு வீண் வார்த்தையுமாடாது என் பின் வரல்வேண்டும். உன் சம்மதமென்ன?" எனக்கேட்டான் பையன்.

"பையா! என் தந்தையைக் காணுதற்பொருட்டு நீ இன்னும் என்னை எவ்விதம் நடக்கச்சொன்னாலும் அவ்விதம் நடந்துகொள்ளச் சித்தமாயிருக்கிறேன்."

"அப்படியாகில் என்னுடன வாரும்" என்று பாலனை யழைத்துச் சிறுவன் ஓர் இருண்ட குகைக்குட் சென்றான். ஆங்கு ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியவில்லை. எங்குப் பார்த்தாலும் இருள்மயமாயிருந்தது. சிறிது நேரத்தில் பையன் ஏதோ ஒரு சூக்ஷமத்தால் குகை முழுதும் பிரகாசிக்கச்செய்தான். அச்சமயம் குகை சொர்க்க லோகமோவென்னுறையுறும் வண்ணம் அவ்வளவு எழிலுடையதாயிருந்தது.

அக்குகையினுள் ஓர் பெரிய பட்டசாலேயும் அதனைச்சுற்றிலும் பற்பல அறைகளும் இருந்தனவென்றாலும், பாலன் தன்னெதிரில் நுழைந்தவுடன் பொன்னாற் சமைக்கப்பெற்ற ஓர் காட்டெருமை நிற்கக்கண்டான். கண்டவுடன் மிகவும் அதிசயித்துப் பையனை "இதுவென்ன?" வெனக்கேட்டான்.

அதற்கு அச்சிறுவன் "ஒன்றும் நீர் அதனைப்பற்றிக் கேட்க வேண்டியதில்லை. அந்த எருமையில் ஏறும். உம்மைக் கொண்டுபோய் உமது பிதாவினிடத்திற் சேர்க்கு" மென்றான்.

"பிதாவினிடத்திற் சேர்க்கும்" என்று சொன்னதுதான் தாமதம், உடனே பாலன் எருமையுருவின் முதுகின்மேல் தன்னிருகரங்களையும் வைத்தான். வைத்தவுடன் அவ்வுரு தன்னிரு முன்னங்கால்களையும் மண்டி போட்டுக்கொண்டது. பின்னர் பையனைப்பார்க்க எங்குச்சென்றானென அறியக்கூடவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் அவ்வுரு பின்னங்கால்களையும் கீழ்ப்பரப்பிப்படுக்க ஆரம்பித்தது. அப்பொழுது ஓர் அரவம் 'அதன் பேரில் உட்காரும். உம்மை உமது தந்தையிடம் கொண்டுபோய் விடும்' என ஒலித்தது. அவ்வரவம் பையனுடைய அரவம் என்று தெளிந்து அதன் பிரகாரமே பாலன் அவ்வுருவின் மீது உட்கார்ந்தான். 'டப்' என்ற ஓர் பெரிய சத்தங் கேட்டது. கண்ணிமைப்பொழுதில் குகையை விட்டு ஓர் வெட்ட வெளியில், மதராசிற் சிற்சில கவர்னர்களின் சிலைகள் குதிரையிலேறிய வண்ணமாகப் பல இடங்களிலும் எவ்விதம் அமைக்கப்பட்டிருக்கின்றனவோ, அதுபோலத் தானும் பொன்மயமான எருமையுருவின் பேரில் இருக்கக் கண்டான். வெளிவந்த சிறிது நேரத்தில் அப்பொய் எருமை முன்போலவே படுத்துக்கொள்ளப் பாலன் யாதொரு அபாயமுமின்றிக்கீழிறங்கிச்சுற்றிலும்நோக்கினான். தூரத்தே ஓராட

வன் தன் முழங்காலிரண்டையும் தன் கைகளாற் கட்டிக்கொண்டு அக்கைகளின் மீது தன் முகவாய்க்கட்டையை வைத்துக்கொண்டு சோர்ந்த முகத்துடன் ஓர் மாநிழலில் இருக்கக்கண்டான். காண்டலும் அவ்வாளிடமணுகக் கருதிச் சிறிது தூரத்திலிருந்த அவனது இருக்கைக்கு வெகு கஷ்டத்துடன் அநேக பள்ளத்தாக்குகளையும் ஓடைகளையும் கடந்து அவனை யணுகித் தன் தந்தையைப்பற்றி விசாரிக்க எண்ணங்கொண்டு நெருங்கலும், தன் தந்தையாகிய மோகனசிங்கே அவ்விடம் அவ்வித கோலத்துடனிருக்கக்கண்டு மிகுதியும் வருத்தமுற்றுத் தன் தந்தையைக் காணலும் அளவில்லா ஆசைப்பெருக்கத்தால் அவர் மீது வீழ்ந்து அவர் இருந்த கோலத்தினையும் இருக்கவேண்டிய ஸ்திதியையும் நினைந்து கரைந்து கரைந்து உருகுவானாயினன்.

அந்நிலையினின்ற பாலனைத்தேற்றி "பாலா! சுகந்தானா? மனோன்மணியின்க்ஷேமம் எப்படி? அவளை எங்கு விடுத்து வந்தாய்?' என மோகனசிங் வினவலுற்றார்.

"அப்பா! திருவுளத்தினருளால் யானும் மனோன்மணியும் க்ஷேமந்தான். மனோன்மணிக்கு என்னுடன் வர எவ்வளவோ அளவில்லா ஆசையாயிருந்தபோதிலும், யான் பட்ட இக்கஷ்டங்களுக்காளாகி அவளால் வரமுடியாதென்று முன்னரே நினைத்தபடியால், அன்னவளை யான் தூத்துக்குடியிலேயே நம் தங்கையா ரொட்ரிக்ஸவர்கள் வீட்டில் அடைக்கலமாக விடுத்து இவ்விடம் வரலானேன்."

"தாங்கள் இவ்விடத்திற்கு எப்படியப்பா வரலானீர்கள்? இங்கென்ன தாங்கள் தனியாகவா இருந்து வருகின்றீர்கள்? அப்படியானால் என்னை இவ்விடம் வெகு சமர்த்தாய்க்கொணர்ந்து சேர்ப்பித்துச்சென்ற அந்தப் அப்பையன் யார்?"

"பாலா! நீ இறங்கிய அன்ட்ராஸ்புரத்தில் என் நண்பர் ஒருவர் இருக்கிறார். அவர் சர்மிஷ்டர் எனப்படுவர். இவரிடம் வந்து சிலநாட் கழிக்கலாமென்றெண்ணங்கொண்டு தூத்துக்குடியிலிருந்து கொளும்பு வந்து அங்கிருந்து அன்ட்ராஸ்புரம் வரவும் இரவு மணி 12 ஆனது. வழிவந்த களையால் ஓரிடத்தில் மயக்கமுற, விடியவும் நான் இப்பொழுதிருக்கும் இந்த இடத்தில் இதே தோற்றத்தோடிருந்தேன். அத்தோற்றத்தை யுனக்குக் காண்பித்தற்பொருட்டே இப்பொழுது இவ்விடம் இம்மாதிரியாக உட்கார்ந்திருக்கின்றேன். ஆனால் இப்பொழுதுள்ள என் நிலை நான் சோழநாட்டதிபனாயிருப்பினும் எனக்குக் கிட்டாதென்னும் வண்ணம் அவ்வளவு மேன்மையாயும் கௌரவமாயும் விளங்குகிறது."

"எவ்விதத்தாலப்பா தங்களது நிலை மேலாகக் காணப்படுகிறது? தாங்கள் எப்படி இவ்விடம் கொண்டுவரப்பட்டீர்கள்?"

"பாலா! கேள். ஆனால் ஒன்று மட்டிலும் நான் உன்னிடம் கேட்டுக்கொள்கின்றேன். நீ யாரிடமும் எக்காலத்தும் இவ்விடம் சில ஜனங்கள் குடியிருந்து வருகின்றார்களென்று தெரிவிக்கவே கூடாது. தெரிவிப்பையாயின் பிடித்ததிங்குள்ளார்களுக்கனர்த்தம் என்றாலும், இதோ எழுந்து பார். இம்மலையைச்சுற்றி மூன்று புறங்களிலும் ஓர் பெரிய ஆறொன்று ஓடிக்கொண்டிருக்கின்றது. மிக்க ஆழமுள்ளது. மேலும் சமுத்திரத்தை யொத்த கரையைக்கொண்டுள்ளது. இத்தகைய ஆற்றை ஒருவன் கடந்தாலும் செங்குத்தான இம்மலையில் எவ்விதத்திலும் ஏறவே முடியாது. அந்தப்பக்கத்தில் ஓர் மலையே இந்த மலையைச்சுற்றி ஓர் கோட்டைச்சுவர் போல் இதனை மறைத்துக்கொள்கிறது. அம்மலையில் ஏறி யாவராவது வந்து இவர்களை ஹிம்சிக்க முயன்றாலும், நீயும் அந்தப் பைய

னும் வந்தீர்களே அந்த இடம் வரையிற்றான் வரமுடியும். அதற்கு மேல் வருவது நினைக்கக்கூடாத காரியம். ஏனென்றால் வந்த வழி தவிர மற்றோர் வழியும் தென்படாது.”

“ஆமப்பா! யான் அவ்விடம் வரவும் அச்சிறுவனைப் பார்த்தேன். எவ்விதமோ மறைந்து விட்டான். அதன் பின் நான் தனியே அங்குமிங்கும் சுற்றினேனேயாகிலும் நாங்கள் வந்த வழி தவிர வேறோர் வழியும் தென்படவில்லை தான்.”

“இன்னும் சரிவரக்கேள் பாலா. பின்னர் உன் சந்தேகங்களை நிவர்த்திக்கின்றேன். மிகக் கஷ்டத்துடன் கூர்ந்து அவ்விடத்திலுள்ள ஓர் செடிகளடர்ந்த இடத்தை நோக்கின் ஓர் இருண்ட இடமிருப்பதாகத் தோன்றும். அதற்குள் நுழைய ஒருவரும் இணங்கார். அவ்விதம் தைரியத்துடன் நுழையினும் அவசியம் வெளிச்சம் வேண்டும். வெளிச்சமிருந்தாலும் ஓர் பக்கமும் அவ்விடம் வழியில்லாததால் யாதொரு வழியும் அகப்படாது. ஆனால் ஒரே ஒரு வழியுண்டு. அது அக்குகைக்கு மத்தியில் ஓர் குழிபோன்றிருக்கும். அக்குழியில் எந்நேரத்திலும் நீரிருந்துகொண்டே யிருக்கும். யாராவது பராக்காகக் குகையைச் சுற்றிக்கொண்டு வந்தால் அக் கிணற்றில் விழுவார்கள் என்பது திண்ணம். விழவும் ஆயுள் முடிந்து அடிவாரத்தை யடைவார்கள்.”

“பின்னர் யாராற்றான் அதனைக்கடக்க முடியும்? யான் வரும்பொழுது அவ்விதம் கிணற்றைக் கண்டேனில்லையே?”

“இங்குள்ளவர்கள் தான் அதனைக்கடக்க முடியும். மேலும் இவர்கள் அநுதினம் அவ்வழியாகவே தான் அன்ட்ராஸ்புரம் முதலிய ஊர்களுக்குச்சென்று வருவது வழக்கம். இவர்களை இன்னும் ஒருவராலும் கண்டுபிடிக்க முடியவில்லை.

“இவர்கள் அதனை எப்படிக் கடக்கிறார்கள்?”

"நீ எவ்விதம் எருமையுருவின் பேரில் உட்கார்ந்து அப்பள்ளத்தைக்கடந்து வந்தனையோ அம்மாதிரியாகத்தான். அதோ பார், நீ யேறிவந்த எருமை வாகனம். இவ்வாகனம் உயர நிற்கிற அளவிற்கு மேலே துவாரமாகவே யிருக்கும். சுருங்கி நெகிழும்படியான ஓர்வித சக்தி இவ்வுருவுக்கமைக்கப்பட்டிருக்கிறது. ஓர் வித சூக்ஷமத்தைத் தட்டிவிட்டால் இப்பொழுது மேல் நிற்கும் இவ்வெருமை சமேலெனக் கீழிறங்கிக் குகைக்குள்ளிருக்கும் அக்கிணற்றை மூடி நிற்கும். உடனே உயரத்திலுள்ள துவாரத்திலிருந்து குகைக்குள் சூரியவெளிச்சம் வரும். அப்பொழுது குகையோ ஜெகஜோதியாகவிருக்கும். அத்தருணம் ஓர் பட்டசாலையும் அதன் மத்தியில் இவ்வுருவும் பட்டசாலையைச் சுற்றிலும் சில அறைகளுமிருப்பதாகத் தோன்றும். அவ்வறைகளிற்றான் இவர்களில் சிலர் எந்த நேரமும் காவலிருந்து வருவர். வேறு அந்நியர் அந்த சூக்ஷத்தை யறிந்து அவ்வழியாக வருவார்களே யானால் அவ்வறைகளின்றும் அவர்கள் வெளிவந்து மாற்றுரை மாய்த்துவிடுவர். நிற்க, அவர்கள் மற்றொரு சூக்ஷத்தைத்தட்ட உடனே தற்போதுள்ள நிலைக்கு வந்துவிடும் இவ்வெருமை. இவ்வழியாக ஒருவன் இவ்விடம் வரினும், இன்னும் இவ்விட வாசிகளைக்காணுவது அருமையே. அவர்கள் வசிக்குமிடம் எத்தகையதென்பதை உனக்கு நாளை காண்பிக்கின்றேன்."

"அப்படியானால் இங்கிருப்பவர்கள் யாரப்பா?"

"பாலா! இவர்களை யாரென்று திட்டமாய்ச்சொல்வது? திருடர்களென்று தான் சொல்லவேண்டும். இவர்களுக்குப் பகலும் இரவும் ஒன்று தான். இவர்கள் எந்த நேரமும் பெரிய ஜமீன்தாரர் மாதிரியாகவே ஊரெல்லாம் சாமர்த்தியமாய் அலைந்து சரியான கொள்ளையடித்து வருவார்கள். இவர்

களைப்போல் கொள்ளையடிக்கும் ஆசாமிகள் எவ்வுலகிலும் இருக்கமாட்டார்களென்பதில் சற்றும் ஐயமில்லை."

"அப்படியானால் இக்கொடிய பகற்கொள்ளைக்காரர்களாற்றான் தங்களுக்கு மேன்மையோ?"

"அதிலும் சந்தேகமா? நீங்கள் இன்னும் நான் அந்த இரவில் மயங்கிக் கிடந்தபொழுது என்னை இவ்விடம் கொண்டு வந்தார்களென்று சொன்னேனல்லவா? இவர்கள் என்னைக் கொணர்ந்து, நான் மயக்கத்தினின்று எழவும், என்னை நான் யாரென்றும், என் விருத்தாந்தம் என்னவென்றும், வினவ, நான் நம் விருத்தாந்தங்கள் யாவையும் யாரிடமும் அவர்களில் ஒருவராவது அறிவிக்கக்கூடாதென்று அவர்கள் குலதெய்வமாகிய காளீஸ்வரியின் பேரில் பிரமாணம் வாங்கிக்கொண்டு பகர்ந்தேன். பகரவும் அவர்களுக்கு அமரசிங்கின் மீதுண்டான கோபத்தை என்னென்பது? அத்துடன் என் பேரில் மிகவும் இரக்கங்கொண்டு என்னை அவர்களுடனேயே இருந்து வரும் வண்ணமும், அவர்களுக்கு வேண்டிய உதவிகள் செய்துகொண்டு அவர்களுக்கோர் அதிபனாக இருக்கும்படிக்கும் என்னை மிகவும் விரும்பி வேண்டினார்கள்.

"இவர்களுக்குத் தாங்கள் என்ன உதவி செய்யக்கூடும்?"

"என்ன உதவிதான் இவர்களுக்கு வேண்டியிருக்கிறது? வேறொரு உதவியுமல்ல. அந்த உதவி இதுதான். அதாவது இவர்கள் செய்யும் யோசனைகள் சரியா அல்லது பிழையா என்று மட்டிலும் நான் சொல்லவேண்டியது நிற்க, நான் அவர்களுடன் ஒன்றாக இருந்துவர முடியாதென்றதற்கு, அவர்கள் அதோ இருக்கும் அந்த விடுதியொன்றை அமைத்து எனக்கு இருக்கையாகத்தந்தனர். அத்துடன் நான் உன்னை அழைத்துவரும்படி யனுப்பி வைத்த பையனையும் எனக்குத்

துணையாக நல்கினர். அப்பையன் பார்வைக்குச் சிறியனாயிருந்தாலும் மகாயூகி. கார்யங்கள் செய்வதில் வெகு சமர்த்தன். மேலும் கொஞ்சம் மந்திர சக்தியுமுடையவன். ஆனதாற்றான் அவனை உன்னாற் சுடக்கூடவில்லை. நிற்க, அப்பையன் யாரென்றால், அவனும் பாண்டிநாட்டாந்தான். அவன் ஏதோ வழி தப்பித்திரியும் சமயம் இங்குள்ள கள்வர் தலைவர் அவனை எவ்விதமோ வசப்படுத்தி இவ்விடம் கொண்டுவந்து விட்டார். வந்தது முதல் அப்பையன் இவர்களுக்கு உண்மையாக நடந்து வருவதால் அப்பையனின் இஷ்டப்படி விட்டு விட்டனர்.''

"அப்பா! அவன் தங்களிடம் அவனை யான் சுடமுயற்சித்ததைக்கூடவா நவின்றான்?"

"ஆம் அதனைச் சொன்னதுமன்றி நீ யவனை வெகுவாய்ப் பயமுறுத்தியதையுஞ் சொல்லிச் சொல்லிச் சிரித்துக்கொண்டிருந்து விட்டுத்தான் உன்னை இவ்விடம் கொண்டுவரும்படி ஏகினதற்கிணங்கப்பொன்னெருமை யுருவின்பேரில் ஏறிவரும் வழியைக்காண்பித்து மறைந்தான்."

"ஆஹா! பலே கைகாரன்!" என்று அப்பையனைப்பற்றிப் பாலன் வெகுவாய்ப் புகழ்ந்துகொண்டிருக்கும் சமயத்தில் அப்பையன் புன் முறுவலுடன் ஓடிவந்து ஆகாரம் தயாரித்தாயிற்றென்றும், போஜனம் பண்ணும் நேரம் கிட்டிவிட்டதென்றும் மோகனசிங்கிற் குரைக்க, மோகனன் பாலனுடன் அன்னபானாதி அருந்தச்சென்று அவ்விடமும் பலசங்கதிகளைப்பற்றி அவர்கள் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள்.

மறுநாட் காலை பாலன் தான் ஞானப்பிரகாசம் பிள்ளையை வேலையின் பொருட்டுச் சந்திக்க நேர்ந்ததையும், தன்னையவர் பயமுறுத்தியதையும், அன்னவரிடம் மோகன

சிங் "என் மைந்தனுக்கு உம்மாலாய உதவிசெய்ய வேண்டியது" என்று சொல்லிப்போந்ததாக அவர் சொன்னதையும், சோழ அரணில் தான் மனோன்மணியுடன் மூன்று வருடம் துப்புத்துலக்குதற்பொருட்டு வசித்து வந்ததையும், அவ்விடம் மோகனசிங்கின் படத்தால் நேர்ந்ததையும், அமரசிங் தன்னைத் தொலைக்க வழி தேடினதையும், தான் பாண்டிக்கு வந்து அமரசிங்கால் எழுதப்பட்ட புத்தகத்திலுள்ள வாக்கியங்கள் சிலவற்றாலும், மேடையில் தான் தன் தந்தைபோல் தோன்றியவுடன் அமரசிங்கிற்குண்டான மூர்ச்சையால், அமரசிங்கே குற்றவாளியெனத் தான் தேறிய விபரத்தையும் பின்னர் தான் பத்திரிகை மூலமாய் இருப்பிடமுணர்ந்து அவ்விடம் தோன்றிய கதைகளையும் தன் தந்தையாகிய மோகனசிங்குடன் பேசிக்கொண்டிருந்தான்.

இவர்களிருவரும் இவ்வித சம்பாஷணையில் ஈடுபட்டிருக்கும் சமயம் ஒருவன் ஓடோடியும் வந்து "ஐயா! தங்களைத் தலைவர் அதிவிரைவாய் அழைத்துவரச் சொன்னார்" என்று மோகனசிங்கை வணங்கி நின்றான்.

அதற்கு மோகனன் "நான் என் மைந்தனையும் உடனழைத்து வரலாமா" வென்று தெரிந்துகொண்டு வரும்படி அவ்வாளையே அனுப்பிவைக்க, அவன் மறுபடியும் தலைவரிடம் வந்து மோகனசிங் உரைத்ததை அறிவிக்க, "அதனாற் பாதகமில்லை; அவர் மகனையுமழைத்து வரட்டும்" என்று தலைவர் அனுமதிகொடுக்கத் தூதுவன் மோகனசிங்கை இன்னொருதரம் கிட்டி மோகனசிங் அனுப்பிய கேள்விக்கு அனுகூலமாகவே பதில் கொடுத்து நின்றான்.

உடனே மோகனசிங், தன் மைந்தனுடன் கள்ளர்கள் அந்தரங்க சபைகூடுமிடத்திற்குப் புறப்பட்டான். இவன்

இல்லத்திற்கும் கள்ளர்கள் இருக்கைக்கும் சுமார் 100 கஜ தூரந்தானிருக்கும். இவ்வளவிற்குள் செடிகளால் அடர்ந்துள்ள ஓர் பாதை வழியாய்ச்சென்று ஒரு சிறு குன்றையும் கடந்து ஒரு பள்ளத்தாக்கிலு மிறங்கவேண்டும். அப்பள்ளத்தாக்கே அவர்கள் சபைகூடு மிடமாயிருந்தது.

மோகனசிங் தன் மைந்தனுடன் செடிகளடர்ந்துள்ள பாதையைக் கடந்து குன்றின் மீதேறி மறுபடியும் கீழிறங்கி நின்றான். பள்ளத்தாக்கில் இறங்கவேண்டும். ஆனால் அது கிடு கிடு பாதாளம். எவ்விதத்தில் அவ்விடத்தை யடைவது என்று பாலன் விழித்துக்கொண்டிருந்த சமயம் திடீரெனப் பெரியதோர் இருப்பு ஏணியொன்று வந்து இவர்கள் முன்னிலையில் நின்றது. அது கண்ட பாலன் ஆச்சரியமடைந்து, தந்தையை அவ்வேணி எவ்விதம் அவ்விடம் வந்ததென்று கேட்கவே, மோகனன், ஏணி வந்து நிற்பதற்கு உண்டாக்கி வைத்திருக்கும் ஓர்வித சூக்ஷம் கீழேயிருப்பதாகவும், அந்தச் சூக்ஷமத்தைக் காத்தற் பொருட்டுக் கீழே எப்பொழுதும் பத்துப்பேர் காவலாயிருப்பார்களென்றும், அன்னவர்களில் யாவராவது அவ்வேணி வழியாய் அந்நியர் வரக்கண்டாற் பாதி ஏணிக்கு அவர்கள் வரவும், மற்றோர்வித சூக்ஷமத்தைத் தட்டுவார்களென்றும், அப்பொழுது ஏணி இரண்டாக மடங்குவதாயும், மடங்கும் பொழுது அரிசி யந்திரத்தில் நெல்லைக் கொட்ட எவ்விதம் அந்த யந்திரம் அந்நெல்லை உமி வேறு, தவிடு வேறு, அரிசி வேறாகக் கூறுபடுத்துகின்றதோ அவ்விதமே அதற்கிடையிலகப்படும் மனிதர்கள் உடலிலுள்ள சதை, எலும்பு, முதலாய உறுப்புக்களை யாக்கிவிடும் என்றும் விபரமாக எடுத்துச் சொன்னான்.

இவ்விதம் வார்த்தையாடிக்கொண்டே இருவரும் ஏணியில் இறங்கும்பொழுது பாலன் தற்செயலாய் அவனது இடது

பக்கம் நோக்கினான், நோக்கலும் இவனுக்குத் திகிலதிகமாகி உடனே தன் தந்தையை யழைத்து "அப்பா! இதோ! நமக்குப் பக்கத்தில் நிற்கும் அடர்ந்த அவ்விருக்ஷத்தைப் பாருங்கள். அதில் ஏன் இவ்வளவு இரத்தக்கறை காணப்படுகின்றது? ஐயோ! அப்பா! உச்சியில் பாருங்கள். ஏன் அம்மனிதன் கழுத்தில் கயிற்றாற் சுருக்கிட்டு அவனைக்கீழிழுக்கச் சிலர் தயாரிலிருக்கின்றனர்? இது கொலைபாதகமல்லவா? அப்பா! தாங்கள் இவர்களைத் தடுக்கமுடியாதா? இன்னவன் என்ன குற்றம் செய்திருப்பான்? இவர்களுக்கு ஒரு குற்றமும் செய்திருக்கமாட்டானே? இவனைக்கொல்வது இவர்களுக்குப் பாவமல்லவா? அப்பா! கொஞ்சமும் தாமதியாது அவர்களுக்கு இதனை நிறுத்தற்பொருட்டு உத்தரவிடுங்கள்" என்று பலவாறாகக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

"பாலா! இவர்களுடைய விரோதிகளநேகர் இவர்களை எந்த விதத்திலாவது பிடித்து விடும் வண்ணம் கச்சை கட்டிக்கொண்டு எங்குப்பார்த்தாலும் அலைகிறார்கள்."

"அப்பா! அக்கதையெல்லாம் பின்னர் பேசிக்கொள்ளலாம். தற்சமயமோ கொஞ்சந் தாழ்த்தின் இன்னவனுடைய உயிரோ மறலிகைப்படுமென்பதைத் தாங்களறிந்தும் அதற்கு வேண்டிய பிரயத்தனம் செய்யாது வீணிற்காலத்தைக் கடத்தல் காருண்யத் தகுதிக்கேற்ற தகுதியோ?"

"பாலா! பொறு. அவசரப்படாதே. நான் கீழிறங்கி இவர்களுக்கு உத்திரவிடும்வரை இவனைக் கொலைபுரியார்களென்பது திண்ணம். ஆனதால் நான் சொல்லுகின்றவற்றைச் சற்றுத் தயவுசெய்து கேள். எங்குப்பார்த்தாலும் இவர்களுடைய விரோதிகள் இவர்கள்மேல் கண் வைத்து அலைகின்றார்களென்றேனல்லவா? அவ்விரோதிகளை இவர்கள் எந்த

இடத்திற் கண்டாலும் அவர்களை வெகு சம்பிரதாயமாய் இவண்கொணர்ந்து இம்மரத்திற்றான் கட்டிவைத்துக் கண்டதுண்டஞ் செய்வார்கள். அதனாலுண்டாய இரத்தக்கறைகளே இவைகள். இவர்கள் மிகவும் நீதிகோணாது நடப்பவர்கள் என்றே சொல்லலாம். ஒரு நாளும் நியாய விரோதம் பண்ணார்கள். இவனையும் ஒருகாரணம் பற்றியே இவ்விடம் கொண்டு வந்திருப்பார்களல்லாது, அகாரணமாய் ஒருநாளும் கொண்டுவரார்கள். ஆனதால் நாமிறங்கி என்னவென ஆராயும்வரை பதறாதே. இவர்களிடம் கலந்து கொள்ளாது ஓர் காரியம் செய்வோமாகில் இவர்கள் நம்மேல் வைத்திருக்கும் அன்பு மாறி, இவர்களுடைய கோபத்திற்கு இலக்காவோம். மேலும் இவர்களுக்கிடையிலுள்ள நாமும் தப்பமுடியாது"

"அப்பா! இவர்களால் என்ன நேரினும் சரி, ஒன்றுக்கும் அசையவேமாட்டேன். முதலில் இன்னவனின் கழுத்துக் கயிற்றைச் சேதித்து இவனைக் கீழிறக்கிவிட்டுப் பின்னர் ஆகவேண்டிய காரியத்தைப் பார்ப்பேனல்லாது மற்றபடி இத்தருணம் தங்கள் சொல்லிற்கு உடன்படேன்" எனலும் மோகனசிங் எவ்வளவோ தடுத்துப் பார்த்தும், பாலன் மனமுரண்டுடன் தன் தந்தையின் கையினின்றுந் தப்பிச் சட்டென மரத்தின்மீது தாவி, அம்மனிதன் கழுத்திலிருந்த சுருக்கை வாள்கொண்டு சேதித்து அவனை ஏணிக்குத்தாவச் சொல்லித்தானும் தாவித் தன் தந்தையுடனும் பிடிபட்டுள்ள மாற்றானுடனும் கள்ளர்கள் திரளாய் இருந்துகொண்டிருந்த பெருங் குகையான அந்த ஜாகைக்கு வந்து சேர்ந்தார்கள்.

பாலனாகிய இச்சிறுவன் செய்ததை யுணர்ந்த கள்வர் தலைவன் உக்கிராவேசங்கொண்டு "அடே சிறுபயலே! நீ யாரடா? எங்கள் கட்டுக்குள்ளடங்கியிருக்கும் நீ எங்களுடைய

அனுமதியின்றி இங்ஙனம் கொஞ்சமும் அச்சமின்றி எங்களால் மரமேற்றப்பட்ட இந்தக் கொடியனை விடுவிக்க முயலலாம்?” என்று சீறிப் பாலனை வெட்டத் தன் வாளை யோங்கவே, மோகனசிங் தலைவன் முன்னின்று அவ்வாளைத்தடுத்துத் “தலைவ! கோபங் கொள்ளாதீர். இச்சிறுவன் என் மைந்தனென்பதை அறியீரோ? ஏதோ சிறுவன் இரக்கத்தால் இத்தகைய காரியத்தைச் செய்யத்துணிந்தானல்லாது வேறு இறுமாப்புடனாவது, மதியாமலாவது செய்திருப்பானானால், இம்மனிதனை இவ்விடம் மறுபடியும் உங்கள் கையில் கொண்டு வந்து ஒப்பிக்க எண்ணுவனா? நிற்க, எனது மைந்தன் செய்தது குற்றமெனக் கண்டாலும் ‘சிறியோர் செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப்பது கடனே’ என்றதற்கொப்ப, அவனை நீர் மன்னிக்கக்கூடாதோ?” என்று சாந்தமும் உருக்கமும் தோன்ற வினவினான்.

அப்பொழுது தலைவனின் கோபாக்கினி சற்றுத் தணிந்தது. தணியவே, பாலன் தலைவரை நோக்கித், “தலைவரே! என் பேரில் சற்றுக் கிருபைவைத்து இம்மனிதன் எக்குற்றத்திற்குப் பாத்திரவான் என்று மட்டிலும் நான் அறியும் பொருட்டு உத்திரவாக வேண்டும்” என்று கேட்டான்.

அதற்குத் தலைவன், “உன்னிடம் நான் பதில் சொல்ல வேண்டியதனாவசியம். உன் வேலையை நீபார் எங்கள் வேலையை நாங்கள் பார்க்கின்றோம்” என்று பாலனைப் பார்த்துப் பகர்ந்து பின் “கொலைஞர்காள்! இக்கொடியோனை முன்போல மரத்திலிடுங்கள் கழுத்தில் சுருக்கிட்டு” எனக் கொலைஞர்களை நோக்கிக் கொடூரமாகக் கட்டளையிட்டான்.

தலைவன் இவ்வித மறையவும் பாலனுக்கு வெறிகிளம்பி, ஆங்குத் திரளாய்க் குவிந்திருந்த கள்ளர்களை நோக்கி “என

குக் காரணத்தைத் தெரிவியாது என் வேண்டுகோளை மறுத்த உங்களால் என்னுயிரையும் இனி மதியேன். உங்களில் ஒருவ ராவது இப்பொழுது நிற்கும் நிலையினின்றும் பெயர்ந்து ஒரு அடி முதலாய் முன் எடுத்து வைத்து என்னை அடைக்கல மடைந்த இவரைப் பிடித்து ஹிம்சிக்க முயன்றால், இதோ என் கையிலிருக்கும் துப்பாக்கிக்கு ஒருவர் தவறாது இரை யாவீர்கள்" என்று தன் கைத்துப்பாக்கியை அவர்களுக்கு எதிராக எடுத்து மிகவும் கம்பீரமாக நீட்டினான்.

துப்பாக்கியைக்கண்ட அவர்கள் மிகுதியும் பயமுற்று "ஏதடா! இவன் நமக்கும் பெரிய ஆசாமி" என்று நினைத்து ஒருவரை யொருவர் பார்த்துப் பார்த்து வெட்டுப்படப் போகும் ஆட்டினங்கள் விழிக்கு மாதிரியாக விழிப்பதும், மோகனசிங்கைப் பார்ப்பதும், பெருமூச்சு விடுவதும் பாலனை நோக்குவதுமாக விருந்தனர்.

அச்சமயம் மோகனசிங் "பாலா! என்ன கார்யம் செய் கின்றாய்? 'தந்தை சொன்மிக்க மந்திரமில்லை' என்பதனையும் முற்றும் மறந்து என் சொற்களையும் கடந்து இவ்வித ஆபத்தி லாழ்த்திவிட்டனையே" என்று பாலனிடம் மெதுவாகப் பகர்ந்து மிகுதியும் கிலேசப்பட, பாலன் "அப்பா! இவர்கள் இவரைக் கொலைசெய்யாது இவர் உயிருக்கீடாக என்ன வேண்டினும் யான் அதனை கொடுக்கச் செய்கின்றேன். இவர் கள் இவரைக் கொண்டுவந்ததற்கு அதுவே ஓர் வெகுமதி யாகும். மீறினால் என்னால் இவர்கள் நாசம்; என்ன சொல்லு கின்றார்கள் என்று கேளுங்கள்" என்றான்.

அதற்கவர்கள், "நாங்கள் ஒரு நாளும் சம்மதியோம். உன்னுடைய தந்தையையும் உன்னையும் இக்கதிக்காளாக்கினவ னல்லவா இவன். உன்னுடைய தந்தை இவன் செய்துள்ள

வற்றை யெல்லாம் எங்களிடம் கூறியிருக்கின்றனர். இவர் இங்கிருப்பதையும் எவ்விதமோ உணர்ந்து இங்கு வந்து இவரைத் தொலைக்கவழிதேடிய இந்தப் பாதகனையாவிடச் சொல்கின்றாய்? தெய்வத்திற்கும் நீ சொல்வது ஏற்காது. ஆகையால் இப்பாதகனைக் கண்ட துண்டஞ்செய்யாது விடோம்! விடோம்!” என்று ஒரே குரலாய் ஆர்ப்பரித்து அமரசிங்கை மறுபடியும் பிடிக்க முயன்று முன் வந்தார்கள்.

உடனே பாலன் அவர்களைப் பார்த்து “உங்களனைவருக்கும் விநாசகாலம் கிட்டிற்றென்றால் மட்டிலும் இவரைப் பிடிக்க முன் வாருங்கள். என் சிறிய தந்தையாகிய இவருடைய உயிரை எங்கள் முன்னில் உங்களைப் போக்கவிடேன். எங்கள் கண் மறைவில் நீங்கள்யாவரும்யாதுசெய்துகொண்டபோதிலும் எங்களுக்குக் கவலையில்லை. ஆனால் இப்பொழுதோ அவருக்கோர் தீங்குமிழைக்காது உங்களுக்கு வேண்டிய திரவியத்தைக் கேட்டுப் பெற்றுக்கொண்டு இவரை அனுப்பிவையுங்கள். இல்லையேல்........” என்று தன் கைத்துப்பாக்கியை அவர்களுக்குக் காண்பித்துத் தான் முன் கூறிய வசனங்களுக்கு அவர்கள் சம்மதித்தால் அவர்கள் கைக்கொண்டுள்ள வாளை உயரத்தூக்கச் சொன்னான். அப்பொழுது பாலன் முன் நிற்க முடியாதெனக்கண்டு வெருண்ட அனைவோரும் ஒன்று சொன்னாற்போல் தங்கள் தங்கள்வாளை அவர்கள் அவ்வாறு அமரசிங்கை விட்டுவிடுவதற்குச் சம்மதந்தாமென்னும் அடையாளமாக உயர்த்தினர்.

பாலன் அவ்வாறு உயர்த்திய அவர்களை நோக்கி, அவர்களுக்கு எவ்வளவு திரவியம் வேண்டுமென, அவர்கள் தங்கட்குப் பன்னீராயிரம் ரூபா தேவையெனப் பகர்ந்தனர்.

“பன்னீராயிரம்” என்ற சொல்லிற்குக் காதுகொடுத்து நின்ற பணப்பேயனாகிய அமரசிங் “என்னைக் கொன்றுவது

உங்களுடைய அபிலாசையை ஈடேற்றுங்கள். என்னால் உங்களுக்கு இவ்வளவு பெரிய தொகை ஒருநாளுந் தரமுடியாது" என்று 'ஓ' வென அலறி அழலானான்.

இவ்வாறு அலறிய அமரசிங்கை நோக்கி, "ஏன் வீணில் பாசாங்கு பண்ணவேண்டும்? அரசரது உரிமையைக் கைக்கொண்ட உம்மிடமா இப்பன்னீராயிரமில்லாமற் போகும்! எங்கே உமது சட்டையைச் சோதிக்கலா" மென்று பாலன் அமரசிங்கின் சட்டையைச் சோதிக்கவே அதிலிருந்து சில காகிதத்துண்டுகள் மட்டிலும் அகப்பட்டன.

அக்காகிதத்துண்டில் ஒன்றை யெடுத்து அதில் பாலன் 'சோழநாட்டுப் பொக்கிஷசாலையை மேற்பார்க்கும் அதிகாரிக்கு இதைக்கொண்டு வருபவரிடம் என் பேருக்கு ரூபா பன்னீராயிரம் என் சொந்தச் செலவினிமித்தம் கணக்கெழுதிக்கொண்டு உடனே கொடுத்தனுப்பவும்.

அன்ட்ராஸ்புரம். புரட்டாசி 16உ

என்றெழுதி அதில் சகோதர துரோகி அமரசிங்கைக் கையெழுத்திடச்செய்து ஓராள் போய் அதனை வசூலித்து வருமளவும் அமரசிங்கைக் காவலுடன் அம்மலைக்குகைகளி லொன்றில் வைத்திருக்கும்படியும், ரூபாவைப்பெற்று அந்த ஆள் திரும்பினவுடன் அமரசிங்கை ஊருக்கு அனுப்பிவைக்கும்படிக்கும், அதற்கிடையில் அமரசிங்கிற்கு யாதொரு கெடுதியும் செய்யக்கூடாதென்றும் கள்ளர்களனைவரிடமும் அவர்கள் குல தெய்வத்தின்மீது ஆணை வாங்கிக்கொண்டு பாலன் தன் தந்தையுடன் மறுபடியும் கெம்பீரமாகவும் ஜாக்கிரதையாகவும் ஏணிமீதேறி விடுதியடைந்தான்.

கள்ளர்கள் அனைவோரும் பாலனின் அஞ்சா நெஞ்சத்திற்கு மிகுதியும் ஆச்சர்யங்கொண்டவராகி அவனை வாயாரப்

புகழ்ந்துகொண்டே அமரசிங்குடன் அவர்கள் ஜாகைசென்று அமரசிங்கைச் சிறையிட்டுச் சோழநாட்டிற்குச் சென்றவன் மீண்டு பணத்துடன் அவ்விடம் வருமளவும் வைத்திருந்து, அவன் வந்தவுடன் அமரசிங்கின் கண்களைக்கட்டிக் குகையைக் கடத்தி வெளியிலே கொணர்ந்து அன்ட்ராஸ்புரத்துக் காட்டெல்லையை அடித்துவிட்டுத் திரும்பினர்.

வீடடைந்த மோகனசிங் பாலனை நோக்கி, பாலா ஏன் அமரசிங்கை அவ்விதம் இரட்சித்தாயென்று வினவ, பாலன், "அப்பா! யான் கானில் அவன் தங்களுடன் எதிர்த்தவமயம் அன்னவனை வெட்ட எத்தனித்தபோது என்னைத் தடுத்து அவனை விடுதலைசெய்து அனுப்பவில்லையா தாங்கள்? அதற்கிணங்கவே யானும் உங்களால் அப்பொழுது தப்பிய அவன் தற்போது என்னாலுந் தப்பியதாக இருக்கட்டுமென்றே இவ்வாறு செய்தேன். மேலும் கங்கையானவள் மூன்று பிழை பொறுத்தல் போல நாமும் மூன்று பிழையாகிலும் பொறுக்க வேண்டியது நமது கடமையல்லவா? அதுபோலவே நாமும் இதுவரை தங்களைச் சபைகூடியவிடத்து அவமானம் பண்ணிப்போனபொழுது என் கையிலகப்பட்டு விடுதலையடைந்து போயினதுடன் மூன்று பிழை பொறுத்துவிட்டோம். இனியொரு முறை நம் கண்களில் தட்டுப்படுவானாகில் திண்ணமாய் வேறு யாவரும் அவனைக்கொல்லாவிடினும், யானே அவனைக் கொன்று ஜயபேரிகை முழக்க எண்ணங்கொண்டிருக்கின்றேன்; இது சத்தியம்" என்று கூறினன்.

பாலனின் இக்கடைசி வசனங்களைக்கேட்ட மோகனசிங் திடுக்கிட்டு, "பாலா இவ்வெண்ணத்தை மட்டிலும் முற்றும் மறந்துவிடு, என்று அவனை நாம் கொலை பண்ணினேமோ, அன்றே நாம் தான் வாஸ்தவத்தில் குற்றவாளியென்றே பிறர்

எண்ணுவர். நம் குற்றத்தை யவன் ஒழியாது உண்மை யுரைத்ததனாற்றான் நாம் அவனைத் தொலைத்துவிட்டோம் என்று யாவரும் சொல்லுதற்கிடமாகும். அவன் தான் குற்ற வாளியென நிரூபித்தல் வேண்டும். அப்பொழுது தான் உல கம் நம்மைக் குற்றவாளிகளல்லரென ஒப்பும் என்றான்.

"சரி; அப்படியானால் இப்பொழுதே தாங்கள் என்னு டன் புறப்படவேண்டும். யான் பாப்ஜான் கொடுத்த வாக்கு மூலத்தை அவன் கையெழுத்துடன் வைத்திருக்கிறேன். அதில் அமரசிங்கின் ஏவுதலாற்றான் அவன் பொய்ச்சாட்சி சொன்னதாக ஒத்துக்கொண்டிருக்கின்றான். மேலும் அவன் மனைவியும் அவளுக்குத் தெரிந்தவற்றை ஒன்றும் விடாது உரைப்பாள் என்பதும் திண்ணம். அவள் மிகவும் நல்லவள்" என்றும் அவளால் தன்னையடுத்த ஆபத்து நீங்கிய விதத்தை யும், பாப்ஜான் தனக்குச் சாட்சி சொல்ல உயிருடனிருத்தல் வேண்டுமென்று தான் அமரசிங்கின் ஏவலுக்குட்பட்டுத் தன்னையவன் பலமுறை கொல்லவந்தகாலத்தும் அவனை மட் டிலும் சுடாது மற்றெல்லோரையும் சுட்டு வீழ்த்திய விப ரத்தையும் சொல்லி இன்னும் சொல்வான்.

"அப்பா! தாங்கள் வந்தால் தங்களுக்கு நிச்சயமாய்ப் பட்டங் கிடைக்கும். அதோடு நம் கலியும் நீங்கும். என தருமை அன்னையின் நெடுநாள் நினைவும் ஈடேறும்" என்று புகன்று தன்னுடன் வரும்படி தன் பிதாவை வெகுவாய் இரந்து மன்றாடிக் கேட்டுக்கொண்டான்.

அதற்கு, "பாலா! நீயே போய் நான் குற்றவாளி யல்ல வென்று நிரூபித்து என் தம்பியாகிய அமரசிங் கைப்பட எனக்கு, அவன்தான் குற்றவாளி என்றும் நான் குற்ற மற்றவனென்றும் ஓர்கடிதம் கொண்டுவந்தாயானால் எனக்கு

அதுவேபோதும். பட்டமும் வேண்டியதில்லை, ஒன்றும்வேண்டிய தில்லை. என்சுதந்திரத்தை நானே என் மனப்பூர்வமாய் அவனுக்கு நல்குவேன். அதுவரை என்னை நீ எவ்விதமாகத் துன்பப்படுத்தினும் உன்னுடன் இனிமேல் நான் சோழநாட்டெல்லையை ஒருநாளும் நாடேன். இது சத்தியம் ஆனதால் பாலா! தயவுசெய்து இனியாகிலும் என்னை இவ்விடமே விட்டு உடனே நீ சோழநாட்டிற் கேக வேண்டிய பிரயத்தனங்களைச் செய். தாமதப்படுத்தாதே. பாலா! ஒன்று மறந்து விட்டேன்" அதாவது என்றான் மோகனசிங்.

"அதென்னப்பா?"

"எனது தந்தை எவ்விதமிருக்கிறார்?"

"நல்ல சுகத்துடன் தானிருக்கின்றார். மேலும் தங்கள் மேல் அளவற்ற பற்றுள்ளவராயும் காணப்படுகின்றார். அப்பா! அவர் தன் முன்கோபத்தினாற்றான் தங்களை அரண்மனையை விட்டுஅகலும்படி மொழிந்திருக்கின்றார். அவர்கோபந்தணிந்தவுடன் அவரைத் தாங்கள் அணுகியிருந் திருப்பீர்களானால் நிச்சயமாய்? தங்களை அவர் ஏற்றுக் கொண்டிருப்பாரென்று தான் நான் நினைக்கின்றேன்......"

"சரி இருக்கட்டும். அவரைப்பற்றி நினைக்குந் தோறும் என்மனங் கொதிக்கின்றது ஆகையால் தயவு செய்து அவரைப் பற்றி இன்னும் விஸ்தரிக்க வேண்டாம்."

"அதிருக்கட்டும். தாங்கள் இப்பொழுது என்னுடன் வர என் தடை; என்ன சொல்லுகிறீர்கள்?"

"பாலா! திரும்பத்திரும்பப் பழைய பாடத்தை நான் ஒப்புவிக்க வேண்டியதுதான். நீபோய் ஆகவேண்டிய காரியங்களைச் செய்து முடித்துக்கொண்டு நானுனக்குச் சொல்லிய

படி அமரசிங் கையினின்றும் ஒரு லிகிதம் கொண்டு வருவா யானுல் அப்பொழுது தான் நான் சோழபாண்டி நாட் டெல்லையை அடைவேன். இன்றேல் ஒருநாளும் வரேன்."

"அப்படியானுல் தங்களுக்கு அதுவரை இவ்விடமிருந்து தான் காலத்தைக் கழிக்க உத்தேசமோ?'

"அவ்விதமில்லை. என்னுடைய சிநேகர் சர்மிஷ்டர் அண்ட்ராஸ்புரத்தி லிருக்கின்ருரென்று உனக்கு நேற்றுச் சொன்னேனல்லவா? அவர் உதவியால் பர்மாதேசம் போக உத்தேசம். எவ்விதமென்ருல் அவரோ அவர் சிறுவயதிலி ருந்து. பர்மாவில் அவருடைய மாமனுரான மங்களம் பிள்ளை யிடமே வியாபார விஷயத்திலும் இன்னுமற்றெந்தத்தொழிற் களிலும் அழுந்தினவராகையால் சகலத்திலும் நிபுணராயிருக் கின்றனர். அவ்விடத்தில் நெடுநாளிருந்தவராகையால் பர்மா பாஷையையும் சரிவரக் கற்றிருக்கின்ருர். எனக்கும் இந்த ஒருவருடமாகக் கற்றுத்தருகிருர். இப்பொழுது எனக்கும் அந்த பாஷை வெகுநன்ருய்ப்பேசத் தெரியும்."

"அவரை நான் ஒரு வாரத்திற்கு முன் சந்தித்தேன். அவர் தான் வியாபார விஷயமாய் இன்னும் பத்துத்தினத்தில் பர்மா செல்லக்கருதி இருப்பதாய் எனக்குத் தெரிவித்தார். அப்பொழுது என்னையும் உடனழைத்துச்செல்லும் வண்ணம் கேட்டேன். அதற்கு இணங்கியிருக்கிருர். ஆதலால் இன்னும் இரண்டு நாளில் அவருடன் நானும் புறப்பட வேண்டியிருக்கு மென்று நினைக்கிறேன்". எனலும் பாலன் தன் கண்களில் முத்துக்களைப்போன்று நீர்ததும்பிச் சொல்வான்;

"அப்பா! பாண்டிக்கு அருகிலிருந்த தங்களை யான் எவ்வளவோ கஷ்டத்துடன் காணவேண்டிய தாயிற்று. அவ்

விதமிருக்க, எட்டாத தூரத்திற்குச் சென்றால், தங்களை யான் எவ்விதம் காணுவது? மேலும் தங்களைப் பார்க்க வெகு ஆவல்கொண்டே. மனோன்மணி தூத்துக்குடித் துறைமுகத்தை விட்டு யான் புறப்படும்பொழுதே "அண்ணா! அப்பாவைப் பார்த்து வெகுநாளாயிற்று. தாங்கள் அப்பாவைக் கண்டால் அவர்களைக் கட்டாயம் தங்களுடன் கூட்டிவர வேண்டும். அண்ணா! இதை மறந்துவிட வேண்டாம்" என்று என்னை வெகுவாய்க் கெஞ்சிக் கேட்டனள். அவ்வித ஏக்கத்துடனிருக்கும் தங்கைக்கு யான் போய் என்ன பதிலுரைப்பது? தாங்கள் பர்மாவுக்குப் புறப்பட்டுப் போகின்றீர்களென்று சொன்னால், சாதாரணத்திலேயே அம்மாளை நினைந்து நினைந்து வருந்துமவள் இவ்வார்த்தைகளைக் கேட்டவுடனே வெந்த புண்ணில் வேல்பாயப் பெற்றதுபோல் ஆகாரமுதலாய் உட்கொள்ளாது வாடுவாள் என்பதற்கோர் ஐயமுமில்லை. நிற்க, நம்காரியம் சித்தியடையும் தருணத்தில் தாங்கள் என்பக்கத்திலிருந்தால் எனக்கு எவ்வளவு ஊக்கமும் விடாமுயற்சியு முண்டாகுமென்று யோசித்துப் பாருங்கள்" என்று பலவாறாகப் பாலன் எவ்வளவோ உரைத்தும், மோகனசிங் அதனைக் கேளாதவனாகிப் பதிலுரைப்பான்:

"பாலா! இவ்வளவு நாளும் மனோன்மணியை எவ்விதம் தேற்றினாயோ அவ்விதமே இப்பொழுதும் தேற்றிக்கொள். அத்துடன் பெண்ணாகிய அவளை நன்கு கவனித்துக் கொண்டுவா. நீ என்னுடைய விலாசத்தை அறியவேண்டுமானால் முன்போலவே 'தேசபக்த'னில் பிரசுரஞ்செய். உன் பொருட்டு அப்பத்திரிக்கையைப் பர்மாவுக்கும் வரவழைத்துக் கொள்கிறேன். அஞ்சற்க. இதோ உன்னை வழியனுப்பப் பையனும் வந்துவிட்டான். போய் வருகின்றாயா பாலா? கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக" என்று பாலனை ஆசீர்வதித்தார். அதன்

பின் பாலனை அன்ட்ராஸ்புர மிருந்து முன்பு அழைத்து வந்த சிறியனே இப்போதும் பாலனை உடன் கூட்டி வழிகாட்டி அன்ட்ராஸ்புரம் அழைத்துச் சென்றான்.

பாலன் அப்பையனிடம் தன் தந்தையை அங்கிருக்கும் வரை நன்றாகக் கவனித்துக் கொள்ளும்படி சொன்னதுமன்றி அப்பையனின் நல்ல குணத்திற்கு அவனைப்புகழ்ந்து அவனை அனுப்பிவைத்து விட்டு அன்ட்ராஸ்புரமிருந்து கொழும்பு வந்து, அங்கிருந்து தூத்துக்குடிப் பட்டினத்தை யடைந்து கனம் தங்கையாரொட்ரிக்ஸ் அவர்கள் வீட்டிற்கேவந்து சேர்ந்தான். சேரவும் மனோன்மணி ஓடோடியும் வந்து தன்பிரிய சகோதரனை எதிர்கொண்டழைத்து "அப்பா எங்கே?" என்று வெகு ஆவலாய்க் கேட்டாள்.

அதற்கு பாலன் "தங்காய்! அப்பாவைக் கண்டேன். மிகவும் செல்வமாகத் தானிருந்து வருகின்றார்கள். மேலும் ஆங்குள்ள கள்வர்களால் ஒரு தெய்வமெனக் கொண்டாடப் பட்டும் வருகின்றார்கள். நான் அப்பாவை எவ்வளவோ என்னாலானமட்டும் என்னுடன் வந்து உன்னைப் பார்த்து விட்டு வரும்படி வேண்டியும், அப்பா நான் அமரசிங்கிடமிருந்து அவன் கைப்படவே தான்குற்றவாளி என்றும் அப்பா குற்ற மற்றவர்களென்றும் ஓர்கடிதம் கொண்டு வந்து காண்பித்தாலொழிய 'சோழ பாண்டி நாட்டெல்லையை இனிக்கிட்டேன்' என்று பிடிவாதம் பண்ணுகின்றார்கள். மேலும் அப்பாவும் அவர்களுடைய சிநேகரான சர்மிஷ்டரும் ஓர் வியாபாரத்தின் பொருட்டுப் பர்மாவிற்கு இன்னும் இரண்டு மூன்று நாளிற் போவதாயும் என்னிடம் சொன்னார்கள்."

"என்ன செய்வது மனோன்மணி? நாம் எங்ஙனம் அப்பாவியின் கைப்பட லிகிதம் கொணர முடியும்? நானும் கட்

டாயம் கொண்டு வருகின்றே னென்று அப்பாவுக்கு வாக்கு மளித்து வந்து விட்டேன். இதை நினைக்கும்போது என் மனம் பற்றி எரிகிறது. ஒன்றும் தோன்ற வில்லையே!" என்ன செய்யலாம் என்று மிகவும் கிலேசப்பட்டான்.

அப்பொழுது அளவற்ற சோகக்கடலில் தானே ஆழ்ந்து கிடப்பதையும் மறந்து தன் அண்ணாவின் துயர் நீக்கக் கருதிய மனோன்மணி, "அண்ணா! தாங்களொன்றுக்கும் விசனப்பட வேண்டாம். எல்லாம் வல்லஇறைவன் அருள்பாலிப்பானானால் அமரசிங் கைப்பட ஓர்லிகிதம் கிடைப்பது அருமையா? இவ்வளவு தூரம் நமக்கனுக்கிரகித்த எம்பெருமான் குறைவற இன்னும் நமக்குத் துணையாயிருப்பா ரென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. எவ்விதத்தாலாவது நமக்கு அப்பாவின் எண்ணம் ஈடேறுவதற்கான ஓர் உபாயம் கிட்டும். அதற்காகக் கிஞ்சித்தும் வருத்தப்பட வேண்டாம், முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்று பாலனை நோக்கிப் பகர்ந்தாள்.

அதன் பின் பாலன் தான் அன்ட்ராஸ்புரம் போய் வந்த விபரங்களனைத்தையும் ஒன்றுவிடாமல் மனோன்மணியிடம் புகல, மனோன்மணி பாலன் அமரசிங்கின் மீது இரக்கங் காட்டியதற்கு மிகுதியும் தன் அண்ணாவைக் கொண்டாடினாள். பின் பாலன் அவ்விடம் தன் தங்கையுடன் ஒரு வாரத்தைக் கழித்துவிட்டு மறுவாரம் பாண்டிக் தலைநகர் நோக்கி, ஆங்கு என்ன விசேடம் அதுவரை நடந்திருக்கின்றதென்றும், இனி நடக்கவேண்டியவை என்றும் அறிந்துவருதற் பொருட்டுத் தங்கையாரொட்டிக்ஸவர்களிடம் விடையும் பெற்று மனோன்மணி அவ்விடமே தான் திரும்பும் வரை இருக்கும் வண்ணம் ஏற்பாடுஞ் செய்துவிட்டுப் புறப்பட்டான்.

இச்சங்கதிகள் யாவும் இவ்வாறிருந்து கொண்டிருக்க, அல்லும் பகலும் அயர்விலாது தூக்கமின்றி கனவிலும் நனவிலும் மனோன்மணியைக் கருதிக் கொண்டிருந்த விசித்ரவீரிய வர்மனை அவனது தந்தையாகிய போஜவர்மர் தனக்கு வயது முதிர்ந்ததால் தன் கண்ணுள்ளபோதே தன் ஏகபுத்திரனுடைய அரசாட்சியைக் கண்டு களித்ததுபோலவே அவனுடைய மணக் கோலத்தையுங் கண்டு களிக்க எண்ணங் கொண்டவரானார். ஆகவே, தன் புத்திரனுக்குத் தன் எண்ணத்தை ஓர்நாள் தெரிவிக்கலானார். அதற்கு வர்மன் யாதொரு பதிலுமுரையாது பித்துக் கொண்டவன்போல் மௌனஞ் சாதித்து நின்றான். அதனைக்கண்ட போஜவர்மர் தன்புத்திரன் நாணத்தால் அவ்வாறு நிற்கின்றானென மதித்து அன்று அவ்வளவோடு நிறுத்திக் கொண்டு சமயம் பார்த்து அவ்வார்த்தைகளை மற்றோர் தினமும் அவ்வாறே வர்மனுக்கு அறிவித்தார்.

---

## 11-வது அத்தியாயம்.

## உண்மைக் காதல்.

---

அதற்கு வர்மன் "தந்தையே! மன்னித்தருளவேண்டும். எப்பெண்ணை எனக்குத் தேர்ந்தெடுத் திருக்கின்றீர்கள்?

"குழந்தாய்! உன்னுடைய சம்மதத்தை யறிந்தபின் தான் அதனை உத்தேசிக்க என் மனம் நாடுகின்றது"

"தந்தையே! என் வேண்டுகோளைச் சற்று அங்கீகரிக்க வேண்டும். எனக்கோ தற்போது விவாகம் வேண்டியதில்லை என்றெண்ணுகின்றேன். மூன்று வருடங் கழித்து அதனைப்பற்றி யோசிப்பது தான் நலமெனத் தோன்றுகிறது."

"அப்பா! வர்ம! ஏன் இவ்விதம் வசனிக்கின்றாய்? எக் காரணத்தினால் மூன்று வருடங் கழியவேண்டும்? சகல கலை வல்ல உனக்கு நான் எங்ஙனம் புத்தி புகட்டுவது? எனக்கு வயதாகி விட்டதையும் நீ தெரிந்துகொண்டாய். நின் அன்னை யும் யானும் எங்கள் கண்ணுள்ளபோதே உன் விவாகத்தைக் கண்டு களிப்பெய்தல் வேண்டாமோ?"

"பிதாவே! தாங்கள் சொல்வது யாவும் உண்மையே. ஆயினும் எனக்குள்ள ஓர் ஆசையின் பொருட்டுத்தான் மூன்று வருட வாயிதாக் கேட்டுக்கொள்கின்றேன்."

"என்ன ஆசையப்பா அது?"

"வேறோர் ஆசையுமன்று; யான் பல தேசங்களையும் பார்த்துவரவேண்டிய ஆசைதான்."

"அதற்குத்தானா மூன்று வருடகாலம் வேண்டுமென் கிறாய்; அது ஒரு காரணமாகத் தோன்றவில்லையே?"

"அப்பா! பேருக்கு மூன்று வருடகாலம் கேட்டேன். ஒரு வருஷத்தில் திரும்பினாலும் திரும்பிவிடுவேன். அதற் காகத் தாங்கள் கவலை கொள்ளவேண்டாம்" என்று தன் தந்தைக்குப் பலவாறான தேறுதல் சொல்லித் தன் தந்தை யின் அனுமதிபெற்றுச் சேரநாட்டைவிட்டுப் பாண்டியன் நகர்க்கு ஓர் சந்நியாசி வேடந்தாங்கிப் புறப்பட்டான்.

சிறிது வேளையில் பாண்டியடைந்த விசித்திர வீர்ய வர் மன் அவ்விடத்திலிருந்த ஓர் சத்திரத்திலிருந்துகொண்டு சிந்திக்கலாயினான்: "ஏ! கருவிழிகளையுடைய மானேன்மணி! உன்னை எவ்வாறு மறப்பேன்? உன்னை யாரென்று கூடத் தெளிவாய் அறிந்துகொள்ளாது மோசம் போனேனே! உன் னுடைய அன்னையர்க்குப்பின் என்ன பாடு படுகின்றாயோ? என்ன செய்துகொண்டிருக்கின்றையோ? அறியேனே! அல்

லது எங்கே இதுவரை உனக்கு மணமாகி விட்டதோ? ஒன்றுந் தெரியவில்லையே! உன்னுடன் யான் ஒரு வார்த்தை பேசி விட்டேனேயானல் எனக்கு வேறு விவாகம்அவசியமில்லையே! நன்கு ஆராய்ந்தால் நீ ஓர் இராஜ குடும்பத்தவளென்பதில் ஐயமில்லை. ஏனெனில் உன் தந்தை ஓர் இராஜ வம்சத்துதித்தவரானது பற்றித் தான் எனக்கு அஸ்திரசஸ்திரப் பயிற்சி, ரதாரோகணம், யானை ஏற்றம் முதலியவைகளைக் கற்றுத் தந்தார். நிற்க, உன் தந்தையார், தாயார், அண்ணு ஆகிய இவர்களுக்கும் உனக்கும் இராஜகளையும் அரசவம்சத் துதித்தவர்களுக்குள்ள அடையாளங்களும் யான் நன்கு கவனித்தும் நீங்களனைவரும் எங்களுடைய நாட்டிற்கு ஏக குடும்பமாய் வந்துற்ற காரணத்தை அறிந்து கொள்ளாது ஏமாந்தவனுகினேனே! ஏ! என் மனதிற்கிசைந்த மீனுன்மணி! உங்களனைவருடைய நடை உடை பாவனைகளைக் கவனித்தால், நீங்களனைவரும் சோழநாட்டாரென்றே புலப்படுகின்றது. ஆனதால் மேலே ஆராய்ச்சி செய்யாது நேராகச் சோழநாட்டிற்கே புறப்படுகின்றேன்'' என்று நம் வர்மன் பாண்டியை விட்டுச் சிறிது தினத்தில் சோழநாட்டிற்கோர் திலகம் போன்றுவிளங்கும் தஞ்சைமாநகரை அடைந்தான்.

சோழநாட்டை அடையவும் அவ்விடம் எங்கெங்கு மிகவும் அழகிய பூங்காவனங்கள் தென்படுகின்றனவோ அங்கெல்லாம் மாலையானவுடன் மீனுன்மணியைக் காணுங் கருத்துடையனுய் அலைந்து திரிந்தும் மீனுன்மணியைக் கண்டபாடில்லை. ஆகவே மிகவும் விசனத்திலாழ்ந்து அவ்விடம் இருந்துவரும் நாளில் திடீரென்று அவனுக்கு ஒரு நினைவு தோன்றித் தூத்துக்குடிபோய்ப்பின் தன்னூர்க்கேகலாமென நினைத்துச் சின்னுளில் தூத்துக்குடி வந்து சேர்ந்தான்.

ஈதிங்ஙனமிருக்கச் 'சேரநாட்டில் குடிகளுக்குள் இராஜாங்க விஷயமாய் ஓர் குழப்பம் உண்டாய் விட்டது. அதனைக் கிழபோஜ வர்மர் அடக்க எவ்வித பிரயத்தனமெடுத்தும் 'கிழவன் சொல் கின்னரத்திற்கேற்குமோ?' என்றதுபோல் போஜவர்மருடைய பிரயத்தனங்கள் யாவும் பலிக்காது போயின. உடனே மன்னர் தன் மைந்தனைத் தேடிக்கொண்டு வரும்படி ஏவலாளர்களை ஏவினர். ஏவலர் நாடெங்குந் தேடப் புறப்பட்டுச் சகலவிடங்களிலும் தேடித்திரிந்தனர். ஓரிடமாவது காணக்கூடவில்லை.' என்ற இவ்வதந்தி தூத்துக்குடிக்கும் எட்டியது. அதனை அறிந்த மனோன்மணி விசித்திர வீர்யவர்மன் தன்னைத்தேடவே தன் நாட்டை விட்டு நீங்கியிருக்கின்றானென நினைத்து உளம் உருகுவாளாயினள். மேலும் வர்மன் அதுவரை விவாகம் செய்துகொள்ளாததற்கு ஒரு புறம் சந்தோஷித்தாளாயினும், மற்றொரு புறம் வர்மனில்லாக் காலையில் நாட்டில் குழப்பம் குடிஜனங்களுக்குள் உண்டாயதற்காகத் துக்கிக்கவும் செய்தாள்.

மனோன்மணி இத்தகைய ஸ்திதியிலிருந்து கொண்டு வரும்பொழுது தூத்துக்குடி அடைந்த ஆண்சிங்கமாகிய விசித்திர வீர்யன் தற்செயலாய் ஓர்நாள் மாலை வடக்கு ராஜவீதியில் போய்க் கொண்டிருக்கும் சமயம் ஓர் பூங்காவையும் அதனுள் வடிவிற் சிறந்த ஓர்வனிதை தோட்டத்தினழகையும், செடி கொடிகளின் மாட்சியையும். ரீங்காரத்துடன் வண்டுகள் மலர்களிலுள்ள தேனை யுண்ண வந்துகொண்டிருப்பதையும் கண்ணோக்கிக் கொண்டிருக்கக் கண்டு "ஆஹா! இம்மடந்தை யாவளாயிருப்பாள்? இந்த நேரத்தில் தோழி ஒருவளுமில்லாது தனித்து நிற்கின்றாள். இவள் இன்று வெளிப்பட்டு நிற்குந்தோற்றத்தை என்னென்றுரைப்பது! துறந்தோரும் துதித்தற்குரிய என்னசுந்தரம்! திரும்புகின்றாள். இவளது படர்ந்த

முகத்திற்கும், குளிர்ந்த பார்வைக்கும், அழகிய பட்டாடைக்கும் பொருந்தும்படியே இருக்கிறது இவளுடைய ஜடையும். வண்டுகள் அவளைத் துரத்துகின்றனவே! வண்டுகள் இவளை ஓர் மலர்க்கொடி யென்று நினைத்து இவள்மேல் தங்க வருகின்றனவோ? அல்லது பத்மினி ஜாதிப்பெண்ணுகிய இவள் மேலுள்ள ஷண்பகமலர் வாசனையைக் கருதி 'இவளும் ஓர் மலர் தான். இம்மலரின் தேனையுண்ணலாம்' என்று இவளை இவ்விதம் துரத்துகின்றனவோ?" என்று பூங்காவில் ஓர் பக்கத்தில் நின்று அம்மாதைத் திடீரென்றணுகுவது கூடாதென்றுன்னி இவ்விதம் வர்ணித்துக்கொண்டிருக்கும் பொழுதே, மைந்தர் உயிரை வாட்டும் மன்மத சுந்தரியாகிய நம் மனோன்மணி வண்டுகளின் இம்சையைத் தாங்காதவளாகி அக்கம் பக்கத்தில் தனக்கு ஓர் ஆள் உதவிக்காகப் பார்க்கச் சிறிது அருகிலேயே ஓர் மனிதன் நிற்கக்கண்டு வண்டுகளை "உஸ், உஸ்' என்று தன் உடலில் உட்காரவொட்டாது வெருட்டிக்கொண்டே அம்மனிதன் பக்கம் நெருங்கினுள்.

அவ்வளவு எழில் நலம் படைத்த மனோன்மணியை நன்குயறிந்துகொண்ட வர்மன் திடீரென இன்னது தான் செய்வதென்றறியாது, "என் கண்ணே!" என்று மனோன்மணி மீது வீழ்ந்து கட்டியணைக்க, மனோன்மணியும் குரலோசையாலும் இன்னும் மற்ற அடையாளங்களாலும் தான் சதா தியானித்துக்கொண்டிருந்த வர்மனெனக் கணத்திலறிந்து அவளும் இன்னது தான் செய்வதென்றறியாது மதிமயங்கித் தன் அளவில்லா ஆசைப்பெருக்கால் தன் இரண்டு கைகளையும் வர்மனது தோளிற் போட்டு அவனை ஆலிங்கனஞ்செய்து "நண்ப! எங்ஙனம் இவ்விடம் வரலானீர்கள்? என் இந்தக்கோலம்? ராஜ்யபாரம் எப்படியிருக்கின்றது?" என்று வினவினுள்.

"பார்ப்பவர் மனத்தைப் பரவசப்படுத்தும் பாவையே! உன்னைப் பூங்காவிற் கண்ட அப்பொழுதே என் மனம் உன்னை நாடியது. உன்னுடன் சம்பாஷிக்க இருந்த அச்சமயம் பாலன் உன்னை அழைத்துச்சென்றான். அப்பொழுதே என் வயிற்றில் நெருப்பைக்கொட்டியது போலாகிக் குருவின் புத்திரியாகிய உன்னை எங்ஙனம் மணப்பதென்று இதுகாறும் ஏங்கியிருந்தேன். அச்சமயத்தில் என் தந்தை என்னை விவாகத்திற்காகப் பலமுறையும் நெருக்க, நான் தேச சஞ்சாரஞ் செய்து மூன்று வருஷத்திற்குள் திரும்புவதாக வாக்களித்துவிட்டு, உன்னை இம்மூன்று வருடத்திற்குள் எவ்விதத்திலுந் தேடிப்பிடித்து உன் விருத்தாந்தங்களனைத்தையும் நன்கறிந்த பின்னரே வேறு காரியம் புரிவது என்று திட்டஞ்செய்து வந்தேன். நல்லவேளையாய் நான் புறப்பட்ட ஒரு வருஷ காலத்திற்குள்ளாகவே உன்னைக்கண்டு என் கலி யாவையும் போக்கினவனானேன். ஆனதால், என்னருங் கிளியே! நீ எந்த வம்சத்தைச் சார்ந்தவள்? நீங்கள் யாவரும் எம் நாட்டில் தங்கி வந்த காரணம் யாது? தற்சமயம் நீ இவ்விடத்திலிருக்கவேண்டிய அவ்சியம் என்ன? உன் நடையுடை பாவனைகளால் நீ சோழமண்டலத்தைச் சார்ந்தமாதென்று கருத வேண்டியிருக்கின்றது. பெண்கள் நாயகமே! தயவு செய்து உள்ளதுரைக்கவேண்டும்" என்று வெகுவாய்க்கெஞ்சலானான்.

அப்பொழுது வர்மனின் மடியிலிருந்த வண்ணமே பெண்கள் திலகமாய மனோன்மணி தன் கண்களில் நீர்சோரத் தன் விருத்தாந்தங்கள் யாவையும் சவிஸ்தாரமாய் நவின்று, பின் "என்னருயிரே! என் தந்தை அன்னாளிடம் அமரசிங்கைப்பட அமரசிங்காகிய என் சிற்றப்பனை குற்றவாளி என்றும் தந்தை நிரபராதியென்றும் ஓர் கடிதம் கொண்டுவந்தாற்றான் தான் சோழநாடு வரமுடியுமென்று சொல்லிவிட்டுக்

தன் மித்திரர் சர்மிஷ்டருடன் பர்மா போயிருக்கின்றார்கள். தந்தை சொல்லிற்கிணங்கவே அண்ணு எவ்வித சூழ்ச்சியிலாவது அமரசிங்கிடமிருந்து கடிதம் கிடைக்கும் வண்ணம் கிட்டுமாவெனப்பார்த்து வரவே இப்போது என்னை இவ்விடம் விட்டுப் பாண்டி சென்றிருக்கின்றார்கள்” என்ற இவ்விபரத்தையும் உரைத்ததுமன்றி “எனதன்பே! தாங்கள் ஏன் காவி வஸ்திரதாரியாய்த்தோன்றுகின்றீர்கள்?” எனவும்கேட்டனள்.

அதற்கு “ஏ! பூவிற் பொலிந்திலங்கும் பொற்பாவையே! நான் இக்கோலம் பூண்டது உன் பொருட்டுத்தான். அரச வைபவத்துடன் நான் வந்திருப்பேனுனல் இவ்விடத்தில் உன்னை நான் காணக்கூடுமா? எனது பகையரசர் நாடாகிய சோழநாட்டில் என் காலை எடுத்து வைக்கவாவது முடியுமா? அதிருக்கட்டும். என் கிளியே! நான் என்ன சொல்லுவேன்! நீ சோழநாட்டதிபரின் பேத்தி என்பதையும், உன் தந்தை அவர் பட்டத்திற்குரியவரென்ற விபரத்தையும் இதுவரை அறிந்திலேனே” என்று வெகுவாய் விசனித்துத் தானும் பால்சிங்கிற்கு உதவி செய்ய எண்ணங்கொண்டிருப்பதாகவும், அமரசிங்கிடமிருந்து எவ்விதத்திலும் அவள் தந்தை சொல்லிற்கிணங்கவே கடிதம் கொண்டுவரப் பிரயாசைப்படுகிற விஷயத்தில் முயற்சி எடுத்துக்கொள்வதாகவும் புகன்றான்.

அச்சமயம் குபேரனச் சேரநாட்டுக் குழப்பத்து வதந்தி ஞாபகத்துக்கு வரவே, மனோன்மணி வர்மனிடம் “நண்ப! இவ்வெண்ணத்தைத் தவிருங்கள். இதனை என் அண்ணாவே பார்த்துக்கொள்வரென்று நினைக்கின்றேன். தூத்துக்குடி பூராவும் சேரநாட்டில் குடிகளுக்குள் ஓர் குழப்பமுண்டாயிருக்கிறதென்றும், கிழவரசரதனை அடக்கமுடியாது தயங்கித் தங்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாகவும், தங்க

ளுக்காக அநேக ஏவலாட்கள் ஊரெங்கும் திரிகிறதாகவும் ஓர் பெரிய வதந்தி சென்ற ஒரு வாரமாய் உலாவி வருகிறது. இச் செய்தி தங்களை வந்திதுவரை அடைந்திராதென்றுன்னுகின்றேன். ஆதலால், என்னைப்பற்றிய அல்லது எங்கள் தந்தையைப்பற்றிய கவலையை யொழித்து யாதொரு தாமதமுமின்றி உடனே தங்கள் நாட்டிற்கு ஏகுங்கள். மற்றவைகள் பின்னர் பேசிக்கொள்ளலாம்" என்று செப்புவாளாயினள்.

இச்சொற்களைக் காதில் மடுத்த வர்மனுக்கு யாதும் தோன்றாது மயங்கினனாயினும், எவ்விதத்திலும் மனோன்மணியை மணக்கக்கருதித் தன் அபிப்பிராயத்தை மறுபடியும் அறிவிக்கவே, மனோன்மணி எந்த விதத்திலும் இக்கார்யங்கள் யாவும் இனிது நிறைவேறி வர்மனையே மணந்துகொள்வதாக வாக்களிக்க, வர்மன் அரசர்க்குரிய காந்தர்வ விவாகம் முடித்துக்கொண்டு தன்னகர் நோக்கிச்சென்றான். அச்சமயம் மின்னற்கொடியோ வென்று யாவரும் சந்தேகிக்கும் நம் மனோன்மணியின் மைபடிந்த கண்களினின்று குவளை மலர்களின் மீதேன் உண்ணவந்த வண்டினங்கள் மெல்ல ஊர்ந்து செல்வது போல் கருநீர் ஓடிக்கொண்டிருக்க, மலர்ந்த தாமரை குவிந்தது போல் அவள் முகம் வாட்டமுற்றது.

இது இவ்வாறிருக்க, தூத்துக்குடியினின்று பாண்டிக்குப்புறப்பட்ட பாலனைக் கவனிப்போம். தூத்துக்குடியிலிருந்து பாண்டியை யடைந்த பாலன் சுமார் ஒரு மாத காலம் அடுக்கடி பழமதுரை சென்று அன்பென்னும் விதையைக் கனகின் மனம் என்னும் பாத்தியில் பாலன் விதைத்த நாளிலிருந்து எந்த நேரமும் பாலனையே கருத்திற்கொண்டிருந்த நீலமணி யொத்த கண்களையுடைய பவளவாய்க் கனகாம்பாளைச்சந்தித்து உல்லாசமாய்க் காலங்கழித்து வருவானாயினான்.

## 12-வது அத்தியாயம்.

## பர்மா யுத்தம்.

இவ்விதமிருக்கும் ஓர் நாள் எங்கு பார்த்தாலும் பட்டாளத்திற்கு ஆட் சேர்க்கின்றார்கள் ஆட் சேர்க்கின்றார்கள் என்று ஓர் பெரிய வதந்தி யுலாவியது. அப்பொழுது பாலன் ஏற்கனவே ராணுவத்தி லபிமானமுள்ளவனுகையால் அது தான் சமயமெனக்கருதி ஆளெடுப்போரைத்தேடி அவர்களிடம் தன்னையும் ஏற்றுக்கொள்ளும்படி சொன்னன். அதற்கு அவர்கள் தங்களுக்குப்பாண்டியில் வேண்டிய ஆட்கள் சேர்த்தாய் விட்டதென்றும், இனி வேறொருவரும் அவர்களுக்கு வேண்டியதில்லை என்றுஞ் சொன்னர்கள். பின்னர் பாலன் அவர்களை நோக்கி "ஐயா! சேர சோழ பாண்டிநாடுகளோ தற்போது சமாதான நிலையிலிருந்து வருவதாகக் காணப்படுகின்றன. அங்ஙனமிருக்கத் திடீரென்று இப்பொழுது சைன்யங்கள் தயாரிப்பதெதற்கு?" என்ருன்.

அதற்கவர்கள் "காரணமொன்றும் நாங்களறியோம். ஆனல் சைன்யமெதற்கென்றல் பர்மாவோடு சண்டை செய்ய என்று சொல்லுகின்றர்கள். அவ்வளவு தான் எங்களுக்குத் தெரிந்த விஷயம்" என்று சொன்னர்கள்.

"பர்மாவோடு சண்டை செய்ய" எனவே, எங்கே தன் தந்தையையும் சர்மிஷ்டையையுந் தொலைக்கத்தான் அவர்களுடன் போர் பொருதப் பாவி அமரசிங் நினைத்துவிட்டனனே என்று நினைத்த பாலனின் மனம் கரையிலிடப்பட்ட மீன் போற் பதைபதைக்க, மீண்டும் அவர்களை நோக்கி "ஐயா! சைன்யம் எப்பொழுது பர்மாவுக்குப் புறப்படுகின்றது?" என்று அதன் உளவு அறிந்துகொள்ளுமாறு கேட்டான்.

"இன்னும் ஒரு வாரத்தில்"

"யாருடைய சேனுபத்தியத்தின் கீழ்?"

"அமரசிங் ஆகிய எங்கள் இளவரசரின் கீழ்த்தான். ஏன் இக்கேள்வி எல்லாங்கேட்கின்றாய்?"

"வேறு ஒன்றுமில்லை. எனக்கும் ராணுவத்திற் சேரப் பிரீதியிருப்பதாற்றான் அவ்விதம் கேட்டேன். சோழநாட்டிலும் ஆளெடுக்கின்றார்களோ?"

"ஆம். அவ்விடமுந்தான் எடுக்கின்றார்கள்."

"அவ்விடமும் போதிய ஆட்களெடுத்தாகி விட்டதோ?"

"இவ்விடமெடுத்தானது மட்டிலுந்தான் எங்களுக்குத் தெரியும். அவ்விடத்திய சமாச்சாரமொன்றுந் தெரியாது. வேண்டுமானால் நீ போய் விசாரித்துக்கொண்டு சேரலாம்" என்று சொல்லிவிட்டுப் பாலனை விட்டகன்றனர்.

அந்த க்ஷணமே பாலன் தன் பிரியகாதலி கனகிற்குக் கூடத் தன் பிரிவை அறிவியாது உடனே சோழநாட்டிற்குப் புறப்பட்டு வந்து அவ்விடத்தில் பாண்டியில் நடந்த வதந்தி எம்மட்டிலிருக்கின்றதெனப் பார்க்க அங்குமிங்கும் உசாவுவானாயினான். அவ்விடமும் சைன்யத்திற்கு வேண்டிய மனிதர்களைத் தயாரிப்பதாகக்கண்டு, ஆளெடுப்பவராகிய ஜமேதார் வீராச்சாமி நாயுடுகாரை அணுகி ராணுவத்தைப்பற்றிப் பேசி இன்னும் ஆள் தேவையோ?" என்று கேட்டான்.

அதற்கவர், "போதிய ஆள் எடுத்தாகி விட்டதென்றும் இன்னும் முப்பது ஆட்கள் தான் தேவை யென்றும், இம் முப்பது ஆட்கள் சேர்ந்த அக்ஷணத்திலேயே சைன்யம் பர்மாவின் மீது படையெடுத்துச் செல்லுமென்றுஞ் சொன்னார்.

சொல்லவே, பாலன் முன் பின் ஆராயாது தன்னையும் அதனில் தாக்கலாக்கிக்கொள்ளும்படி வேண்ட, நாயுடுகார்,

இன்னும் இருபத்தைந்து வயது நிரம்பப் பெருதவனும், ஆண ழகனும், சிம்மம் போன்ற பார்வையை யுடையவனுமாகிய பாலனையா தாக்கலாக்கிக்கொள்ளப் பின்னடைவர். அக்ஷண மே வெகு சந்தோஷத்துடன் தன் பாதுகாப்பிலுள்ள சைன் யத்திலேயே பாலனைச் சேர்த்துக்கொண்டார்.

அமரசிங் சேனைகளைத்திரட்டிப் புறப்பட ஆயத்தம் பண் ணும் முன்னர் நாயுடுகாரை அழைத்து முப்பதின்மரும் சேர்ந் தாகிவிட்டனரா வென்க, நாயுடுகார் தான் வைத்திருந்த ஜாப் தாவை யெடுத்துக்கொடுத்தனர். அமரசிங் ஜாப்தாவிலுள்ள பெயர்களை அவசரமாக வாசித்துச்சென்றானன்றி அதில் பாலன் சேர்ந்திருப்பதைக் கவனியாது தன்னிருப்பிடம் சென்று தனக்கு வேண்டிய உடைகளை அணிந்துகொண்டு சைன்யத்தைத் திடப்படுத்தி மன்னரது ஆசிபெற்று நேராகப் பாண்டிக்கு வந்தான். வந்து ஆங்குள்ள வீரர்களையுமுட னழைத்துத் தூத்துக்குடி சேர்ந்து மறுநாட் கப்பலிலேறிப் பர்மாவுக்குப் பிரயாணமாகத் தயாரிலிருந்தான்.

அந்தச்சமயத்தில் பாலன் நாயுடுகாரைப் பார்த்து, "தலைவ! என்ன காரணத்தின் பொருட்டுப் பர்மாவிற்குச் செல் கின்றோம்? தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள்" என்று மிகவும் தாழ்மையுடன் கேட்கலானான்.

"அப்பா! நம்மவர்களிலிருவர் பர்மாவிற்கு வியாபாரத் தின் பொருட்டுச் சென்றிருக்கின்றார்களாம். அவர்கள் அவ் விடமிருக்கக்கூடாதென்று துஷ்ட பர்மர்கள் அவர்களிருவ ரையும் மிகவும் நிர்ப்பந்தித்துவரத் தலைப்படவே, அவ்விருவ ரும் அதற்கும் பொறுமையாயிருந்து வந்தார்களாயினும், யாதொரு குற்றமு மற்ற அவர்களிருவரையும் சிறையிலிட்டி ருப்பதாகவும், அவர்கள் "நாங்கள் சோழர்கள்" என்றால்

சிங்கமெனப் பெயர் கொண்ட நம் அரசரைப் பலவிதத்திலும் அவமதிப்பதாகவும், அவ்விடமிருந்து தப்பிவந்த அவ்விருவர்களில் ஒருவருடைய மாமனார் இவ்விடம் ஓர் நாள் ராஜதர்பாரில் குய்யோமுறையோவென்று ஓலமிட்டார். அதற்கிணங்கவே, அவ்விருவரைச் சிறை மீட்கவும், நம்பேரரசரின் ஆற்றலை அவர்கட்குக் காண்பித்து அறிவுறுத்தற்குமே அவர்கள் மேல் படையெழுப்பியிருக்கிறது. அறிந்தனையா?" என்று நாயுடுகார் நம் பாலனுக்குப் பதிலளித்தார்.

இச்சங்கதிகள் யாவையும் வெகு கவனத்துடன் கேட்டுக்கொண்டிருந்த பாலன் யோசிக்கலானான்; "ஜமேதார் சொல்லில் கவனத்தைச் செலுத்தினால் அவ்விடமிருக்கும் இருவர்கள் என் தந்தையும் அவரது மித்திரர் சர்மிஷ்டருந்தாமெனன்பதில் ஐயமில்லை. தப்பியோடி வந்தவர் சர்மிஷ்டருடைய மாமனாராகிய மங்களம் பிள்ளை தான். ஐயோ! என் அருமைத் தந்தை பர்மர்கள் கையில் என்ன பாடு படுகின்றாரோ அறியேன்! சர்மிஷ்டரின் கெதி என்னவாயிருக்கிறதோ? ஏ! ஜெகதீசா! அவர்களைக் காத்துக்கொள்ள உன்னையல்லால் வேறு யாரால் முடியும்? யான் என் தந்தை நிரபராதி என்று நிரூபித்தற்கு என்ன பாடு படுகின்றேனென்பது நின் திருவுள்ளம் அறியாததல்ல! மேலும் இவ்வளவு தூரம் முயற்சித்த எனக்கு ஊதியம் இதுதானோ? யான் என் தந்தையை அரச கோலத்துடன் காண வேண்டாமோ? ஐயனே! யான் உயிருடனிருத்தல் உனது திருவுள்ளத்திற்குச் சம்மதமில்லையோ? என் பிதாவிற்குப் பின் யானிருந்து என்ன பிரயோஜனம்? எனக்குப் பின் என் தங்கை மனோன்மணி எவ்விதம் உய்வாள்? நிற்க, என்னையே காதலித்துக் கருத்துருகும் கனகின் முடிவு தான் எவ்வாறாகும்? எல்லாம் நீயே யாகையால் என்னை ரட்சித்தருள் செய்வது உன் கடமையன்றி வேறல்ல."

"மேலும், அமரசிங்கின் கீழ் எவ்வளவோ சைன்யஞ் செல்கின்றன. இவனுக்கு எனது தந்தை தான் இவ்விதமாகச் சிறையிடப்பட்டு இம்சிக்கப்படுகின்றாரென்று தெரியவந்தால் இவனது மனம் வேறுபட்டுச் சைன்யத்தைத் திருப்பிவிடுவான். என் தந்தையை மீட்கும் வரை இவனுக்குத் தெரியாதிருப்பினும், மீட்ட பின் வரும் வழியிலேயே எந்தையை நாசமாக்க நினைப்பானே. என் செய்வேன்! எனக்கு வேறோர் துணையுமில்லையே! இருக்கட்டும், 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்றபடி எம்பெருமான் எனக்கு அபயாஸ்தம் தந்து என்னை ரட்சிப்பார். நிற்க, என் தாதையைக் கண்டபின் என்னுயிர் போயினும் அவர்களை ஒருவரிடமும் விடேன்." என்றிவ்வாறு ஆழ்ந்த யோசனையிலிருந்த பாலன், 'எல்லாம் வல்ல இறைவனிருக்கின்றான், என ஒருவாறு தேறி, மனோன்மணியைக்கண்டு இச்செய்திகள் யாவையும் உரைக்கக்கருதி ஜமேதாரின் உத்திரவு பெற்று மனோன்மணியைக் கிட்டிச் சென்று சகல சங்கதியும் பகர்ந்தான்.

அதனைக்கேட்ட மனோன்மணி மதியிழந்து "அண்ணா! அப்பாவை அங்குமா பாவி பின் தொடர்கின்றான். ஈசன் நம் தலையில் எப்புள்ளியிட்டிருக்கின்றானோ தெரியவில்லை. வருவது வந்தே தீரும். யான் தங்களுக்குச் சொல்லவேண்டியதொன்றுமில்லை. தந்தையைக்காத்தலே தங்கள் முக்கிய கடமை. போய் வாருங்கள்" என்று விடை கொடுத்தனுப்பி வைத்தாள். பாலனும் மறுநாட் காலையிற் புறப்பட்ட கப்பலிற் சைன்யத்துடன் தானும் பிரயாணமானான்.

கப்பல் அதிவிரைவாய்ப் போய்க்கொண்டிருக்கிறது. ராணுவ வீரர்கள் அங்கு மிங்கும் உற்சாகத்துடன் அலைந்து திரியலாயினர். அப்பொழுது அமரசிங் தற்செயலாய்ப் பால

ளைப் பார்த்துவிட்டான். முகம் வேறுபட்டது. இன்னது செய்வதென்றறியாது மயங்கினன். அன்டராஸ்புரத்திலிருந்து இங்கு எங்ஙனம் வரலானன் எனக் கருத்துட்கொண்டான். மேன்மாடிக்குப் போவான். பாலன் மேல் வரக்கண்டால் கீழிறங்குவான். கீழ் வரக்கண்டால் மேன்மாடி யடைவான். ஆகவே, பாலனும் அமரசிங்கும் ஒருவர்க்கொருவர் முகத்தில் விழித்துக்கொள்ள இஷ்டமற்று ஒருவர் மேல் மாடிக்குப்போனல், மற்றவர் கீழ் மாடியிலும், மற்றவர் கீழிறங்குகையில், இன்னொருவர் மேலே போவதாயுமிருந்து வந்தனர். இச் செய்கையைக் கப்பலிலுள்ளாரிற் சிலரும் கண்டு எக்காரணத்தினல் தங்கள் இளவரசர் ஓரிடமுமில்லாது இவ்விதம் அலைகின்றூர் என்ற விபரமறியாது விழித்தவர்களாகி ஒருவர்க்கொருவர் குசுகுசுவெனப் பேசிக்கொள்ள ஆரம்பித்தனர். இதற்குள் கப்பலும் பர்மாக்கரையை அடுத்துநின்றது.

வீரர்களனைவரும் இறங்கி ஓர் பெரிய மைதானத்திற் கூடாரங்களமைத்துக்கொண்டு அந்நியர் படையெழுச்சியைக் குறிப்பிக்கும் தங்கள் பேரிகையை முழக்கலாயினர். இவ்வொலி கேட்ட பர்மியரும் சோழர்களின் படை வந்து பாளையம் போட்டுவிட்டதென்றறிந்து அவர்களும் அவர்களுடன் போர் பொருதச் சித்தமாயிருப்பதை அவர்கட்குணர்த்தும் வண்ணம் தங்கள் பேரிகை முழக்கிப் பேரொலி செய்தனர்.

சோழபாண்டிச் சேனைகள் யாவும் அணிவகுக்கப்பட்டன. பாண்டிநாட்டு வீரர்களனைவரும் பாண்டி சோழர்கள் கையில் சிக்காமலிருந்த பொழுது யார் பாண்டிநாட்டுச் சைன்யங்கள் முழுமையும் நடத்திவந்தனரோ அன்னவர் கையில் விடுக்கப்பட்டது. அவர் யாரெனறூல், மல்யுத்தம், சிலம்பம்,

படைக்கலம், மாந்திரீகம், இன்னும் வைத்யம், கல்வி கேள்வி ஆகிய இவைகளில் மிகவும் சிறந்து நம் தென் இந்தியாவிற்கோர் திலகம் போன்று விளங்குபவர். மேலும் நானுவித பாஷையும் கற்றவர். சேரர்கட்கும் பாண்டியர்க்கும் நடந்த ஓர் கொடிய போரில் பாண்டியர்க்காகச் சென்று தமது திறமையைக்கொண்டே சேரரை அஞ்சி ஓடும்படி செய்தவர். ஆனது பற்றித் தான் அன்று முதல் பாண்டியிலேயே அரண்மனையில் தளகர்த்தப் பட்டத்தோடு மிகவும் செல்வமாய்க் கொண்டாடப்பட்டு வந்தார். முடிவாகச்சொல்லின் அவர் கலியுகத் துரோணுசாரியரென்றே சொல்லலாம். அவர்தான் தன் வேலையே தனதாயுதமாகக்கொண்டுள்ள மகா-ஶ-ஶ-ஸ்ரீ வேலாயுதம் பிள்ளை என்று சொல்லப்படுபவராவர்.

பாண்டிநாட்டுச் சேனை இவ்விதம் ஒப்புவிக்கப்படவே, சோழநாட்டு வீரர்களை மூன்று பிரிவாகப்பிரித்து ஒன்று பாண்டிநாட்டு வீரர்களின் தளகர்த்தாது பிரதம சீடரான கூளுப் பிள்ளை அவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டது. மற்றிரண்டில் ஒன்று ஜமேதார் ஆறுமுகத்தேவரிடமும் மற்றொன்று வீராச்சாமி நாயுடுகாரிடமும் ஒப்புவிக்கப்பட்டன. இந்நால்வருக்கும் மேலாகச் சோழநாட்டிளவரசனுகிய அமரசிங் தலைமைத் தளகர்த்தனுக இருந்து வந்தான்.

அன்று நடுநிசியில் போர் பொருத இருதிறத்தாரும் ஆயத்தமாயிருந்தனர். கூடாரங்களிலுள்ள சோழ பாண்டி வீரர்கள் யாவரும் போர்க்கோலங்கொண்டு சேனைத்தலைவர்கள் சமர் ஆரம்பிக்கத் தரும் அடையாளங்களுக்காக எதிர் நோக்கிய வண்ணமாய் இருந்து வந்தனர்.

அப்பொழுது பாலன் "யுத்தம் தொடங்கும் சமயம் நெருங்குகின்றது. பர்மியர்களோ மிகவும் கொடியர் எனக்

கேள்வியுற்றிருக்கின்றோம். போரிலும் புறங்காட்டா மன முடையார் என்றும் சொல்கின்றார்கள். என்ற போதிலும் சோழபாண்டி வீரர்களைப்போல் அவ்வளவு யூகமாகவும் சாமர்த்தியமாகவும் சண்டையிடார் என்பது திண்ணம். பிறர் சொல்வதைக் கவனித்தால் அவர்கள் முரடர்களென்றும் மூடர்களென்றுந் தெரிகிறது. எங்ஙனமிருப்பினும் ஒரு நாளும் நம் நாட்டாரை மேற்கொள்ளார். என்ற போதிலும், அவர்கள் ஜயிப்பினுந் தோல்வி யடையினும் என் தந்தையை யும் சர்மிஷ்டரையும் வதைசெய்யாது உயிருடன் ஒரு நாளும் நம்மிடம் ஒப்படைக்கப்போவதில்லை. இம்மூர்க்கர்கள் மறலி வம்ச பாரம்பரை என்று தான் சொல்லவேண்டியிருக்கின்ற தென்றெண்ணுகின்றேன். ஆதலால், சண்டை துவங்கின உடன் என் தந்தையும் சர்மிஷ்டருமிருக்கு மிடத்தைக்கண்டு பிடித்து அவர்களிருவரையும் ஒருவருக்குந் தெரியாது மறு ரைகொண்டு சேர்க்கவேண்டும்" என்று இவ்வாறு மனதில் நினைத்துக்கொண்டு மிக்க விசனமாயிருக்குஞ்சமயம் ஒருவன் திடீரெனப் பாலன் முன் தோன்றி,

"ஐயா! தங்களை நமது தளகர்த்தர் அழைத்துவரக் கட்டளை செய்திருக்கின்றார்" என்றுகூறினன்.

அதுகேட்ட பாலன் யாது செய்வதென்றறியாது "ஏன் நம்மை இந்நடுநிசிவேளையில் தளகர்த்தன் அழைக்கவேண்டும்? இதில் ஏதோ சூதிருக்கின்றது" என நினைந்து வந்தழைத்த வனிடம் 'போர் செய்யும் நேரம் கிட்டிவிட்டது. அதற்காகப் போருடை தரித்துக்கொண்டிருக்கின்றார். வர முடியாதென் றுஞ் சொல்கின்றார்' எனப் போயுரை" என்று அஞ்சா நெஞ் சத்தனயப் பதில் கூறி அவனை அனுப்பினன்.

சிறிதுநேரங் கழியவும் வந்த ஆளே பாலனை மறுபடியும் அணுகி "ஐயா! தங்களைத் தங்களது சிறிய தகப்பனாரும்,

தற்போது தளகர்த்தப்பட்டம் வகித்துள்ளவரும், சோழநாட்டிளவரசருமான, அமரசிங் மகாராஜா கொஞ்சமும் தாமதமின்றி உடனழைத்து வரச்சொன்னார்" என்றான்.

இளவரசனென்ற சொல் காதிற்படவே பாலன் சினந்து "அவர் எனது சிற்றப்பனாயிருப்பினும் சரி, தளகர்த்தராயினும் சரி, மற்றுமவர் சோழநாட்டிளவரசராயினும் சரி, எனக்கு அதனாலென்ன? இன்னுமவர் தேவருலகத்தையாளும் இந்திரனாயிருப்பினும் எனக்காவதென்ன? போர் முனையில் தளகர்த்தனும் மற்றெல்லா வீரர்களைப்போல்தானும் ஓர் வீரன் தானென்பதை மறந்து அவ்வளவு இறுமாப்புடன் தன்னை யானை என்றும், குதிரை என்றும் உயர்த்துகின்றாரோ? கொஞ்சமும் லட்சியமில்லை போ. வேண்டுமானால் என்னிடம் சொல்லவேண்டியதை என் சேனைத் தலைவருக்கறிவித்தால் அவர் மூலமாய் நான் அதன்படி நடக்க முடியும். இல்லையேல் 'தன் சேனைக்கர்த்தர் சமர் புரிய அடையாளந் தரும் வரை அவரனுமதியின்றிக் கூடாரத்தை விட்டு வெளிவர முடியாதென்கின்றார்' என்று போய்க் கண்டிப்பாய்ச் சொல்" என்று கொஞ்சமும் அந்தத் தளகர்த்தனை மதியாது விடை பகர்ந்து அவனை அனுப்பினான்.

இம் மறுமொழியைச் செவிதனிலேற்ற அமரசிங், யாது செய்வதென்றறியாது மதியிழந்து வெகு நேரம் ஆழ்ந்த சிந்தனைக் கடலிலமிழ்ந்தியபின் அதனின்றும் வெளிக்கிளம்பி 'இதுதான் வழி' எனத்தேறி, ஓர் கடுதாசி எடுத்து "எனதருமைப் பாலனுக்கு, என்னைப்பார்த்துப் போகும்படி யான் இருமுறை உன்னைக்கேட்டுக்கொண்டும், யான்உன் தந்தையின் பொருட்டும் உன் பொருட்டும் என்ன குற்றஞ் செய்திருப்பி

னும், உனது சிறிய தந்தை யென்றாவது சற்றும் மனதிற் கருதாது உன்னை வந்தழைத்த மனிதனிடம் மிகக்கொடுமை யான பதிலளித்து அனுப்பிவிட்டாய். இருந்த போதிலும் இதைப்பற்றி எனக்குச் சற்றும் வருத்தமில்லை."

"யான் உன்னிடம் அவசியமான சில தகவல் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதனைச்சொல்ல இப்பொழுது தான் எனக்குத் தருணம்; இது தவறினால் வேறு சமயம் கிட்டவே கிட்டாது. உன் சேனைத்தலைவருக்கும் உன்னை அனுப்பி வைக்கும்படி திட்டஞ்செய் திருக்கின்றேன். ஆதலால், பாலா! கொஞ்சமும் தாமதமின்றி வேறொன்றும் நினையாது அவசியம் என்னுடன் பெரிய மனது வைத்து ஐந்து நிமிஷம் கண்டு பேசிச்செல்ல உன்னை வெகுவாய்க் கேட்டுக்கொள்ளும்,

உனது கொடிய சிற்றப்பன்,"

என்று அதிலெழுதி தன் கையெழுத்தும் வைத்து மற்றொருவனிடம் முத்திரையுடன் அக்கடிதத்தை மடித்து ஒட்டிப் பாலனுக்குக் கொடுத்தனுப்பினான்.

கடிதம் கையிற் கொண்டுள்ளோன், அதிதீவிரமாகப் பாலனது கூடாரத்தை அடைந்து அக்கடிதத்தைப் பாலனது கையில் கொடுத்துப் பதிலை எதிர்பார்த்து நின்றான்.

கடிதத்தைப்பிரித்து அதன் சாரத்தையறிந்த பாலன் "என்ன இது! கனவோ அல்லது நனவோ தெரியவில்லையே! எனது கொடும் பகையோனாய அமரசிங்கா இவ்விதம் எழுதி அனுப்புவான்! இவ்வளவு தாழ்மையாக ஒரு நாளும் அவன் எழுதி யிருக்கவேமாட்டான் என்று நினைப்பினும் எனக்கு அவனைத்தவிர வேறொருவர் பகையுமில்லை. சரிதான். இப்பொழுது தான் அவனது கடிதமெனவும், அவனிட்ட கையெழுத்தெனவும் நன்கு புலப்படுகின்றது. இக்கையெழுத்தும்

முத்திரையும் இவன் அன்ட்ராஸ்புரத்துக் கள்ளர்கட்குப் பன்னீராயிரம் ரூபாவுக்கு எழுதிக்கொடுத்த கடிதத்திலிருந்த கையெழுத்துப் போன்றும், இம்முத்திரை அவ்விடத்திய கடிதத்தைக் கூட்டிலடைத்து இட்ட முத்திரை போன்றும் இருக்கின்றன. இதிற் சந்தேகமில்லை. ஆனால் சண்டை செய்ய வந்த இவன் எக்காரணத்தை முன்னிட்டு எனக்கிவ்வாறு எழுதியனுப்பி யிருக்கின்றானென்று விளங்கவில்லை. ஒரு வேளை என்னை மிகவும் ரகஸ்யமாய்க் கொலை செய்ய எண்ணுகின்றானோ? அல்லது நான் அவனது பகைவனானதால் அவன் சொல்லிற்கு நானிணங்கேனென்பதையறிந்து, ராணுவத்திற் கீழ்ப்படியாக் குற்றத்தை என் மேல் சுமத்தி ராணுவச்சட்டப்படி என்னைத் தொலைக்க வழி தேடுகின்றானோ, தெரியவில்லை. முதலிரண்டு முறை வந்தழைத்ததற்கு ராணுவவழக்கம்போல் நம் சேனைத்தலைவருக்கு அறிவிக்கும்படி செய்துவிட்டோம். அவர்களும் போய்விட்டனர். அதன்படியே இம்முறையோ தலைவருக்கும் அறிவித்து விட்டான். இனி 'வரேன்' என்று மறுத்தல் ஆபத்துக்கிடமான காரியம். மறுத்தால் வந்தது நமக்குக் கேடு. ஆனதால் இவனால் என்ன நேர்ந்த போதிலுஞ்சரி, திக்கற்ற எனக்குத் தெய்வம் துணை நிற்கும். போகலாம்" என ஒருவிதமாகத் தேறித் தன் வருகையைப் போய்த் தளகர்த்தனிடம் அறிவிக்குமாறு இவனை வந்தழைத்தவனிடம் விடை கூறி அனுப்பினான். தானும் போர்க்கோலத்துடனேயே அமரசிங் இருக்கையை நோக்கிச் சென்றானாயினும் கையில் ஒருவருக்குந் தெரியாமல் தன் கைத்துப்பாக்கியையும் துணையாக உடன்கொண்டு செல்வானாயினன்.

அமரசிங் பாலன் வருகையை எதிர்நோக்கிய வண்ணமாக இருந்தான். சிறிது நேரத்திற் பாலனும் அமரசிங் கூடாரத்தை யடைந்து ஆங்குள்ள அமரசிங் தளகர்த்தனுதல் பற்றி

அவனுக்குரிய மரியாதை ராணுவ வழக்கத்திற்கு மாறுகாம லளித்துப்பின் அமரசிங்கை நோக்கி "என்ன காரணத்திற் காக என்னை யழைத்தீர்?" என்று கேட்டான்.

"பாலா! சுகந்தானு?"

"எல்லாம் சுகந்தான். அழைத்த காரணத்தைத் தயவு செய்து விரைந்து சொல்லும். போர் தொடங்கும் சமயமிது வென்பதை மறந்துவிட்டீர் போலும்."

"பாலா! போரைப்பற்றி எனக்கு யாதொரு கவலையு மில்லை." என்று முதலில் உனக்குத்தெரிவித்துக்கொள்கிறேன்.

"உமக்குக் கவலையிருந்தாலென்ன, இல்லாவிட்டா லென்ன? எனக்கு ஒன்றுமில்லை. நான் போகவேண்டும். நீர் என்னை ஐந்து நிமிஷத்தில் அனுப்பிவிடுகின்றேனென்று எனக்கு எழுதி யனுப்பினீர். இப்பொழுதோ ஏறக்குறைய நிமிஷம் நாலாகின்றது. என்ன சொல்கின்றீர்?"

"பாலா! ஏன் இவ்விதமாகஅவசரப்படுகின்ருய்? சற்றுத் தயவுசெய்து இந்நாற்காலியிலுட்காரு. உன்னிடம் சில முக் கியமான ரகஸிய சங்கதிகள் சொல்கின்றேன்."

"'சொல்கின்றேன், சொல்கின்றேன்' என்று காலதாம தம் செய்யக்கூடாது. சடுதியில் முடித்து என்னை யனுப்பி வைக்கிறதாயிருந்தால் மட்டிலும் உட்காருவேன். அல்லது முடியாது. என்னசொல்லப்போகிறீர்கள்?"

"அதிசீக்கிரம் முடிக்கின்றேன். உட்காரு" என்று பால னது கையைப்பிடித்து அவ்விடமிருந்த ஓர் நாற்காலியிலிருக் கச்செய்து அவனை நோக்கிச்சொல்வான் அமரசிங்:

'பாலா! யானுன்னிடம் சகல சங்கதியுமறிவிக்கு முன்ன ரே, உனது மன்னிப்படைய ஆவலுள்ளவனுயிருக்கின்றேன்."

"எதற்காக?"

"யான் உன் தந்தையின் பொருட்டும் உன் பொருட்டும் இதுவரையும் செய்துவந்த தீங்குகளுக்காக."

"நீர் அவ்விதம் எங்களுக்கு ஒரு தீங்கு மிழைத்ததாக என்னால் தற்போது சொல்லமுடியாது. நீர் வீணில் கால தாமதம் செய்யவேண்டாம். தயவு செய்து என்னை அழைத்த காரியத்தை முடித்து எனக்குச் சீக்கிரம் விடை கொடுத் தனுப்பும், சமர் செய்யும் நேரம் கிட்டுகின்றது."

"பாலா! நான்செய்த கொடுமைக்கேட்டால் உனக்குப் படபடப்பு உண்டாகுந்தான். அப்படபடப்பைத் தணித்துக் கொள்வதற்காகத் தான் உன்னிடம் மன்னிப்பை முதலி லடைய வழி தேடினேன். பரவாயில்லை; கேள்.

"யான் யாரென்றும், உனது தந்தை யாரென்றும் நீ இதுவரை நன்கறிந்திருப்பாயென் றெண்ணுகின்றேன். நாங்க ளிருவரும் சோழநாட்டுச் சிங்காதனத்திற்குரியவர்கள். சோ ழர்கட்கும் பாண்டியர்கட்கும் முன்னொருநாள் நடந்த கொடும் போரில் எனது அண்ணாவாகிய உனதருந்தந்தை யான் எதிரி களுக்கு மத்தியில் அகப்பட்டது கண்டு யான் படும் அவஸ்தை சகியாதவராகி இரத்தக்கொதிப்பால் சண்டையையுங் கவனி யாது என்னுயிரைக்காத்தலே மிகப்பெரிதென மதித்து என் உயிரை மிகச்சமர்த்தாய்க் காத்தவர். அவ்வித நன்மையை யான் அவரிடமிருந்து அடைந்தும், அந்நன்றி மறந்தவனாகி, யான் பட்டத்தைக் கைக்கொள்ள எண்ணி அண்ணா போரில் புறங்காட்டி யோடினதாக அவர் மேல் பொய்க்குற்றம் ஒன்று பிறப்பித்து அதனை ருசுப்படுத்த யானும் எனது வேலைக்கார னான பாப்ஜானும் அண்ணாவிற்கு நேர் விரோதமாகச் சாட்சி சொன்னோம். நிற்க, குலோத்துங்கனென்பவரையும் அண்ணா

தளகர்த்தன் முன்னிலையில் அவர் பக்கத்திலோர் சாட்சிஎன்று சொன்னார்கள். அக்குலோத்துங்கர் அகப்படவேயில்லை.”

“அவர் எங்குச் சென்றிருந்தார்?”

“பாலா! அவரோ அண்ணாவின் ஆப்த நண்பர். அவரை யானணுகி என் பக்கம் சாட்சி சொல்லும்படி வெகுவாய் வேண்டியும், அவர் தான் ஒரு நாளும் பொய் சொல்லேனென்று சாதனை பண்ணினார். அதுகண்ட யான் யாமெடுத்துள்ள முயற்சி வீணாவதுடன் என் பெயரும் யாவராலு மிகழப்படுமெனப்பயந்து மிக ரகஸ்யமாய் ஓர் நாள் நள்ளிரவில் எனது விடுதிக்கழைத்து......என்ன சொல்லுவேன் பாலா! மிகவும் நல்லவரவர். தீவினையால் ஏவப்பட்டேன். மதியிழந்தேன். இன்னது தான் செய்வதென்றறியாது மோசம்போய் நன்றி மறந்த பாதகனாகி மாசற்ற அவரை...”

“என்ன செய்தீர்கள்?”

“என்ன செய்தேன்? அவரை, ஐயோ!, சொல்வதே பாபம்! உயிர் வதைசெய்வித்தேன்.”

“ஐயோ! என்ன அநியாயம்! அம்மாசற்றவரையா உயிர் வதை செய்வித்தீர்கள்? பின்னர்?”

“அதன் பின் உன் தந்தையே குற்றவாளி யென நிரூபித்து, அவர் என் பால் செய்துள்ள நன்றியை முற்றிலும் மறந்து ஊரைவிட்டுத் துரத்தும்படி செய்தேன். அத்தோடு விட்டேனா? அவர் உயிருடனிருக்கும் வரை எனக்கு ஒரு நாள் இடையூறு நினையா நேரத்தில் வருமெனக்கருதி அவர் இருக்கும் இடங்களை யெல்லாம் இரகசிய உளவர்களாலுணர்ந்து அவரைக் கொலை புரிய நினைத்தேன். அதன்படியே

யானுங்களிருவரையும் எங்கெங்குச் சந்தித்தேனென நீயே அறிவாய். யான் அவ்வித எண்ணத்துடன் வந்தவனென அண்ணு அறிந்தும் என்னைக்கொல்ல மனம் வராது கானில் என்னை வெட்டவந்த உன்னையும் தடுத்து என்னை மன்னித்து அனுப்பிவிட்டார். அத்தோடு நிறுத்தினேனு? சபை கூடுமிடத்திற்கு வந்து ஆர்ப்பரித்து ஓடிவர, உன் கையிற்சிக்கி, நீ என்னை மறுமுறையாக மன்னித்ததையுமறிவாய். இத்தோடு என் எண்ணத்தை மாற்றினேனு? மென்மேலும் கொடூரத்தைக் கைக்கொண்டு அன்ட்ராஸ்புரம் வந்து உங்களிருவரையும் வதைக்க வழி தேடினேன். அங்கும் என்னைக் கள்ளர்கள் கையினின்றும் தப்புவித்தாய் நீ. அதனையுணர்ந்த எனக்கு அன்று முதல் உன்னைக்கண்டு என் நெஞ்சகத்தில் நிறைந்திருக்கும் வஞ்சகத்தை உனக்குத் தெளிவாயுரைத்து உன்னிடமும் அண்ணுவிடமும் மன்னிப்படைந்து அண்ணுவிற்கே பட்டத்தை நல்கி யானும் சஞ்சலமற்ற மனத்தோடு காலங் கழிக்கலாமென எண்ணிக்கொண்டிருந்தேன். நல்ல வேளையாய் உன்னைக் கப்பலிற் சந்தித்தேன். நல்ல மனத்துடன் உன்னைக்காண யான் நினைத்தும், யான் புரிந்துள்ள எனது கொடுஞ்செயல்கள் என்னை உன்னிடம் அணுகவொட்டாது வழி மறித்து நின்றன. மேலும் கப்பலில் தனித்துப் பேசமுடியாதென்று கண்டு, சமயம் வாய்த்தபோது இவ்விடத்திற் பேசிக்கொள்ளலாமென நினைத்தேன்.''

"என்னருமை பாலா! யான் இனிமேல் உயிர் வைத்திருக்கமாட்டேன். இன்று நடக்கும் சண்டையில் நிச்சயமாய் யான் உயிர் துறக்க நேரிடும். ஒருவர் கையிலும் சிக்காவிட்டாலும் யானவேறு என்னுயிரைப் போக்கிக்கொள்வேனன்றி இப்பூமண்டலத்தில் இனி யானுயிர் தரித்து வாழப்போவதில்லை. நான் தொலையவேண்டியதுதான்; இது திண்ணம்."

"ஆகையால் தயவுசெய்து நீ எனக்காக ஓர் காரியம் செய்யவேண்டும். அதாவது இதோ இந்தக் கடிதத்தில் ஆதியோடந்தமாய் யானுனது பிரிய தந்தையின் பொருட்டும் உன் பொருட்டும் செய்துள்ள குற்றங்களனைத்தையும் தெளிவாயெழுதி அதின் கடைசியில் இந்தப்பாவியாகிய யானே குற்றவாளி என்றும், அண்ணு நிரபராதி என்றும் எழுதிக் கையொப்பமும் வைத்திருக்கின்றேன். இதனை, யான் போரில் இறக்கவும் என் சவத்திற்கு முன்னிலையினின்று சகல வீரர்களும் அறியும் வண்ணம் முதலில் இவ்விடத்திலேயே வாசித்துப்பின்னர் நாடடைந்து அரசர் முன்னிலும், சகல பிரஜைகள் நேரிலும் வாசித்து அவர்களுக்கு அவசியம் என் குற்றங்களை எடுத்துக் காட்டவேண்டும். நிற்க, மனமிரங்கி, என் சவத்தைஇந்நாட்டிலேயே காக்கை கழுகுகளுக்கு இரையாக்கிவிடாது. சோழநாட்டிற்கே எடுத்துப்போய் அங்கும் எனது சகோதர துரோகத்தை எடுத்தோதித் தகனஞ்செய்யுமாறு கேட்டுக்கொள்கின்றேன்." என்று சொல்லிமுடித்தான்.

இதுவரை மிக்கக்கவனமாய் 'அமரசிங் இன்னும் தன்னை வஞ்சிக்கக்கருதி இவ்விதம் புகன்று வருகின்றானோ அல்லது உண்மையாகவே அவனது மனச்சாட்சியின் முன்னிற்க மாட்டாது தன் கபடையெல்லாமெடுத்து வெளியிடுகின்றானோ?' என ஐயுற்று நின்ற பாலன், 'அகத்தின் எண்ணம் முகத்திற்றோன்றும்' என்பதற்கிணங்க அமரசிங் உண்மையிற்றான் உரைத்து வருகின்றானென அவனது முகக்குறியாலுணர்ந்து தன் கைத்துப்பாக்கியைத் தன் காற் சட்டைச்சேபிற் போட்டுக்கொண்டு, அப்பொழுது தான் அமரசிங்கின் மீது ஒருவாறு மனமிளகி அவனும் ஓர் தந்தை யெனக் கருத்துட்கொண்டிருந்த பாசத்துடன் "அப்பா! தாங்களிவ்விதம் உள்ளதுரைத்தீர்களே அதுவே போதும். தாங்கள் உயிர்

துறக்கவே வேண்டாம். அப்பாவுக்கும் ராஜ்யமினி அவசிய மில்லை. எங்களுடைய மனத்திற்காவது திருப்தியாயிற்றே! யான் கடவுள் சாட்சியாக ஒருவரிடமும் இச்சங்கதிகளை அறிவி யேன். நம்புங்கள்" என்று சொல்லிய பாலன் அளவில்லாச் சோகக்கடலிலாழ்ந்து அமரசிங்கின் மீது வீழ்ந்து அலறினன்.

"பாலா! நீயேன் வருந்தல் வேண்டும்? நீ என்னைக் கொன்று என் உதிரத்தைப் பருகினுலும் எனக்குத்தகுமே. அங்ஙனமிருக்க இப்பாவியின் மீதா இரங்குகின்றாய்?

"யானுங்களிருவருக்கும் இழைத்த தீங்கெல்லாம் ஒரு பொருட்படுத்தாது, என்னை அந்தந்த நேரங்களில் மன்னித்து அனுப்பி வைத்தீர்களே! அத்தகைய செய்கை தான் என்னை மிகவும் வாட்டுகின்றது. என்னை அச்சமயங்களில் சிட்சித்தி ருப்பினும் அது எனக்குத் தண்டனையாகாது. அவ்விதம் அபகாரத்தை இச்சித்துவந்த எனக்கு உபகாரமே செய்து செய்து என்னை அனுப்பிவைத்தது தான், யான் தாங்கமுடியா சிட்சையாயிருக்கிறது. எங்ஙனம் ஓர் பாத்திரத்தில் மழைத் துளி விழுந்து நிறைந்தவுடன் மேலெழும்பிக் கீழ் வடிகின்ற தோ அதுபோல என் இதயமாகிய பாண்டத்தில் யான் செய் துள்ள கொடுஞ் செயல்கள் மழைத்துளி போல விழுந்து ஏற் கனவே நிறைந்திருந்தது. ஆனல் இறுதியாய் நீ என்னை க்ஷமித்து மறுபடியும் என் உயிரைக்கவராது அனுப்பியவுடன், என் இதயத்திலிருந்து என் குற்றமெல்லாம் வழிந்து அங்கு மிங்கும் ஓட ஆரம்பிக்கவே, என் உடலெங்கும் நானுவித அஸ்திரங்கள் போய்ப் பாய்ந்துகொண்டிருக்கின்றன போலி ருந்து வருகின்றது. அவைகளின் வேதனையைத் தடுக்க இனி வஞ்சக நெஞ்சங்கொண்டுள்ள என்னல் முடியவே முடியாது. அவ்வேதனையை மாற்றும் வைத்தியன் இன்று இரவு என்னு

யிரைக்கவர்ந்து செல்லும் எருமை யூர்தியாகிய ஏமனே யாவன். இக்காரணத்தால், பாலா! அண்ணுவின் மன்னிப்பை அடைய யான் பிரயாசைப்பட்டாலும், தற்போது அண்ணு விருக்குமிடமோ எனக்குத்தெரியாது; நிற்க, அவரைக் காண வும் அவர் முகத்திற்கு எதிராய் முன்னால் என்னால் நிற்கக் கூடாது போம். ஆதலால் முதலில் நீயே என்னை மன்னிக்க வேண்டும். பின்னர் யானுன்னிடம் உரை செய்துள்ள அனைத் தையும் நீயே அண்ணுவிற் கறைந்து அவரிடமிருந்து என் பொருட்டாக மன்னிப்பையும் அடைந்துகொள்."

"இருக்கட்டும்; அப்பா! இங்கு எதற்காக நாம் கூடாரங் கள் அடித்திருக்கின்றோமெனத் தங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும் பாலா. சோழநாட்டாரிருவரைக் காத்தற் பொருட்டும், இந்நாட்டு மூடர்களுக்கு நம் சோழர்களின் வீரத்தைக்காண்பித்து அறிவுறுத்தும் வண்ணமுமே."

"இங்குள்ள இருவரும் யாரென்று அறிவீர்களா?"

"அறியேன்; அவர்கள் யாவர் பாலா?"

"என்ன சொல்லுவேன். தங்களுக்குத் தெரிந்துள்ளவர் களே இவ்விருவர்களும்." என்று பாலன் கண்ணீருகுத்தான்.

"பாலா! வீணில் அழவேண்டாம். அவர்களை யாரென்று எனக்குத் தெளிவாய்ச்சொல். அத்துடன் அவர்கள் இங்கு வர நேரிட்டகாரணத்தையும் சொல்வாய்."

"யான் அப்பாவைச் சோணாட்டிற்கு அன்டாாஸ்புரத்தி லிருந்து என்னுடன்வரும்படி அழைத்ததற்கு, அவர்கள் தான் நிரபராதி என்றும், தாங்களே குற்றவாளியென்றும் தங்கள் கைப்பட ஓர் லிகிதம் யான் கொண்டு அவர்களுக்குக் காண் பித்தால் பட்டிலுந்தான் அவர்கள் நம் நாட்டெல்லையை அடை

யக்கூடுமென்றும் அல்லது ஒரு நாளும் முடியாதென்றும், அதுவரையும் தான் பர்மாவிற்கு வியாபாரத்தின்பொருட்டுத் தன் மித்திரர் சர்மிஷ்டருடன் செல்வதாய்ச்சொல்லிப் புறப் பட்டார்கள். அவ்விருவர்கள் தான் இவர்கள். இங்கிருந்து சோழநாட்டிற்கு ஓடிவந்து சங்கதி யறிவித்தவர் தான் சர் மிஷ்டருடைய மாமனர் மங்களம் பிள்ளை யாவர்."

இதனைக்கேட்ட அமரசிங் "ஆ! அண்ணாவும், அவரு டைய நண்பருமா அகப்பட்டுக்கொண்டிருக்கின்றார்கள்?" என்று கர்ஜனை செய்து திடீரென மூர்ச்சித்தான்.

"ஆ! தெய்வமே! இதென்ன சோதனையாகி இருக்கின் றது! போர் தொடக்கும் நேரம் நெருங்கி விட்டதே! பர்மானி யர் எப்பொழுது யுத்தத்தை ஆரம்பிக்கின்றார்களோவெனத் தெரியவில்லையே! அவ்விதமிருக்க இவர் மூர்ச்சித்தனரே!" என்று மயங்கிய பாலன் மிக்கக் கவலையுடனும் எச்சரிக்கை யுடனும் தன் சிறிய தந்தைக்கு வேண்டிய சிகிச்சை செய்த னன். அதன்பின்னர் மூர்ச்சைதெளிந்து அமரசிங்எழுந்தான்.

எழுந்துட்கார்ந்த அமரசிங் சித்த சுவாதீனத்தை யடைந் தவன் போல் காணப்படும் சமயம் சண்டை தொடங்குதற்கு வேண்டிய அடையாளங்கள் தென்பட்டன.

அதுகண்ட அமரசிங், "பாலா! உன்னிடம் அதிமுக்கிய மான விஷயங்கள் பல சொல்லவேண்டியிருப்பினும் இப்பொ ழுதோ நேரமில்லை; யுத்தத்திற்கு வேண்டிய அடையாளங்க ளும் தென்படுகின்றன. நிச்சயமாய் ஜயம் நமக்கே யாகும். இதனைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டாம். சண்டையில் பர் மியரை நாம் புறங்காணும் சமயம் அண்ணாவையும் அவர் மித் திரரையும் தேடிச்சென்று அவர்களிருவரையும் எதிரிகளிடம் சிக்கிக்கொள்ள விடாது எவ்விதத்திலும் நம் ஜாகைக்குக்

கொண்டு வரவேண்டியது. ஏனென்றால் தோல்வி அடைந்ததுவுடன் மிகவும் ஆக்கிரோஷங்கொண்டு பர்மியர் தம் கைதிகளைத்தான் முதலில் பைசல் பண்ண எண்ணுவார்கள். இதனை மறந்துவிடவேண்டாம். இப்பொழுது தான் என் மனம் சமாதான நிலை அடைகிறுப்போலிருக்கின்றது. அவ்வாறடைதற்குக்காரணம் எவ்வளவு குற்றம் யான் அண்ணுவிற்குச் செய்திருப்பினும், பலவிதத்தினுங் கொடியோனுகிய யான், 'அண்ணு முன் பகைவர்களுக்கு மத்தியில் என்னுயிரைக் காத்ததுபோல, இன்று யான் அண்ணுவினுயிரைக் காக்கப் போகின்றேன்' என்று நினைக்கும் நினைவினுற்ருன். நிற்க, இன்னும் ஒரே ஒரு சங்கதி தான். அதாவது, பாலா! எனக்கு இந்நாள் பரியந்தம் விவாகமில்லையென்பதை நீயே யறிவை. யான் காலஞ்சென்ற என்னருந்தங்கை ருக்மணியின் புத்திரியாகிய கனகையே புத்திரிபோற் பாவித்துக் காத்து வருகின்றேன். அவள் மிகவும் எழில் நலம் படைத்தவள். உனக்கும் முறைப்பெண். மேலும் உனக்குமவளுக்கும் காதல் உண்டென்பதையுமறிவேன் யான். ஆதலால், நீ எனக்குப் பின் ஊரடைந்து அன்னவளை உனக்குப் பாரியாக வரித்துக்கொள். இன்னென்று மறந்தேன்; மனோன்மணி எங்கே, பாலா?"

"மனோன்மணியைத் தூத்துக்குடியில் ஆங்கோர் தக்க பாதுகாவலில் விடுத்து வந்திருக்கின்றேன்."

"சரி. நமக்கும் சேரபாண்டியற்கும் வெகுநாள் ஒற்றுமையின்றி இருந்து வந்தது. தற்போது பாண்டியும் நம் நாடும் ஒன்றுகிவிட்டன. இன்னும் பழம் பகைகொண்டிருப்பது சேரநாடே யாகும். இப்பொழுது நீ நம் மனோன்மணியை ஆங்குள்ள விசித்ர வீர்யனுகிய இளவரசனுக்குத் தானம் பண்ணுவையாகில் இம்மூன்று நாடுகளும் ஒரே நாடாகிச்

செழித்தோங்குவதுடன் பேரும் புகழும் படைத்ததாய்க் காணப்படும். வர்மன் மிகவும் கல்வித்திறமும், அஸ்திர சஸ்திரப் பயிற்சியும் ஒருங்கே அமையப்பெற்றவனென்றுந் தெரிகின்றது. யான் சொன்னபடி நடப்பாயா பாலா?"

"எந்தையே தங்கள் சொற்களை என சிரமேற்கொண்டு நடக்கச் சித்தமாயிருக்கின்றேன்." என்று பாலன் அமரசிங்கிற்குப் பதிலளித்துக்கொண்டிருக்கும் பொழுது சில வீரர்கள் ஓடோடியும் வந்து, "ஐயனே! பர்மியர்கள் நம் கூடாரத்தை வளைத்துக்கொண்டார்கள்" என்று ஓலமிட்டனர்.

அதனைக்கேட்ட அமரசிங், "அஞ்சன்மின! வீரர்காள்! தென்கோடியிலுள்ள திரிகளைத்தம் சைன்யத்துடன் சென்று தாக்கப் பாண்டித் தளகர்த்தரான வேலாயுதம் பிள்ளை யவர்களுக்குச் சொல்லுங்கள். மற்ற மூவராகிய ஜமேதார் கூளுப்பிள்ளை, வீராசாமி நாயுடுகார், ஆறுமுகத்தேவர், இவர்களைத் தத்தம் சைன்யங்களுடன் முறையே கிழக்கிலும், வடக்கிலும், மேற்கிலும் போய் யுத்தஞ்செய்யச் சொல்லுங்கள். எதிரிகள் இவர்களை வென்று இவ்விடம் வருவார்களாயின், நம் கொடிப் படையுடன் நானே வெளிச்செல்கின்றேன்" என்று வந்த வீரர்களிடம் உரை செய்துகொண்டிருக்குந் தருணம், வீரர் பலரும் அமரசிங் இருக்கையை நாடிவந்து அவர் உத்திரவை எதிர்பார்த்துக் கொண்டு நின்றனர்.

அக்ஷணம் அத்தகைய வீரர்களை நோக்கிப் "பலமுள்ள வீரசிங்கங்களே! மிகவும் வீரமாகச் சண்டையிடுங்கள். முன் வைத்த காலைப் பின் வையாதேயுங்கள். சண்டையிற் சாவோர் சடுதியில் மோக்ஷமடைவார். இற்றை வரை அந்நியர்க்குப் புறங்காட்டி யோடினவர்களல்லர் நம் சோழபாண்டியர். ஆனதால் அம்மகிமைக்கு ஓர் பங்கமும் ஏற்படாது உயிரைத் திர

ணமாய் மதித்துப் போர் பொருதுங்கள். நம் சேனைக்கு முன்னர் பர்மியர் ஓர் சிறு துரும்புக்கு நிகராவர். அவர்களை இமைப்பொழுதில் வென்று விடலாம். ஒவ்வொருவரும் உயிரிருக்கும் வரையிற் சண்டையிடுங்கள். சண்டையில் தோற்று இச்செய்தியை நம் அரசர்க்கறிவிப்பதிலும், இந்த ரணகளத்திலேயே மடிவது சிலாக்கியத்திலும் சிலாக்கியம். நம் வீரர்கள் ஒரு நாளும் தோல்வி யடையார்கள்."

"நம் அம்புகளுக்குத் தப்பினவர்களும் உண்டோ? அல்லது நம் வேலாயுதம் பிள்ளையவர்களின் ஆயுதங்களுக்கு இரையாகாது ஓடினவர்களும், இன்னும் பீமசேனனை நிகர்த்த கூருப்பிள்ளை கையிற் சிக்காது தப்பினவர்களும் உண்டோ? அல்லது நம் வீராச்சாமி நாயுடுகாரின் சூழ்ச்சிக்கும் வலுவிற்கும், ஆறுமுகத்தேவரின் புத்தி நுட்பத்திற்கும் சேனையை நடத்தும் ஆற்றலுக்கும் அடங்காதுபோன எதிரிகள் தானுண்டோ? கிடையாது. நிற்க, நியாயத்தைக் கோரிவந்த நமக்கு அநியாயமாகிட்டும்? ஒருபோதும் கிட்டாது. ஈசன் நியாயத்திற்கே துணை நிற்பர். தைரியத்தைக் கைவிட வேண்டாம். ஓடி, நான் சொல்லும் வண்ணம் மாற்றாரைத் தாக்குங்கள். ஜயம் பெறுவீராக!" என்று சேனைக்குத் தைரியங்கூறி வாழ்த்திப் பின்னர் பாலனைப்பார்த்து, "பாலா! வேண்டிய ஆயுதங்களை எடுத்துக்கொள். குதிரையையும் கொண்டு கொடிப்படையுடன் பாவட்டா சகிதமாய் வந்து சேர். நீ மட்டிலும் சண்டை முடிவுறவும் எனது அறையை நன்கு சோதித்து நகர் செல்வாய். அண்ணாவை மறந்துவிடாதே. யான் என் பொருட்டுனக்கோதியதையும் மறந்துவிட வேண்டாம். இதோ இக்கடிதத்தைப் பத்திரப்படுத்திக்கொள்.' என்று சொல்லிக் கடிதத்தைப் பாலன் கையிற்கொடுத்துத் தன் சேனையுடன் யுத்த சன்னத்தனாய்க் கூடாரத்தை விட்டுப் புறப்பட்டான்.

இரவு மணியோ பன்னிரண்டு. இந்தயுத்தத்தைக்கண்டு களிப்பெய்த எண்ணங்கொண்டது போல் கலைமதி நக்ஷத்திரங்களாகிய தன் நாயகியர்க்கு நடுவில் விழித்த கண் மூடாமல் நின்று பிரகாசிக்கலானான். பர்மியரும், சோழபாண்டிய வீரரும் நெருங்கிப் போர் செய்ய ஆரம்பித்தனர். பாண்டித்தளகர்த்தர் வேலாயுதம் பிள்ளையின் கீழுள்ள சைன்யத்தை எதிரிகளின் ஒரு வகுப்பார் நெருங்கினார்கள். இருதிறத்தாரும் கொடூரமான போர் புரிந்தனரெனினும் யுத்தமுறையை முற்றுமறிந்த பாண்டித்தளகர்த்தரின் சேனைக்கு விரோதிகள் மதகரியை எதிர்க்கும் மசகத்துக்கு நிகராக நின்றனர். பாண்டி வீரர்கள் கைப்பிடித்திருந்த வாளுக்கிரையானவர் சிலர், பிச்சுவாவென்னும் கருவியின் வாயிலகப்பட்டோர் சிலர், சுருள் பட்டாவிற்கும் கோப்பட்டாவிற்கும் இலக்கானவர் சிலரானர். மீந்திருந்த எதிரிகள் திரும்பிப்பாராது செத்தோம் பிழைத்தோம் என்று புறங்காட்டியோடி ஒழிந்தனர்.

இது இவ்வாறிருக்க மழுப்படையாட்களாய கூளுப் பிள்ளையின் சேனையோ எதிர்ப்பட்டவர்களையெல்லாம் அதாகதமும், கண்டவர்களைக் கண்டதுண்டமுஞ்செய்து நிற்க, மற்றிரு ஜமேதார்களுக்கடங்கியுள்ள விறல் வீரர்கள் எதிரிகளை வீச்சுக்காயிரமாக வெட்டி எறிந்தனர். உடனே மாற்றார் சைன்யம் தமது நிலைகுலையத் தலைப்பட்டது.

அதுகண்ட பர்மியர் தலைவன் உக்கிராவேசங்கொண்டு துணைச்சேனையொன்று கொணர்ந்து யுத்தத்தை மறுபடியும் தொடங்கினான். இரண்டு சைன்யங்களும் கடலும் கடலும் பொருதினாற்போல் கண்களில் நெருப்புப்பொறி சிந்த வெகுண்டு, சூலங்கள், மழுக்கள், பிண்டிபாலாக்கள் வாளாயுதங்கள், தண்டாயுதங்கள், வேலாயுதங்கள் முதலிய ஆயுதங்களை எறிந்து ஊழிகாலத்துக் கடல் போல வீரர்கள் கர்ச்

சித்து எறிவனவும் செலுத்துவனவும் பிரயோகிப்பனவுமாய படைக்கலங்களை உபயோகிக்கப் படைகள் சில இரத்தத்தில் மூழ்கி வெளிப்பட்டன. சில தப்பியோடின. மேகம் போலாகக்காணவந்த தேவர்களின் வாகனங்களாய அன்னமும் கருடனும் பறந்தோடின. சிலர் வாகனங்கள் ஆயுதங்களாலழிந்தன. பர்மியரோ வெறிகொண்டு போர் புரிந்தனர். பாலனோ அமரசிங்கின் மீது மாற்றான் கைபடாது ஓர் பம்பரம் போல எதிரிகளைச் சின்னபின்னப்படுத்திக்கொண்டு நின்றான். அமரசிங் அஞ்சாநெஞ்சத்துடன் எதிரிகளுக்கிடையிற் சென்று ஓர் சிம்மம் போல ஆரவாரித்து மிக்க ஆர்ப்பாட்டத்துடன் சண்டை செய்வானாயினன். பாண்டித்தளகர்த்தரான வேலாயுதம் பிள்ளையோ கலியுகத் துராணுசாரியாரோ என்று கண்டவர் கருதும்படி அவ்வளவு வல்லமையுடன் சமர் புரிந்தார். மற்றைய மூன்று சேனாதிபதிகளுள், ஜமேதார் கூளப்பிள்ளையோ, ‘வில்லில் விஜயனே’ என்று கருதும்படிக்கும், ஜமேதார் வீரச்சாமி நாயுடுகார் ‘வல்லமையிற் கடோற் கஜனே இவர் என்று அதிசயிக்கும் வண்ணமும், ஜமேதார் ஆறுமுகத்தேவர் ‘மாயவேலைகள் செய்யும் துரோபதை சகாயனும் வீலைகள் நிறையப்பெற்ற கண்ணனே’ என்று ஐயுறும்படிக்கும் அவ்வளவு மேன்மையாகத் தங்கள் தங்கள் முழுப்பலத்தையுங்கொண்டு பகைவர்களை அதஞ்செய்யத் தலைப்படவே, எதிரிகள் சற்றுமிரண்டு சிறுகச்சிறுகப் பின்னடைந்தனர்.

அந்தச் சமயத்தில் பாலன், தன்னருகிலேயே நின்று சண்டை செய்துகொண்டிருந்த அமரசிங்கை நோக்கினன். காணக்கூடவில்லை. “ஐயோ! இவ்வளவு நேரம் அவரை அக்கம் பக்கம் விடாமல் அவருடனேயே நின்று அவர் மீதும் ஓர் கண் வைத்துச் சமர் புரியலானேனே. இப்பொழுதோ திடீரென்று மறைந்தனரே. எங்குச் சென்றிருப்பார்? நாலா பக்

கத்திலுங் காணக்கூடவில்லையே. 'இன்று தப்பாமல் யான் மரிக்க நேரிடுமென்றும்,' இல்லையேல் தானாகவே உயிரைப் போக்கிக்கொள்வதாகவும் என்னிடம் அறைந்தனரே. அது போல ஒரு வேளை நடந்துவிட்டதோ? அறியேனே. ஈசா! என் செய்வேன்! எதிரிகள் அதிகமாகப் பின்னிடைகின்றனர் அதிக பயமாகவிருக்கின்றதே. என் தந்தையை என்ன செய்யக்காத்திருக்கின்றார்களோ தெரியவில்லை. என் தந்தையைக் காத்தலே என் மேலுள்ள முதற்கடமை யாதலால், இனிப் போரின் முடிவு யாதானபோதிலுஞ் சரி, விடிகிறதற்குள் என் எந்தையைக் காணவேண்டும்' என்று எண்ணித் தன் குதிரையைப் போர்க்களத்தினின்றும் விலக்கி வெகு விரைவாய்ப் பட்டணத்திற்குள் நுழையலானான்.

நுழையும் அத்தருணம் ஒருவன் திடீரெனப் பாலன் குதிரையின் கடிவாளத்தைப்பிடித்து வெகு தைரியமாய் நிறுத்தவே, பாலன் திடுக்கிட்டுத் துப்பாக்கியை வெளியிலெடுத்து "விடுகின்றையா? என்ன?" என மிகுகோபத்துடன் கேட்கவே, "யாவும் பின்னர் பேசிக்கொள்ளலாம். உம் தந்தையிருக்குமிடத்தை யானறிவேன். என் பின் விடும் குதிரையை வேகமாய்" என்று சொல்லி அவ்விளைஞனும் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த மற்றோர் குதிரையின் மீதேறிக்கொண்டு அதைத் தட்டினான். வெகு வேகமாய் ஓடிச் சிறிது நேரத்தில் இருவரும் ஓர் மலையடிவாரத்தில் நின்றனர்.

நிற்கவே, எதிரிகளின் ஓர் கூட்டத்தார் இவ்விருவரையும் பின் தொடர்ந்து ஓடி வந்தனர். பாலனும் பையனும் குதிரைகளை அவ்வடிவாரத்திலேயே விட்டு விட்டு மலையின் மீது ஓடித்தப்ப வழி தேடினர். அதற்கிணங்கவே, 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும்' என்ற ஆன்றோர் வாக்கின் பிரகாரம் இவர்கள் கொஞ்ச தூரம் ஓடவும்

இவர்களை மறித்துக்கொள்வது போல ஓர் பெரிய பள்ளத்தாக்கையும், அதன் கீழே வேகமுள்ள ஆறொன்று ஓடிக்கொண்டிருப்பதையும் கண்டு திகைத்து நிற்பாராயினர். அச்சமயம் தற்செயலாய் பெரிய விருக்ஷமொன்று இவர்கள் நின்றுகொண்டிருக்கும் மலைக்கும் இவர்கள் முன் தோன்றும் மலைக்கும் ஓர் பாலம் போலப் புயற்காற்றினால் கீழே விழுந்து கிடக்கக்கண்ட இவர்கள் அளவற்ற ஆனந்தங்கொண்டு அம்மரத்தின் மீதேறி அப்பள்ளத்தாக்கைக் கடந்தனர்.

இவர்களிருவரும் புகுந்த அந்த க்ஷணத்திலேயே பர்மிய வீரர்களும் அதன் வழியாகவே அப்பள்ளத்தாக்கைக் கடக்க யத்தனித்துப் பாதி மரம் வரையில் வந்தார்கள். வரவும், பாலனும் பையனும் அம்மரத்தின் கொப்புகளைப் பலமாய் ஆட்டவே பர்மியர் கீழே ஓடிக்கொண்டிருந்த நதியில் வீழ்ந்தனர். அதன் பின் இருவரும் பர்மியர் சிறையை நாடிச்சென்று, அங்குக் காவலிலிருந்த இருவீரர்களை எதிர்த்துச்சுடவே, அவ்விருவரும் மாண்டனர். ஜயிலின் மேன்மாடியின் மீது தான் தன் தந்தை அடைபட்டிருக்க வேண்டுமென ஊகித்துப் பாலனும் பையனும் விரைந்து மாடியை அடைந்தனர். அடையவே, அவ்விடம் காவலாய் நின்ற இருவர் திடீரென்று ஒரு ருக்ஷத்தைத் தட்டினர். உடனே நம் இருவீரர்களும் கீழறைக்குக் கொண்டுவரப்பட்டார்கள். ஆங்கு இருவரும் நின்று ‘என்ன! மோசமாயிருக்கின்றதே! அகப்பட்டுக்கொண்டோமே!” என்று விழித்துக்கொண்டிருக்கையில் நினையாநேரத்தில் மற்றோர் அறையிலிருந்து பர்மியர் மாய்கையால் ஓர் சிங்கம் உக்கிரமாகப் பாலன் மீது பாய்ந்தது. அச்சமயம் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த பால்யனாய தேசிங்கு தன் கைத்துப்பாக்கியால் சிங்கத்தின் வர்மஸ்தானத்திற் சுடவே, சிங்கம் வீழ்ந்திறந்தது. அதன் பின் இருவரும் அவ்வறையை

விட்டுத் தப்பியோட வழி தேடிக்கொண்டிருக்கும் சமயம் இவ்விருவர்கள் நின்றுகொண்டிருந்த பலகைகள் இழுபட்டதாகத்தோன்ற, அந்த க்ஷணமே அவர்கள் கீழுள்ள அறையொன்றில் விழுவாராயினர். விழவுமே பர்மியர் ஆங்குள்ள மற்றோர் விசையைத் தட்டினர். அத்தருணம் மேலறையிலிருந்து இவ்விருவர்களையும் மணல்மாரி பொழிந்து மூடலானது. பாலனும் தேசிங்கும் ஒருவர்க்கொருவர் எவ்வளவோ உதவி செய்துகொண்டு நின்றும், விழுந்து இவர்களை மூடிக்கொண்டிருக்கும் மணலினின்றுந் தப்பித்தவர்களல்லர். என்ன செய்வர்? ஒருவரை யொருவர் பார்த்துப் பார்த்து வருந்தலாயினர் என்றபோதிலும் பாலன் தன் மீது பொழிந்த மணலைத் தோண்டி அதனின்றும் வெளிவர எவ்வளவோ பிரயாசைப்பட்டான். கூடவில்லை. பாலயனுடைய தேசிங்கோ மணலால் முற்றிலும் மூடப்பட்டு அவஸ்தை யடைந்துகொண்டிருந்தான். பாலனும் இவ்வளவு நேரம் வெகு சம்பிரதாயமாய்ப் பர்மியர் கையில் சிக்கிக்கொள்ளாது தப்பிவந்த பையனைக்காக்கதன்னாற்கூடியவரை பிரயாசைப்பட்டும் முடியாமற் றிகைத்துக்கொண்டிருக்கும் பொழுது, பாலனையும் மணல் விழுந்து கழுத்து வரை மூடி விட்டது. அதை உணர்ந்த பாலன் தன் தந்தையையும் தன் அருமைத்துணைவன் நிலைமையையும் நினைத்து மிக்க வருந்துவானாயினன். இவ்விதம் வருந்திக்கொண்டிருக்குந்தருணம் 'திக்கற்றவர்கட்குத் தெய்வந் துணை நிற்கும்' என்ற முதுமொழி பொய்க்காவண்ணம், திடீரென ஒரு பர்மிய வீரன் பாலன் படும் துயரைக்கண்டு மிகுதியும் இரங்கி, மணல் விழுந்துகொண்டிருக்கும்படியாய்த் தட்டிவிட்ட சூக்ஷத்தை நிறுத்திப் பின் பாலன் துயர் நீக்கக் கருதிப் பாலனை மணலினின்றுந் தோண்டி எடுக்கப் பிரயாசைப்பட்டான். இவ்விதம் எண்ணி வந்த மாற்றான் மனத்தை

அறியாப் பாலன் முதலில் தன்னை வந்து கொல்லவந்த மறலி யோ இவன் என்று கருத்துட்கொண்டு சகிக்கக்கூடாத துய ரனுபவித்தானாயினும், பின்னர் அவனது நல்லெண்ணத்தை அறிந்து, அவனைத் தனக்கு இரக்ஷை கொடுக்க எண்ணி வந்த சர்வேசன் என நினைத்து, அவனை நோக்கி, "ஐயா! மணல் சொரிவதோ நின்றுவிட்டது. என் கழுத்து வெளியிலிருப்ப தால் யான் உயிரிழக்க வழியில்லை. ஆதலால் என்னைப் பற் றிய கவலையை யொழித்து, அடுத்த குவியலுக்குள்ளகப்பட் டுக்கொண்டு மிகுதியும் வருந்தும் எனது துணைவனை முதலிற் காப்பாற்றும்" என்று பர்மா பாஷை அறியாத பாலன் சைகை யால் மிகுதியும் வேண்ட, வந்த அன்னியன் பையனைத் தோண்டி வெளியிலெடுத்து விட்டான். அதன் பின் பாலனை யும் அவ்வாறே வெளியிலெடுத்து விட்டு, அவ்விருவருக்கும் ஓர் வழியைக் காண்பித்து அவ்வழியாக மலையைக்கடந்து செல்லப்பணித்து, அவ்வழியாக இந்தியக் கைதிகளிருவரும் தப்பி ஓடத் தான் செய்த சூழ்ச்சியையும் சைகை யாலவர் கட்கு அறிவிக்கப் பாலனும் பையனும் தந்தையைக் காணும் பொருட்டு அதிவிரைவாய் அவ்வழியாக ஓட ஆரம்பித்தனர்.

அந்தச் சமயத்தில் இவர்கள் கழுத்திற் குபீரென இரு வர் கயிற்றை வீசி எறிந்து சுருக்கிட்டு உயர இழுத்தனர். அதனைத் தற்செயலாயுணர்ந்த முன்னிவர்களைக்காத்த பர்மாக் காரன் க்ஷணத்தில் தனக்கெதிராகத் தேசிங்கை இழுத்துக் கொண்டிருந்த இருவரைச்சுட்டு வீழ்த்தலும் தேசிங்கு கீழே விழுந்தான். அந்தச்சமயம் மறுபுறம் ஓடிவந்து பாலனை இழுத்துக்கொண்டிருந்த இருவர்களிலும் ஒருவனைச்சுட்டு வீழ்த்துவானாயினன். மீந்திருந்த ஒருவனோ இவ்வளவு தூரம் அவ்விருவர்களுக்கு உதவி செய்த தன்னினத்தான் மீது 'குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக்காம்பு' இவனல்லவா

என வெகுண்டு தன் கையிலுள்ள ஓர் கூர்மையான வாளை விசையாய் வீசி எறிய, அவ்வாள் அவனது மார் மீது பாய அவன் பிரக்ஞையற்றுக் கீழ் வீழ்ந்தான். வீழ்ந்ததும், தேசிங்கை அழைத்து "பையா! அவனையும் சுட்டுவிடு" எனத் தன் சைகையால் விழுந்து கிடந்த பையனுக்கறிவிக்க, அப்பொழுதுதான் சுயபுத்தியடைந்த தேசிங்கு எழுந்து இமைப்பொழுதில் தன் துப்பாக்கிப் பிரயோகத்தால் பாலனை இழுத்துக்கொண்டிருந்தவனையும் வீழ்த்தினன். அதன் பின் மயக்கத்தினின்று எழுந்த பாலனும் பையனும் விழுந்து கிடந்த தங்கள் உபகாரியான பர்மாக்காரனைப் பார்க்க அவன் மேலுலகை அடைந்தானெனக்கண்டு மிகுதியும் சோகத்திலாழ்ந்து அவனது பிரேதத்தை அவ்விடத்திலேயே விட்டுவிட்டு வெளிக்கிளம்பி மறுபடியும் மலையடைந்து, மரத்தின் வழியாகவே கீழோடிக்கொண்டிருந்த நதியையுங் கடந்து, மலையினின்றிறங்கி, இவர்களால் விடுபட்டிருந்த குதிரைகளில் ஏறி 'இவ்வழியாகத்தான் இருவரும் உயிர் தப்ப ஓடியிருக்க வேண்டும்' என்று எண்ணி வெகு தீவிரமாய்க் குதிரைகளை அவ்வழியாகவே செலுத்தினர். அப்பொழுது பாலன் "தேசிங்! அதோ ஒருவன் தன் கையில் வாள்கொண்டு செல்கின்றனே அவன் யாரென்று பார்" என்று பால்யனைக் கூவி அவனுக்குக் காண்பிக்கப் பால்யனோ முன் பின் ஆராயாது அவனையுஞ்சுட்டுப் வீழ்த்திவிட்டு, பாலனுடன் தன் குதிரையையும் வேகமாய் விடுத்து அவ்வழியே போய்க்கொண்டிருந்தான்.

அச்சமயம், "பாலா! நில்! நில்!" என்றஓர் சத்தங்கேட்டது. பாலனும் பையனும் தத்தம் குதிரையைச் சட்டென நிறுத்திக்கொண்டு, "எங்கிருந்து இவ்வரவம் ஒலிக்கின்றது? நம் பெயர் இவ்விடம் அறிந்துள்ளவர் எவருமில்லையே" என

அங்குமிங்கும் ஆராய்ந்துகொண்டிருக்கும் பொழுது "ஓடிவா! ஓடிவா!" என்ற மற்றோர் அரவமும் கேட்கலாயது. அது தன் தந்தையின் குரலெனத்தேறிய பாலன் பல இடங்களையுஞ் சுற்றிப்பார்க்க ஓரிடமும் தன் தந்தையைக் காணக்கூடாது விழித்துக்கொண்டிருந்தான். சிறிது நேரங் கழித்துத் தேசிங் பாலனிடம் ஓராளைக்காண்பித்து "அது யாராயிருக்கும்" எனக்கேட்டான். பாலன் அம்மனிதனை யணுகிப் பார்த்தான். அவனது தந்தையெனக் கண்டான். உடனே, "அப்பா! தங்களுக்குற்றதென்ன? எழுந்திருங்கள் விடியும் சமயமாயிற்றே. போகலாம்" என்று எழச் சக்தியற்றிருந்த மோகனசிங்கை நோக்கிப் பகர்ந்தான்.

பாலன் அவ்விதம் பகரலும் "பாலா! இதோ பார். என்னால் சகிக்கக்கூடவில்லை. வலி பிராணன் போகிறது." என்று தன் வயிற்றைப் பாலனுக்குக் காண்பிக்க, ஈட்டிக்குத்தொன்று தன் பிரிய தந்தையின் வயிற்றில் விழுந்து, அதனால் உள்ளிருக்குங்குடல் சிறிது வெளியில்வருந் தறுவாயிலிருந்ததுமன்றி, இரத்தப்பெருக் கெடுத்துக்கொண்டு மிருந்தது, அதனைக் கண்ட பாலன் இன்னது செய்வதென்றறியாது மயங்கித் தன் தந்தை படும் பாட்டைக்கண்டு சகியாது தானும் 'ஓ'வென்றலறலானான். அதைக்கண்ட நம் தேசிங்கு, "ஐயா! வருந்துதல் கூடாது. மேலும் சமயத்தையும் தெரிந்துகொள்ளுங்கள். நாம் நம் சேனையையுமடைய வேண்டியிருக்கிறது" என்று இன்னிதமாகப் பாலனைத் தேற்ற, உடனே பாலன் தன் சித்தந் தெளிந்து தன் சட்டையைக் கிழித்துத் தன் தந்தையின் வயிற்றிலுண்டான காயத்தின் மீது இறுகக்கட்டிக் குடல் வெளிவராவண்ணம் ஏற்பாடுசெய்து அவரைத் தூக்கிக் குதிரையில் வைத்துத் தானும் ஏறிக்கூடாரத்திற்குச் செல்லப் புறப்பட்டான். அவ்விதம் புறப்படுஞ் சமயம் மோகனசிங், "பாலா!

கீழிறங்கி அதோ விழுந்து கிடப்பவர் உயிருடனிருக்கின்றாரா வெனப்பார்" என்று பாலனிடம் சொன்னான். அதற்கிணங்கப் பாலன் அம்மனிதனை நெருங்கிப் பரீக்ஷித்ததும், அம்மனிதன் பிணமாக இருக்கக்கண்டு அதனைத் தன் தந்தைக்கறிவித்தான். அப்பொழுது மோகனசிங் மிகுதியும் விசனித்துப் "பாலா! அவரையுங் கொண்டுவந்து குதிரையின் மீது வை. இங்கு விட்டு விடக்கூடாது" என்று கூறினான்.

"அப்பா! இவர் யார்?"

"பாலா! இவர் தான் என்னை இவ்விட மழைத்துவந்த சர்மிஷ்டரெனப்பெயர் கொண்டுள்ள எனது இனியமித்திரர்."

"அப்பா! ஜயிலில் இருந்துகொண்டிருந்த இவருக்கும் தங்களுக்கும் இக்கதி நேர்ந்தவிதம் யாது?"

"பாலா! எங்களிருவரையும் ஜயிலில் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒருவன் நம் சைன்யம் ஜயங்கொள்கிறதென்றும், தோல்வியுறும் பர்மியர் எங்களைக் கொலை செய்ய வழி தேடுவரென்றும், அதனால் 'நீங்களிருவரும் உயிர் தப்பிக் கொள்ளுங்கள்' என்றும் பகர்ந்து ஒரு வழியைத் திறந்து விட்டு எங்களை ஓடும்படி செய்ய, நாங்களிருவரும் அவ்வழியாகவே ஓடி வந்தோம். வரும் வழியில் ஒருவன் எங்களை எவ்விதமோ அறிந்துகொண்டு எங்களைப் பின் தொடர்ந்து இதோ உயிரற்றுக்கிடக்கும் என் நண்பரை அவன் கைப்பிடித்திருந்த ஈட்டியொன்றால் குத்திக்கொன்றுவிட்டு எனக்கும் ஓர் குத்துவிட்டான. அச்சமயம் நான் அக்குத்திற்குத்தப்ப எண்ணங்கொண்டு சிறிது விலகினேனோ இல்லையோ, அதே நேரத்தில் அவனும் எங்கிருந்தோ திடீரென்று வந்த குண்டொன்றால் அடிபட்டுக் கீழே வீழ்ந்து இறந்தான்."

"அப்பா! அவனு தங்களையும் சர்மிஷ்டரையுங் குத்தின வன்? அவன் உயிர் எனது ஏவலின்படி நம் பையனின் துப் பாக்கிக்குத்தான் இரையானதென்றெண்ணுகின்றேன்."

"கேள் பாலா. இறக்குந்தருவாயில் நிலைதவறிக் கீழ் விழ்ந்தான். அப்பொழுது அவன் கைப்பிடித்திருந்த ஈட்டி என் நெஞ்சிற்கு வைக்கப்பட்டிருந்த குறிதவறி என்வயிற்றில் பிடித்தது. நல்ல வேளையாய்க் காயம் அதிகமில்லை. சுகமென் றெண்ணுகின்றேன். இதுவும்தெய்வச்செயலன்றிவேறில்லை."

"தேசிங்! சர்மிஷ்டரை உன் குதிரையில் வைத்துக் கொண்டு முதலில் கூடாரத்திற்குச்செல். நாங்களும் வருகின் றோம்" என்று சொல்லி அவர் பாலன் குதிரையில் ஏறிக் கொண்டார். பாலனும் தன் தந்தையுடன் கூடாரத்திற்குச் செல்ல எண்ணங்கொண்டு குதிரையண்டை வரவும், மோகன சிங், "பாலா! மறந்துவிட்டேன். சற்றுத் தயவுசெய்து அதோ ஓர் பத்து கெஜ தூரத்திற்கப்பால் காயப்பட்டு இறக்குந்தறு வாயிலிருப்பது யார் என்று பார்" என்றான்.

பாலன் ஓடி முகங்குப்புறக்கிடக்கும் மனிதன் யாரென்று நோக்கலும், பாலன், "அப்பா! என்ன சொல்லுவேன்! மூச் சைக்காணேமே!" என்று கண்ணீர் சொரிந்து கதறினன்.

"ஏன் கதறுகின்றாய்? யாரது?"

"ஐயோ! தங்களது! சகோதரரே!"

"ஆ! அமரசிங்கா?"

குற்றுயிராய்க்கிடந்த அமரசிங்கின் காதில் மோகனசிங் கின் வார்த்தை விழவே, சகோதரவாஞ்சை அவன் இருதயத் தைப் பிளக்க "ஆம், அண்ணா, நான் தான் தங்களை இக்கதிக் காளாக்கிய பாவி" என்று சோர்ந்த குரலுடன் பேசினன்.

அதுகேட்ட மோகனசிங்கின் மனம் பதைபதைத்துத் "தம்பி! அவைகளை யெல்லாம் மறந்துவிடு. இப்பொழுது உனக்கு வேண்டிய உதவி யாது? உனக்கு என்ன நேர்ந்தது? அப்பா" என்று வெகு ஆவலுடன் கேட்டான்.

அதற்கு அமரசிங் "அண்ணு! எனக்கு யாதொரு உதவியும் வேண்டியதில்லை. இதுவே எனது கடைசித்தறுவாய். என் எண்ணம் இன்று தான் ஈடேறியது. அண்ணு! கேட்பார் பேச்சைக்கேட்டு மதியிழந்து, தங்களை இக்கதிக்காளாக்கி வைத்தேன். சகல காரியமும் பாலனிடம் சொல்லியிருக்கிறேன். என்னுல் வேறொன்றும் பேசமுடியவில்லை. எனது பிராணன் போகிறது. யான் தங்கள் பொருட்டுச்செய்துள்ள குற்றங்களை மனம் வைத்து பொறுத்துக்கொள்ளும்படியாய் மிகவும் தாழ்மையுடன் மன்றுடுகின்றேன். அண்ணு! மன்னித்துக்கொள்ளுங்கள்! மன்னித்துக்கொள்ளுங்கள்" என்ற வார்த்தைகளுடனேயே தன் வாழ்நாட்களை இழந்து இவ்வுலகவாழ்வைக் கழித்துக் கொள்வாணுயிஞன்.

இத்தகைய தாபமொழிகளைச் செவியிலேற்ற மோகனசிங் சித்தப்பிரமை கொண்டு, யாதும் பேசச் சக்தியற்றுத் தானும் தன் தம்பியின் கடைசி நடத்தையைக் குறித்து நினைந்து அளவில்லா சோகக்கடலிலாழ்ந்து, அமரசிங்கின் பிரேதத்தின் மீது வீழ்ந்து கட்டிப்பிடித்து அழுதுகொண்டிருக்கப் பாலன் தன் தந்தையை ஒருவாறு தேற்றி, மேல் நடக்கவேண்டியவற்றிற்கு வழி சொல்லுமாறு கேட்டான்.

அதனையுங் கவனியாது "ஆ! அமரசிங்! உன்னுடைய மனது இவ்வளவு தூரம் திரும்புமென்று என் கனவிலுங் கருதவில்லையே! நீ இவ்வளவு சொன்னது எனக்குப் போதாதோ? எம்பெருமான் உனக்கு நீடித்த ஆயுள் தாராமற்போயி

னனே? என்ன அநியாயம்! ஐயோ! அமரசிங்! மாண்டாயோ! இவ்வளவு தான் உனது உலக வாழ்வோ? என் செய்வேன்?" என்று மீண்டும் வருந்திய மோகனசிங்கைத் தன் மனத்தில் எவ்வளவோ துயரனுபவித்தாலும் அதைப் பாராட்டாது, பாலன் பலவாறு சொல்லி ஆறுதலடையப்பண்ணி அவ்வமர சிங்கைச் சந்திக்க நேர்ந்ததை அறிவிக்குமாறு கேட்டான்.

அதற்கு மோகனசிங், "பாலா! நானும் சர்மிஷ்டரும் ஓடி வரும்பொழுது, எங்கள் பின் ஒருவன் ஓடி வந்து எங்களைத் தொலைக்க வழி தேடினனென்றேனல்லவா? அவனுக்குப்பின் ஓடி வந்தான் அமரசிங், அச்சமயம் என்ன நினைவுடனிருந்தானென்று என்னால் கிரஹிக்கக்கூடவில்லை" என்றான்.

"அப்பா! தங்களுயிரைக்காக்கும் மனத்துடன் தான் ஓடி வந்திருப்பரென்று ஐயமறச்சொல்வேன். ஏனெனில், என்னையவர் தன் கூடாரத்திற்கழைத்து அவர் தான் குற்றவாளி என்று ஒப்புக்கொண்டு அதற்கிணங்கத் தமது கைப்படவே ஆதியோடந்தம் நடந்தனவற்றை எல்லாம் விஸ்தாரமாயெழுதியுள்ள கடிதமொன்று என்னிடம்தந்துள்ளார்."

"பாலா! அமரசிங்கா உன்னை அழைத்துத்தான்! குற்றவாளியெனத் தெரிவித்தான்? வாஸ்தவம் தானா?"

"உண்மைதானப்பா. தன் குற்றத்தை ஒப்புக்கொண்டபின், அவர் சமரில் மடியப்போவதாயும், இனி அவரால் உலகில் வாழமுடியாதென்றும் என்னிடம் இரவுமணி 12-க்கு உரைத்தார். இவ்விதமுரைத்த அவரை நான் காத்துக்கொள்ளும் பொருட்டு அவர் பக்கலிலேயே நின்று அவர் மீதும் ஓர் கண் வைத்துப் போர் புரிந்தும் கொஞ்சநேரத்தில் அவர்

இன்ன இடந்தான் சென்றனரென்றறியக்கூடவில்லை. ஆகவே, யான் தங்களைத்தேடி தேசிங் உதவிகொண்டு தாங்களடைபட்டிருந்த அறைநோக்கிச் சென்றேன். சிறையில் நாங்களிருவரும் தங்களையும் தங்கள் மித்திரரையும் வெளியே போக வழி செய்வித்தவரின் உதவியால் எங்களுக்கவ்விடமுண்டான சகல இக்கட்டுக்களுக்கெல்லாம் எம்பிரானருளால் தப்பித் தங்களை இவ்விடம் காண நேரிட்டது. அத்துடன் இதோ கிடக்கும் இவனைரக்கிட்டும் பாக்கியமும் கிடைத்தது. இன்னுமவர் சங்கதிகள் அநேகமிருக்கின்றன, சொல்வதற்கோ தற்போது அவகாசமில்லை. போகும் பொழுதே யாவும் சொல்லிக்கொள்கின்றேன். ஓடிவந்த இவருக்குத் திடீரென்று இவ்வாறு நேர்ந்ததென்னப்பா?"

"ஓடிவந்தான். ஓடிவந்து என்னையும், எனது நண்பரையும் குத்திய பாதகனை நெருங்குவதற்குள் யாரோ வேறொருவன் இவனை எதிர்க்க, அன்னவனைச்சுட்டு வீழ்த்திவிட்டு, மறுபடியும் அதிவிரைவாய் எங்களைக் காத்தற்பொருட்டு ஓடிவந்தான். வரவும் அதோ தெரிகின்றதே வாய்க்கால், அவ்வாய்க்காலைக்கடந்தால் எங்களை விரட்டிக்கொண்டு வந்தவனைச் சீக்கிரம் கொன்றுவிடலாமென நோக்கங்கொண்டு, வந்த வேகத்தில் அதனை ஒரே தாண்டாகத் தாண்டினான். தாண்டி மறுபடியும் என்னிடம் ஓடிவரவே, ஏதோ இடறிக் கீழ் வீழ்ந்தான். அதுகண்ட மற்றோர் பகைவன் அவனை அவன் கையிற்கொண்டிருந்த சூரியொன்றால் விலாவிற் குத்திவிட்டுச் சென்றான். அதன் பின் அமரசிங் எழுந்து நடக்கச் சக்தியற்றவனாயினன்றபோதிலும் விழுந்து கிடந்த என்னைக்காக்க ஆவல்கொண்டு தன்னுயிரையும் பெரிதெனமதியாது தன் விலாக்காயத்தினின்றும் இரத்தம் பெருக்கெடுக்கவொட்டாது ஓர் கையை வைத்து அடைத்துக்கொண்டு, மற்றோர் கையைத்

தரையில் ஊன்றி ஊன்றி வயிற்றால் நகர்ந்துகொண்டே அவ்வாய்க்காலிலிருந்து இவ்வளவு தூரம் வரை வந்துவிட்டான். பாலா! அவனது தைர்யத்தை என்னென்பது! ஆனால் கொஞ்சநேரங் கழியவும் வலியிழந்த அவனால் அப்பால் வரமுடியாது போயிற்று. போகவே, அவன் எவ்விதம் முகங்குப்புற நகர்ந்து வந்தனனோ, அவ்வண்ணமே கிடந்துவிட்டான் போலும்! யாவுமிருக்கட்டும்; இவனது ஜடலத்தை இப்போது என்ன செய்ய வேண்டுமென்று உத்தேசிக்கின்றாய்?"

"அப்பா! முன்னரே இவர் என்னிடம் இவரது ஜடலத்தை இவ்விடம் எதிரிகள் கையில் விட்டுவிடாது சோழநாட்டிற் கெடுத்துக்கொண்டு போய்த் தகனஞ்செய்யச் சொல்லியிருக்கின்றார். மேலும் அவரது ஜடலத்தை நம் வீரர்களுக்கு முன் வைத்து இவர் நம் பொருட்டுச்செய்துள்ள குற்றஙகள் அனைத்தையும் விரிவாய் அடங்கியுள்ள கடிதத்தைப் பிரித்துச் சகல வீரரும் இவர்தான் குற்றவாளி என்றும் தாங்கள் நிரபராதி என்றும் அறியும்படி வாசிக்கக்கேட்டுக்கொண்டார். முதலில் யான் மறுத்தேனாயினும், மீண்டும் மீண்டும் என்னை இவர் இவரது மனப்படி நடந்துகொள்ள மன்றாட இறுதியில் அதற்கிசைந்தேன். ஆதலால் அவர் கேட்டுக்கொண்டதிற்கிணங்கச் சவத்தை நம்முடன் எடுத்துக்கொண்டு போதல்தான் சரியென்று தேறுகின்றேன். ஆனால் தங்களுடைய நோக்கப்படி நடக்கக் கடமைப்பட்டிருக்கின்றேன்."

"பாலா! நானென்ன சொல்லவேண்டியிருக்கிறது? நம் மனத்திற்கு அவன் உன்னிடமறைந்துள்ள வார்த்தைகளால் அவன் குற்றவாளிதானென்று தெளிவாய் விளங்குகிறது. அங்ஙனமிருக்க, அவன் பெயரை என் வீணில் வெளிக்கிளப்ப வேண்டுமென நினைப்பினும் அவன் மடிவதற்கு முன் நீ அவனுக்குக்கொடுத்துள்ள வாக்கையும் அவனுக்கு உதித்துள்ள

எண்ணங்களையும் பூர்த்தி செய்வது அவசியமெனத் தோன்று கின்றது. ஆதலால், பாலா! அமரசிங் சொல்லிற்கிணங்க, வீரர்களுக்கு முன்னர் முதலிலும், பின்னர் நாடடைந்து அரசர்க்கு முன்னும் பிரஜைகளுக்கு முன்னும்இவன் உன்கையிற் கொடுத்த கடிதத்தின் சாரத்தை யுரைக்கவேண்டியதுதான். வேறு யோசனைக்கு இடங்கொடுக்க வழியில்லை."

"அடா! அமரசிங்! உன் கதி இவ்வாறாகவா முடிந்தது! நாமிருவரும் ஒருவர்க்கொருவர் எவ்வளவோ அந்நியோந்நியமாய் இருந்து வந்தோம். அப்பந்தபாசக்கட்டு இவ்விதத்திலா அறுபடவேண்டியதாய் ஈஸ்வரன் அனுக்கிரஹித்தான். என்னை இவ்வாறெல்லாம் இம்சிக்க என்ன கெடுதி உன் பால் செய்தேனோ? அதனைப்பற்றி யாதொரு கவலையுமில்லையே? நீ 'நான் தான் குற்றவாளி' என்று இப்பொழுது புகன்றது போல அக்காலத்திலேயே புகன்றிருப்பாயானால், நீ இந்த ரணகளத்தில், உற்றார் உறவினரற்ற இவ்வந்நிய தேசத்தில் உயிர் துறக்கக் காரணமேற்படாதே. நாட்டிலிறந்திருந்தால் உனது அந்தியகாலத்தைக் கண்டாகிலும் நம் தந்தையர் துயர் ஒருவாறு நீங்குமே! அவ்விதமிருக்க, இவ்விடத்திலிருந்தே உன்னைப் பிணக்கோலத்துடன் வயது முதிர்ந்த மன்னர்க்குக் காண்பிக்க எடுத்துச்செல்வது என்ன விபரீதம். உன்னை வெற்றியொடு திரும்பும் இளவரசாகக் காணுவதற்குப் பிரதியாக ஒரு பிணவரசாகக் காணும்படி நேர்ந்ததே. பரம்பொருளின் சித்தமும் அவர் செயலும் இவ்விதமாயதோ!"

"பத்மாவிற்குப் பின் எனக்குச் சிங்காதனமெதற்கு? தந்தையொடு கல்வி போம். தாயொடு செல்வம் போம், உற்றார் உறவினரொடு தோள்வலி போம், ஆனல், கொண்ட மனையாளொடு யாவும் போம்' என்றவண்ணம், என்னருமைப் பத்மாவிற்குப் பின்னர் அனைத்தையும் துறந்தேனே. அப்பா!

அமரசிங்! நீயேன் உயிருடனிருந்து ராஜ்யத்தைக் கைக்கொள் ளலாகாது. என்ன நினைந்தாயோ? உன் மனநிலை எவ்வாறிருந் ததோ? தந்தை உன் பிரிவைக் கேள்வியுற்றவுடன் என்ன பாடுபட இருக்கின்றாரோ? என்று இவ்வாறு வருந்திய மோக னசிங்குடனும், உயிரிழந்த அமரசிங், சர்மிஷ்டர், ஆகிய இவர் களுடனும், பாலனும் தேசிங்கும் தீவிரமாய்த் தங்கள் கூடா ரங்களடிக்கப்பட்ட இடத்தை நாடிவந்தனர். சோழபாண்டிய சைனியங்கள் ஜயபேரிகை முழக்கின. சேரநாட்டுத்துவஜமோ, "நாங்கள் ஜயம் பெற்றோம்; 'துஷ்ட பர்மானரே! ஓடுங்கள். ஓடுங்கள்!' என்று அறிவிப்பதுபோல் அங்குமிங்கும் பறந்து கொண்டிருந்தது. சோழபாண்டியர்கள் பர்மாவுடன் செய்த கொடூமான சண்டையைக்கண்டு அஞ்சிச் சந்திரன் ஓடிச் சூரியனுக்கறிவிக்கவும், சூரியன் 'இது வாஸ்தவம்தானா? நாமும்போய்ப் பார்ப்போம்' என்றுன்னி ஆவலோடு வருவ தைப்போற் கீழ்த்திசையிற் றோன்றுவானாயினான்.

வெற்றிபெற்ற வீரர்களனைவரும் தாங்களடைந்த ஜயத் தைக்கூடப் பெரிதாக எண்ணிச் சந்தோஷங்கொண்டாட முடியவில்லை. அமரசிங் அவ்விடமில்லாதிருந்தது இல்லாளில் லாமனைபோலானது. யாவரும் தளகர்த்தனைத் தேட ஆரம்பித் தனர். வெகுநேரம் தேடியும் காணக்கூடாமையாற் சகலரும் மனச்சஞ்சலத்துடன் 'எங்கே ஒரு வேளை எதிரிகளாற் கைதி செய்யப்பட்டனரோ?' வென்று கருத்துட்கொண்டு வருந்தும் சமயம், பாலனாற் கொணரப்பட்ட அமரசிங் சடலத்தைக் கண்டு சொல்லொண்ணாத் துயரிலாழ்ந்தனரென்றாலும், மோக னசிங்கைக்கண்ட மாத்திரத்தில் ஒருபுறம் மாதாவைக்கண்ட சிசுக்கள் போல் மிகுதியும் சந்தோஷ சாகரத்தில் மூழ்கினர். அப்பொழுது பாலன் வீரர்களனைவரையும் ஒன்று கூடச் செய்து அவர்களுக்கு முன்னிலையில் அமரசிங்கால் முத்திரை

யிடப்பட்டிருந்த கூட்டிலிருந்து முன் சொன்ன கடிதத்தை வெளியிலெடுத்து மிகவொடுக்கத்துடனும் துக்கத்துடனும் நன்கு அலங்காரம் செய்து அதிசுந்தரம் பொருந்திய ஓர் பெட்டியில் அடக்கம்பண்ணி வைக்கப்பட்டிருந்த அமரசிங்கின் சடலத்திற்கு முன்னின்று வாசிக்கலானான்.

வாசித்து முடிந்ததும், சகலரும் 'மோகனசிங் யாரென்றும், பால்சிங், அமரசிங் ஆகிய இவர்கள் யாவரென்றும், அவர்களுக்குள்ளுண்டான மனவருத்த மென்னவென்றும் தெளிவாயறியலானார்கள். அமரசிங்கின் கொடூரப்பிரயத்தனங்களை நினைந்து அவனை முற்றிலும் மனத்தினின்று அகற்றப் பிரயாசைப்பட்டார்களாயினும், அவன் தன் வாழ்நாளின் கடைசியில் அனைத்தையும் வெறுத்து நல்வழியில் நடக்கப் பிரயாசைப்பட்டு அவ்விதம் ஓர் கடிதத்திலாவது தன் மாசற்ற தமயனுக்கமைந்துள்ள "போரிற் புறங்காட்டியோடிய கோழை மோகனசிங்" என்ற போலிப்பெயரை மாற்ற நல்லெண்ணங் கொண்டு இவ்வாறு செய்தனனே என்று நினைந்து அமரசிங்கின் நற்குணத்தைப்புகழ்ந்து பேசினர். வீரர்கள் யாவரும், 'பொய் சொல்லுமொருவன் சில நாளைக்கு வாழ்ந்து வருவான் தான். ஆனால், இறுதியில் மெய்யைப் பொய் வெல்வதோ கூடாத காரியம். மேலும் 'தன் வினை தன்னைச் சுடும்' என்ற வண்ணம் அமரசிங் ராஜ்யபாரத்தை அபகரிப்பதற்காகப் புகன்ற பொய்ச்சாட்சியம் எவ்வளவு காலம் நிலைத்தது? பொய் சொன்ன அன்று முதல் அவனுக்கும் அவன் மனத்திற்கும் யுத்தம் நடந்துகொண்டே வந்திருக்கின்றது. அந்த யுத்தம் முடிய இத்தனை வருடம் சென்றன. கடைசியில் மனச்சாட்சியே அவனை வென்று இவ்விதமெல்லாம் நடக்கும் வண்ணம் தூண்டினது. ஆனதால் மெய்யைப் பொய் ஒரு நாளும் மேற்கொள்ளாது' என்றும் 'இப்பொழுதோ நம் தளகர்த்த

ராய அமரசிங் உயிர் துறந்தனர். அவருக்குப்பதிலாய் நின்று யார் நம்மை நாட்டிற்கழைத்துச் செல்வது?' என்றும், ஒரு வேளை அரசருடைய சேஷ்ட புத்திரனாய மோகனசிங் இள வரசர் தான் நடத்துவாரோ என்னவோ?' என்றும் பலரும் பலவாறாகப் பேசிக்கொள்வாராயினர்.

இது இங்ஙனமிருக்கப் பாலனுக்குத் திடீரென அமரசிங் யுத்தமுனைக்குச்செல்லும் முன்னம் 'சண்டை முடிந்தவுடன் என் கூடாரத்தை நன்றாய்ச் சோதித்துப் பின் நகர் நோக்கிச் செல்' என்று மொழிந்த வார்த்தைகள் நினைவிற்கு வரலும், பாலன் தன் தந்தையுடனும், தன்னைப்போன்ற ஏனைய வீரர் களுடனும் கூடாரத்திற்குள் நுழைந்து பரிசோதிக்க ஒரு பக்கம் முத்திரையிடப்பட்டுள்ள கடிதமொன்று தென்பட் டது. முத்திரையைச் சகலருமறிய உடைத்துக் கடிதத்தை நோக்க, அதில், "இன்று நடக்கும் யுத்தத்தில் யான் உயிர் தப்பப்போவதில்லை. எனக்குள்ள ஆயுள் இவ்வளவு தான். ஏனென்றால் இன்றைய யுத்தத்தில் யான் எதிரிகளின் வாளுக் கிரையாகாவிடினும், யானே எனது கையால் உயிரைப்போக் கிக்கொள்வேனேயல்லாது காருண்ய கற்பதருவாகிய என் அண்ணாவின் முன் ஒருபோதும் இவ்வன்னெஞ்சனாகிய யான் தோன்றப்போவதில்லை. ஆனதால் எனக்குப்பின் என்கையில் ஒப்புவிக்கப்பட்ட சைன்யத்தை என் அண்ணாவின் மைந்த னாகிய வீரதீர பாலனே தளகர்த்தனாக நின்று சைன்யத்தை நகர்கொண்டு சேர்க்கக் கடமைப்பட்டிருக்கின்றான். வீரர் காள்! அனைவரும் அன்னவனுக்கடங்கி நடப்பீர்களாக!" என்று எழுதித் தன் கையெழுத்தையும் வைத்திருந்தான் அமரசிங். எல்லோரும் சண்டையில் மிக்க தைர்யத்துடன் எதிரிகள் மேற்பாய்ந்து சமர் செய்த பாலன் கையிலொப்பு

விக்கப்பட்டதற்காகப் புத்தம் புதிய ஊக்கமும் உற்சாகமும் பிறந்து அவர்கள் ஆனந்த சாகரத்தில் அமிழ்வாராயினர்.

முன் சொன்ன கடிதத்தின் சாரத்தையறிந்து கூடாரத்தைவிட்டு வெளிக்கிளம்பும் சமயம் முத்திரையிடப்பட்ட இன்னொரு கடிதமும் அகப்பட்டது. அதுவும் அமரசிங் கைப்படவே எழுதப்பட்டுள்ளது. மேலும் அக்கடிதம் அடைபட்டிருந்த கூட்டிற்குள் 'அமரசிங், அரிஹரன்' என இருபெயர் வெட்டப்பட்டுள்ள ஓர் தங்கத்தகடும் இருந்தது, அதில் "அண்ணு! அண்ணியர் பொருட்டு இதுவரை துயரெய்தி வந்ததை இக்ஷணத்திலேயே அகற்றுங்கள். அவர்கள் இறக்கவில்லை. தாங்கள் அவர்களுக்காக வெளிக்கிளம்பி மூலிகை யொன்று கொண்டுவர வெளிச்சென்ற சமயம் அவர்களைப்போல் ஒரு உருச் செய்து அவ்வுருவண்டையில் நம் சோழர் நால்வரைச் சேரநாட்டார் போல் மாறுவேடந்தாங்கி இருக்கச்செய்து தாங்களுருவைப் பரீக்ஷை செய்யுமுன்னரே அண்ணியர் இறந்ததாகத் தங்களுக்கறிவித்துக் காஷ்டமடுக்கி அவ்வுருவை அதன் மேல் வைத்துத் தகிக்க ஏற்பாடு செய்தேன். அங்ஙனமே நடந்தேறியது. தாங்களும் நம்பிக்கை கொண்டீர்கள். ஏன் அவ்விதம் செய்தேனென்றால் தங்களையும் பாலனையும் யான் நேரிற் கண்டு ஒழிக்கச் சக்தியற்றவனென்று தெளிந்ததனுற்றான் இவ்விதத்திலாவது தங்களைத் துயரிலாழ்த்தித்தொலைக்க நினைத்தேன். தற்சமயமோ அண்ணியார் நினைவால் மிகு வேதனை யனுபவித்துக் கொண்டிருப்பீர்களென்பதில்ஐயமில்லை."

"ஈதிங்ஙனமிருக்கக் கடின வியாதியால் சம்பாஷிக்கவும் சக்தியற்றிருந்த அண்ணியார்க்கு மயக்க மருந்தொன்று கொடுத்துப் பாண்டிநகர் கொண்டுவந்து கடம்பவனக்காட்டின் தென்கோடியிலுள்ள சுரங்கத்தில் அதி இரகசியமாய்ச் சிறைவைத்திருக்கின்றேன். ஆங்கு அண்ணியார்க்குத்தக்க ஔஷ

தங்களீந்து அவர்களை வருத்திக்கொண்டிருந்த கொடிய சுரத்தைப் பஞ்சாகப் பறக்கடித்தேன். தற்போது பூரண சுகமனுபவித்துக்கொண்டிருக்கிறார்களென்றாலும், தங்கள் மேலும் தங்கள் மக்களின் மேலுமுள்ள அணைகடந்த பற்றோ செப்பத்தரமன்று, அதன் காரணமாகவே, நாளுக்கு நாள் உடலிளைத்தவராகின்றனர். அண்ணியாரை எனக்குரித்தான இருவர் காவல் காத்துக்கொண்டும் ஏவல் புரிந்துகொண்டு மிருக்கின்றனர். அவர்களிருவரில் அரிஹரனென்பவருக்கும் எனக்கு மட்டிலும் தெரிந்த ஓர் அடையாளம் நான் தரும்வரை அண்ணியாரைக் காத்துக்கொண்டிருக்க அவர் சம்மதி தந்துள்ளார். அந்த அடையாளம் யாதென்றால் இக்கடிதத்துடனிருக்கும் 'அமரசிங், அரிஹரன்' என்ற இருபெயர் வெட்டப்பட்டுள்ள சொர்னத்தகடே யாகும். இத்தகட்டைக் கொண்டுபோய் அவர் கையிற் கொடுத்தால் உடனே அண்ணியாரைத் தங்கள் கையில் ஒப்புவிப்பரென்பதில் யாதொரு ஆக்ஷேபனையுமில்லை. தாங்கள் அண்ணியாரை அடைந்தபின் அவர்களை இதுவரை உண்மையுடன் காத்துவந்த அவ்விருவர்களுக்கும் தண்டனை விதியாது நல்ல அந்தஸ்திற்குக் கொண்டுவரக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், அவர்களிருவரும் என் மனப்படி நடந்ததால் ராஜவிசுவாசிகளென்றே அவர்களைக் கொள்ள வேண்டும். ஆதலால், அண்ணா! அவர்களிருவரையும் கவனித்துக்கொள்ளும் வண்ணம் மன்றாடுகிறேன். இத்துடன் இன்னும் பல சங்கதிகளையும் பாலனிடம் யான் ஆதியோடந்தம் வரையும் கூறியுள்ளேன்; கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

இங்ஙனம்,

மெய்யைப் பொய்யெல்லாமென்றும் புகறுவோருடைய மொழியை முற்றிலும் மறந்துள்ள வன்னெஞ்சன், மாபாதகனாகிய அமரசிங்" என்று எழுதிக் கையொப்பமிட்டிருந்தது

இக்கடிதத்தைப் படித்து முடிக்கவும் பாலனுக்கும் மோகனசிங்கிற்குமுள்ள ஆனந்தத்தை யாரே அளவிடவல்லார்!

## 13-வது அத்தியாயம்.

## மாண்டவள் மீண்டனள்.

"பாலா! இதுவரை பத்மா இறந்ததாக எண்ணியல்லோ மோசம் போனேன். எவ்வளவு நளினமாய்க்கொண்டு போயிருக்கின்றனென்று அறிந்தனையா? இத்தகைய காரியங்கள் ஒரு வேளை நிகழலாமென்ற எண்ணத்துடன்தான் நான் பல தடவையும் நீ என்னைவிட்டகலலாகாதென்று உனக்கறிவித்து வந்தேன். பத்மா இவ்விதமாகக் கொண்டுபோகப்பட்டாளென நாம் முன்னமே அறிவோமானால் அவளையல்லவா முதலிற் சிறைமீட்ட ஆவல் கொண்டலைந்திருப்போம்? தெரியாது போயிற்றே! பத்மாவின் மனது எவ்வாறிருந்ததோ? நம்மை நினைந்து நினைந்து அவள் என்ன பாடு பட்டனளோ? இதுவரை எத்தகைய நிலையிலிருந்திருப்பினும் சரி, இனிமேலாவது அவளைக்கண்டு நம் மனத்துயரையும், அவளது மனத்துயரையும் மாற்றவேண்டாமா? ஆனதால், பாலா! கொஞ்சமுந்தாமதியாது சைன்யத்தைக் கப்பலேற்றும்படி ஏற்பாடு செய் என்று பாலனிடம் மோகனசிங் பகர்வானாயினன்.

அக்ஷணத்திலேயே வீரர்களுக்குத் தம் தேசம் புறப்பட உத்தரவிடக் கப்பல் புறப்பட்டுச் சேரவேண்டிய தினத்திற்கு ஓர் நாள் முன்னதாகவே தூத்துக்குடித் துறைமுகத்தை வந்தடைந்தது. பாலன் ஆங்கு விடுத்துப்போன தன் தங்கை மனோன்மணியை அணுகிச் சமாச்சாரங்கள் யாவும் நவிலவும், மனோன்மணி அடங்காமகிழ்ச்சி கொண்டாளாயினும், அமரசிங் முதன்முதற் செய்துள்ள சூழ்ச்சிகட்கொருபுறம் மிகவும்

வருந்திப்பின்னர் அவர்களை இதுவரை அவ்வித அலங்கோலத்துக்காளாக்கிய அமரசிங்கே அவர்களைத் தற்போது பெரியதோர் பதவியைக் கீர்த்தியுடன் அடையுமாறு செய்த, ஓர் நற்செய்கைக்காகவும், தன் அருமைத்தாயைக் காப்பாற்றியாதொரு இக்கட்டுக்கும் ஆளாக்காது வைத்திருந்த ஓர் நற்குணத்திற்காகவும் மிகுதியும் அவனை மெச்சினாள்.

தூத்துக்குடியினின்று மனோன்மணியுடனும் ஏனைய வீரர்களுடனும் புறப்பட்ட பாலன் பாண்டிக்கோர் திலகம் போன்று விளங்கும் நம் மதுரையம்பதியைக்கிட்டிக் கடம்பவனக்காடடைந்து அரிஹரனைச் சந்தித்துத் தங்கத்தகட்டை நீட்டவே, பத்மாவதியை அக்ஷணமே பாலனுடன் வெகு மரியாதையோடு அனுப்பி வைத்தான். மக்களைக்கண்ட தாயும் தாயைக்கண்ட மக்களும் அடைந்த ஆனந்தத்தை வாசகர்கள் அடைந்து கொள்ள விடுகின்றோம். அதன் பின்னர் பாண்டிநாட்டு ஜனங்களுக்கு முன்னிலையில் அமரசிங் மனதிற்கிணங்கக் கடிதத்திலுள்ள விஷயத்தைப்படிந்து அமரசிங் தான் குற்றவாளி யென்றும், தன் தந்தை குற்றமற்றவரென்றும் சகலருமறியப்பண்ணித் தஞ்சை யடைந்தான்.

அவ்விடத்திலும் அமரசிங்கிற்களித்த வாக்குறுதிக்கிணங்கப் பாலன் அரசர் முன்னிலையில் சகல பிரஜைகளுமறியும் பொருட்டு அமரசிங்கே அபராதி என்றும், தன் தந்தை நிரபராதி என்றும் நிரூபித்து அவ்விடத்திலுள்ளோர் மனதைக் குளிரச்செய்தான். அரசர் மோகனசிங்கைக் காணலும் மேல் விழுந்து ஆலிங்கனஞ்செய்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார். தான் அறியாது செய்த குற்றத்திற்காக மிகுதியும் வருந்தினார். பத்மாவையும் மனோன்மணியையும் அரண்மனைக்குள்ளழைத்துச்சென்று அவர்களனுபவித்த கஷ்டங்களனைத்

தையும் கேட்டுக்கேட்டு மிகுதியும் துயருற்றார். தான் ஆராயாது மோகனசிங்கைத் தேசப்பிரஷ்டம் செய்தது தவறுதானென நினைந்து நொந்தார். அமரசிங்கை முற்றும் வெறுத்தாராயினும், அவனது கடைசி நேரத்தில் நல்ல வேளையாய்ப் பாலனை அழைத்துச் சகலத்தையுமறிவித்து மன்னிப்படைந்து கடிதமும் கைப்படவரைந்து தான் செய்துள்ள கொடுமையைச் சகலருமறியுமாறு ஏற்பாடு செய்ததையும் நினைந்து நினைந்து அமரசிங்கை ஒருவாறு வாழ்த்தினார். அதன் பின் பாலன் முதலிய யாவரும் அமரசிங்கின் பிரேதத்தைச் சந்தன மரக் கட்டை அடுக்கி அதை வைத்துத்தகித்து அரண்மனை மீண்டனர். தஞ்சையே துயரனுபவித்துக் கொண்டிருந்தது. இவைகளை யறிந்த கனகும் அமரசிங் சாகுந்தறுவாயில் நல்லெண்ணத்துடனிருந்ததற்காகவும், பத்மாவை வெகு மரியாதையுடன் சுரங்கத்திலிட்டிருந்ததற்காகவும் உளம் பூரித்தாளாயினும், தன் காதலனையும், அவனது பெற்றோர் தங்கையாகியவர்களையும் இவ்வளவு துயரெய்தச் செய்தனனே என்று நினைத்த மாத்திரத்திற் சிறிது அமரசிங்கைப் பழித்தாள். கூடிய சீக்கிரம் பாலனை அடைவோமென எண்ணி மிக மகிழ்வு கொண்டாள். ஓடுவாள் பாலனைப் பார்ப்பாள்; புன்னகை கொள்வாள். பாலனுடன் சிறிது சம்பாஷிக்கலாமாவென எண்ணுவாள். ஜனங்கள் சூழ்ந்திருக்கின்றனரே. என்று நினைத்துப் போவதும் வருவதுமாயிருந்தாள். அப்பொழுது மோகனசிங் பாலனிடம் தேசிங்கு பர்மா வந்தவிபரமென்னவெனவினவப் பாலன் தனக்கு அவன் எவ்விதம் பர்மா வந்தானென்று அறிய அன்று தினம் வரை அவகாசமில்லையென்றும், அவனிடமேதான் கேட்டுத் தெளிதல் வேண்டுமென்றும் பகரவும் தேசிங், மோகனசிங்கை நோக்கி "ஐயா! முதலில் யான் யாரென்பதைத் தங்களுக் கறிவிக்கிறேன்.

அதன் பின் யான் பர்மா வந்த விபரத்தையும் ஓதுகின்றேன். தயவுசெய்து கேளுங்கள்" என்று யாவரும் வியக்கத் தன் சரிதையை விரித்துரைப்பானாயினன்.

"பாண்டி சோழர்கள் கையினிற் சிக்கு முன்னம் விக்கிரம பாண்டியர் பாண்டியில் அரசு செலுத்தி வந்தாரென்பது யாவருமறிந்த விஷயம். அவரது சேனைக்கும் தங்களது சைன்யத்திற்கும் ஸ்ரீரங்கத்தில் நடந்த கடும்போரில் இருதிறத்தாரும் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டதையு மறிவீர்கள். உடன்படிக்கைக் கமைந்து இருநாடும் சமாதானமாக இருக்கும்பொழுது விக்கிரம பாண்டியர் வியாதியால் வருத்தப்பட்டுச் சிலநாள் உயிர் துறக்கும் தறுவாயிலிருந்தார். இவ்விஷயத்தை அமரசிங்கிளவரசர் எவ்விதமோ கேள்வியுற்று அதுதான் சமயமெனக்கருதி ஓர் சேனையைத் திடீரெனப் பாண்டி நாட்டின் மேற் செலுத்தித் தலைநகராய மதுராபுரியைக் கைக்கொண்டு அரசரையும் சிறைப்பிடித்து வைத்திருந்தனர். அவ்வரசருக்கு ஒரே ஒரு மாதாவை இழந்த ஆண் மகவு உண்டு. அதன் பெயர் உக்கிரம பாண்டியன். "மூன்று வயதுகூட நிரம்பப்பெறாத அக்குழந்தை உயிருடனிருப்பதைச் சோழர் அறிந்தால் அதனையும் வதஞ்செய்து பாண்டிய அரச வம்சத்தை அடியோடு அழித்துவிடுவர்" என்று எண்ணி, அரசர் அக்குழந்தையைத் தன் உத்தம குணமந்திரி யொருவர் கையிலொப்புவித்தார். அவர் ஓர் ஏழையைப்போல் மாறுவேடந்தரித்துப் பாண்டி நாட்டைச் சார்ந்த கலியுகவரதராகவநல்லூரில் வசித்து அக்குழந்தையை வெகு ஜாக்ரதையாய் ஒருவருக்கும் அதன் விருத்தாந்தம் இன்னதென்றறிவியாது மிகப் பரிவுடன் தன் குழந்தைபோல் வளர்த்து வந்தார். குழந்தைக்கும் வயது பதினைன்காயது. பின்னர் தங்கள்விருத்தாந்தத்தையும்அறிந்த

தன் மேல், இளவரசரின் மேலுள்ள கோபாக்கினி அதிகமாய் மூள அப்பதினுன்கு வயதுப் பாலனுடன் ஓர் நாள் அக்குழந்தையின் விருத்தாந்தங்களனைத்தையும்அக்குழந்தைஅவன்தானென்று தெரியப்படுத்தாமல் மறைபொருளாய் அறைவாராயினூர். அப்பொழுது அந்தப் பையன் சுகுணனென்ற அம் மந்திரியைப் பார்த்துத் "தந்தையே! அக்குழந்தையின் தந்தையரான விக்கிரம பாண்டியரின் கதி பின்னர் என்னவாயிற்று?" என்று வினவ, அதற்கவர் என் கண்ணே? அவர் சிறையிலேயே மாண்டார்" என்றுரைத்து அளவிடக் கூடாச் சோகக்கடலி லாழ்ந்தனர். அவரை அப் பையன் ஒருவாறு தேற்றிப் 'பின்னர் அம்மந்திரியின் கையிலொப்புவிக்கப்பட்ட குழந்தையின் கதிதான் என்னவாயிற்று? அக்குழந்தையானுயிருந்தால் விக்கிரம பாண்டியரை வஞ்சித்த அமரசிங் தலையைக் கொய்யாது விடேன்" என ஆர்ப்பரிக்கச் சுகுணர் "அடா! பாலகா' நீயே அக் குழந்தையாயிருந்தால் உன்னுல் யாது செய்யக்கூடும்?' உனக்கு இன்னும் போதிய வயது வரவில்லையன்றோ, பொறு' என்றூர்.

மறுபடியும் அப்பையன், "பிதாவே! அப்பையன் கதி என்னவாயிற்று? அம்மந்திரியுடன் அப்பையன் எங்கு வசிக்கின்றூன்? அவனது பெயரைச் சொல்வீர்களானுல் அப்பையனுக்கு யானே துணையாயமர்ந்து பாண்டியைச் சோழரிடமிருந்து மீட்ட வழிதேடுவேன்" என்க, சுகுணர் தான் இன்னது தான் சொல்வதென்றறியாது மயங்கி உடனே, "அப்பா! உக்கிரம பாண்டியனெனப் பெயர் வகித்துள்ள அப்பையன் நீயே யாவாய். அம்மந்திரி யானே" என்று மட்டிலும் அவனுக்கறிவித்தவுடன் மூர்ச்சையானூர். அச்சமயமோ அப்பையன் தனக்கு நேர்ந்துள்ள கதியை நினைந்தும், அவனுக்காகச் சுகுணர் அனுபவித்த கஷ்டங்களை நினைந்தும் துக்கித்

துப் பின் மூர்ச்சையான சகுணருக்கு மூர்ச்சை தெளிவித்து அவரை அவ்விடத்திலேயே இருந்து வரும்படி ஏற்பாடு செய்துவிட்டுப் பாண்டி சென்று காரியங்களைக் கவனித்துக் கொண்டு வந்தான். அப்பொழுது ஒரு நாள் அப்பையனை இருவர் கண்களையும் கைகளையும் கட்டி அண்ட்ராஸ்புரத்திற் குக்கொண்டு போயினர். அவ்விதம் கொண்டு போனவர்கள் அன்ட்ராஸ்புரக் கள்ளர்கள் தான். அவர்கள் அவனை அவர்க ளது வேலையாளாகச் சிறிது நாள் வைத்திருந்தனர். சிறிது வேளைக்குப் பின் பையன் மிகவும் நல்லவனென்று தெரிந்து அவர்கள் கூட்டத்தில் அவனையும் ஒருவனாக ஏற்றுக்கொண்டு அவர்களுக்குத்தெரிந்த சில மந்திரங்களையும் ஓதுவித்தனர். பையனும் அவர்களுக்கு இசைந்த பையனாக நடந்துவந்தான். மேலும் சின்னாட் கழியவும், தன் விருத்தாந்தத்தை அங் குள்ள கள்வர் தலைவனுக்கறிவிக்க அவன் அளவற்ற சினங் கொண்டு அமரசிங் இளவரசரைப்பிடித்து எவ்விதத்திலும் தொலைக்க வழி தேடிக்கொண்டேயிருந்தான். அத்தருணம் தாங்களும் அவ்விடம் கொண்டுவரப்பட்டீர்கள். ஆங்குத் தங்க ளது பாணத்தையும், அப்பையனை வஞ்சித்த இளவரசரின் மேல்தொடுக்க, எங்ஙனமோ திருடர்கள் அமரசிங்கரசரையும் பிடித்திழுத்து வந்து கொல்லவும் ஏற்பாடு செய்து விட்டார் கள். அவர்களுக்குப் பணத்தைக்கொடுத்து ஏமாற்றி அவரை விடுதலை செய்தனுப்பினோர் தங்களது திரபுதல்வர்"

அப்பொழுது மோகனசிங், "தேசிங்! அப்பையனங்கி ருக்கின்றானா? எனக்குத்தெரியவில்லையே! யாரது?" என்றான்.

"ஆம் அப்பா, யானுந்தெரிந்துகொள்ளவில்லையே? அது யார்?" என்று வியப்புடன் கேட்டான் பாலன்.

இதனைச்செவியுற்ற தேசிங் மாறுபட்ட முகத்துடன் அதிவிசாரத்திலாழ்ந்தவனாய் "ஐயோ! யாரென்று கேட்கின்றீர்கள்? அப்பாவி நான்தான்" என்றுரைத்தான்.

ஆங்கு நின்று இச்சங்கதிகளைக் கேட்டுக்கொண்டிருந்தவர்கள் மிகுந்தும் பையன் பேரில் பச்சாத்தாபப்பட்டு, அவன் வாயாலேயே அவன் எவ்விதம் பர்மாவுக்கு வர நேர்ந்தது என்று சொல்லும்படி மிக்க ஆவலுடன் கேட்டார்கள்.

அதற்கவன், "யான் அன்டோஸ்புரத்திற்குக் கொண்டுவரப்பட்ட சில நாளில் இதோ நிற்கும் மோகனசிங் இளவரசரையும் அவ்விடம் கொண்டுவந்தனர். வரவும் இவருடைய விருத்தாந்தத்தை அறிந்த அவர்கள் என்னை இவருக்குத் துணையாக வைத்தார்கள். அவ்விதமே யான் 'இவரோடும் அங்கு வந்த பாலனோடும் இருந்துவரும் நாளிற்றான் அமரசிங் என்பவரின் அடையாளம் நன்றாய்த் தெரிந்தது. அதன் பின் அவர் பர்மா சென்றதையும் ஆங்கு இவர்படும் அவஸ்தையையும் கேள்வியுற்று, இவர் பொருட்டு இளைய மன்னரின் கீழ் இரு சோழபாண்டி சைன்யங்கள் சென்று மீட்க இருப்பதையும் கேள்விப்பட்டு, இவர் தாமென்று அமரசிங்கிளவரசர் அறிந்தால் அவரை அவ்விடமே தொலைத்து விடுவரென்றெண்ணி இவருக்கு வேண்டிய உதவி புரிய எண்ணங்கொண்டு, கள்வர் தலைவனிடம் உத்தரவு பெற்று, சைன்யங்கள் யாவும் புறப்படுதற்கு முன் பர்மாவை அடைந்தேன். அடைந்து தமிழ்ப் பாஷை தெரிந்துள்ள ஓர் பர்மாக்காரனை சிநேகித்தேன். செயலாய் அவனுக்கு அந்நகர் ஜெயிலிலேயே உத்தியோகமென்று தெரிய வந்தது. உடனே அவனை என் மாந்திரீக சக்தி

யால் என் வசப்படுத்தி அவ்விடம் அடைபட்டுள்ள இவரை
யும், இவரது மித்திரரையும் ஆபத்துக்குள்ளாக்காது பாது
காத்துக்கொள்ளும் வண்ணம் மிகவும் வேண்டினேன். அதற்
கவனும் நல்லதென்றான். அவனுதவியாற்றான் அந்நியர் யாரும்
அறியக்கூடாத காராக்ரஹமமைந்துள்ள இடத்தைக்காண
இலகுவாயிருந்தது. அவனும் முன்னரே என்னிடம் அந்த
ஜெயிலில் நுழைந்தால் எனக்கு ஆபத்து வருமென்று அறைந்
திருந்தும், இவரது உயிரையும், சர்மிஷ்டருடைய உயிரையும்
காத்தற்பொருட்டு விரைந்து வந்ததனால் எங்களுக்கு முன்
னின்ற ஆபத்தை முற்றிலும் மறந்து அநேக ஆபத்துக்காளா
னோம்" என்று தனக்கும் பால்சிங்கிற்கும் நேர்ந்த ஆபத்துகள்
அனைத்தையும் ஒன்று விடாதுரைத்தும் அவைகளினின்று
அவ்விடத்திலிருந்த ஓர் காருண்ய பர்மா வீரனால் எவ்விதம்
தப்பினார்களென்பதையும், அப் பர்மாக்காரனுக்கு மரணம்
சம்பவித்த விபரத்தையும், முதன் முதல் பாலனது குதிரைக்
கடிவாளத்தைப்பிடித்துக் குதிரையை நிறுத்திப் பாலனுடன்
புறப்பட்ட விபரத்தையும் அறைந்து, உக்கிரம பாண்டியனா
கிய தன் பெயரைத் தேசிங் என்று மாறாகத் தான் கள்ளர்
களால் அழைக்கப்பட்டதனால் தனக்கு அப்பெயர் வந்தகார
ணமென்றும் அறிவிக்கலானான். அத்துடன் சர்மிஷ்டர் உட
லைப் பர்மாவிலேயே தகனஞ்செய்து விட்டதாயும் கூறினான்.

அவ்விடம் இவை யனைத்தும் கவனித்துக்கொண்டிருந்த
கிழவரசரும், மோகனசிங், பால்சிங், ஆகிய இருவரும் இன்
னும் மற்றவர்களும் தேசிங்காகிய உக்கிரமபாண்டியன் அஞ்
சாநெஞ்சத்துடன் புரிந்துள்ள உதவிகளுக்காக அவனை
வாயாரவாழ்த்தி, அவனுக்குரிய பட்டத்தை அவனுக்கே
நல்கவும் பெருமனங்கொண்டு முதலில் நமது உக்கிரமபாண்
டியனைப் பாண்டிய மன்னர்க்குத் தலைநகராகிய மதுரையம்

பதிக்குரதகஜ துரகபதாதியாய சேனையுடன் துந்துமி முழங்க ஜனங்கள் புடைசூழ, மங்களகரமாக அழைத்துச்சென்று மிக்க விமரிசையாகப் பட்டாபிஷேகஞ்சூட்டி வாழ்த்தினர்.

---

## 14-வது அத்தியாயம்.

## மைந்தனளித்த மகுடம்.

---

அது அவ்விதமாக, அமரசிங் சொன்ன வார்த்தைகட்கிணங்க, வில்லியசிங் கனகைப் பாலனுக்கு நல்ல முகூர்த்தத்தில் கன்னிகாதானம் செய்வித்தனர். அப்பொழுது தான் சேனைவீரர்களாயிருந்த, குணம் பிள்ளை, அருள்சாமி பிள்ளை, ஞானப்பிரகாசம் பிள்ளை, மங்களம் பிள்ளை முதலானோர்களுக்கு நன்மரியாதை யருளப்பட்டது. அச்சமயத்தில் பத்மாவும் மோகனசிங்கும் தம் மக்கள் தங்களுக்காக எடுத்துக்கொண்ட பிரயத்தனங்களுக்கு அடங்கா மகிழ்ச்சிகொண்டு பாலனையும் கனகையும் சிங்காதனத்தில் வைத்து வில்லியசிங் அரசருடைய மனவிருப்பப்படி முடிசூட்டிக்களிப்பெய்த எண்ணங்கொள்ள, பால்சிங் அதனை மறுத்து தான் நெடுநாள் எண்ணிய தன் எண்ணப்படியே தன் தந்தையைச் சிங்காதனத்திருத்தி அவருக்கு முடிசூட்டி அடங்கா மகிழ்கொண்டான். பிரஜைகளனைவரும் மோகனசிங் தங்களுக்குஇறைவனானதற்கு மிக ஆனந்தித்தனர். அப்பொழுது பர்மாவில் மிகவும் தீரமாகப் போரைநடத்தி வெற்றிகொண்ட மகா-ள-ள-ஸ்ரீ வேலாயுதம் பிள்ளை, அவரது பிரதம சீடர் கூளப்பிள்ளை, ஜமேதார் வீராச்சாமி நாயுடுகார், ஆறுமுகத்தேவர் ஆகிய இவர்களுக்கெல்லாம் தகுந்த சன்மான மளிக்கப்பட்டது.

"சேரநாட்டிறைவனை நம் பகைவனாயிருக்கின்றான் அமரசிங்கோ அவ்வேந்தனின் ஏகபுத்திரனாகிய விசித்ர வீர்ய

வர்மனுக்கு மனோன்மணியைக் கன்னிகாதானம் செய்யும்படிக்கு உரைசெய்துள்ளான். பாலனும் அதற்கு முன் பின் ஆராயாது வாக்களித்திருக்கின்றான். நம்மிடம் மணாளனும், அவனிடம் நங்கையுமிருந்தாலும், நாம் போய்ப் பெண் கேட்க யோக்கிதையாயிருக்கும். அவ்விதமல்லாது நம்மிடமோ அதற்கு மாறாக வந்து விடிந்திருக்கிறது. நாம் நம் பெண்ணுக்கு வரன் தேடிப்போதல் இழிவானதோர் செய்கையாகுமே. இழிவாயினும் பாதகமில்லை; பாலன் வாக்கையும், அமரசிங் எண்ணத்தையும், மூன்று நாட்டின் சமாதானத்தையும் நிலைநிறுத்த வேண்டுமென்று நினைத்து நாம் போய் வலிய நம் பெண்ணுக்கு விசித்ர வீர்யவர்மனைக் காதலனாகக் கேட்கின், சேரன் மறுத்துவிட்டால் நாம் உயிர் வைத்திருக்கமுடியுமோ; என் செய்வது?" என்று நம் வில்லியசிங் நிருபரின் மனம் ஊசலாடிக்கொண்டிருந்த அச்சமயம் பாலன் "நிருபரேறே! சரணம். தாங்களொன்றுக்கும் அதைரியப்படல் வேண்டாம்? காரியம் இனிது நிறைவேறும் வண்ணம் யானே பார்த்துக் கொள்கிறேன். நாம் போய் வீரியவர்மனிடம் நேராகவே, 'மோகனசிங் அரசருடைய ஏகபுத்ரியும், பாலனுடைய தங்கையுமான மனோன்மணியை மாலையிட உனக்கு நோக்கமா?' என்று ஒரு வார்த்தை மட்டிலும் சொன்னால், அடித்துப் புரண்டு அப்பாவின் சம்மதத்தை அறிய ஓடி வருவான். ஏனென்றால், அப்பாவிடமே அவன் சகல கலைபயின்றவன். அப்பா சொல்லிற் கிணங்க நடப்பவன். மேலும் நாங்களனைவரும் சோழ நாட்டிற் குரியவர்களென்று இதுவரை அறியா அவனுக்கு இப்பொழுது தெரியவந்தால் அவனுக்குண்டாகும் அக்களிப்பை ஒருவராலும் வர்ணிக்க இயலாது. அவன் எவ்வித மனமுடையனாயிருப்பினும் யான் இப்பொழுது பகர்ந்துவந்த வழியாக

அவனை மனோன்மணியின் மணாளனாகக்கொள்ள வேண்டு மென்பதுகூட அவ்வளவு அவசியமில்லை."

"கேளுங்கள். ஒரு சுலபமான வழிதென்பட்டிருக்கின் றது. அதாவது; மனோன்மணிக்குச் சுயம்வரமொன்றைஏற் படுத்தி ஓர் நாளைக்குறித்துப் பலதேய மன்னர்கட்கும் ஓலை போக்கினால், அவசியம் அதனை அறிந்துள்ள வர்மனும் இவ் விடம் வருவானென்பதில் ஐயமில்லை. ஏனெனில் தற்போது நம் உதவியவனுக்கு வேண்டியிருக்கின்றது. சேரநாட்டில் தற் போது அடிக்கடி குடிகளாற் குழப்பம் ஏற்பட்டுக்கொண்டே வருகிறது. அதனால் வர்மன் நம் உதவியை நாடி யாகிலும் நம்மிடம் வருவானென்று எண்ணுகிறேன். அப்பொழுது மனோன்மணியும் வர்மனுக்கு மாலையிட்டுச் சிறிய தந்தையா ரின் மனோபீஷ்டத்தை நிறைவேற்றுவாள்" என்று உணர்த்த, அதுதான் தகுந்ததோர் வழியென்று சகலரும் தேறி, மறு தினமே சுயம்வரத்திற்கோர் நாளைக்குறித்துச் சகல தேசக் கொற்றவர்கட்கும் தூதோலை போக்கினர். அதற்கிணங்கவே, 'என்னை அடையாளோ மனோன்மணி, எனக்கு மாலையிடா ளோ அவ்வணிதை, என்னை ஓர் கண்ணெடுத்து நோக்காளோ அக்காரிகை' என்று பலதேயவேந்தரும் பலவாறு சிந்தித் துத் தடாகத்தில் நிறைந்திருக்கும் செந்தாமரை மலர்கள் போல் சுயம்வர மண்டபத்தில் வந்து குவிந்திருந்தனர். அவ் விதமிருந்த தாமரைத்தடாகத்திற்கு அன்னமொன்று மென் னடையாய் வருதல்போல, அழகே அவதாரமென்றெண்ணப் படும் மனோன்மணி அடிமேலடிவைத்து மண்டபத்தினுள் வர லானாள். அவள் வருகையை எதிர்பார்த்த வண்ணமாய் இவ் வளவு நேரம் மூடியும் திறந்துங்கொண்டிருந்த அரசர்களின் கண்ணிமையாவும் ஒருங்கே மனோன்மணியின் வனப்பில் ஈடு பட்டு மலர்ந்தது மலர்ந்தவாறே இமையாதிருந்தன.

சேடியொருவள் ஒவ்வொரு அரசருடைய, குணம், குலம், ஐஸ்வரியம், ஆற்றல், தேயம் முதலியவற்றைச்சொல்லி வந்தாள். அவ்விதமே விசித்ர வீர்யவர்மனிடம் வரவும், மனோன்மணி தன் கையிலிருந்த மாலையை அவனது கழுத்திலணிந்து அவளுக்குண்டான அபிலாசையையும், அமரசிங்கின் நினைவையும் பூர்த்தி செய்தாள். அத்துடன் வர்மனுக்குத் தானளித்திருந்த உறுதிமொழியையும் காப்பாற்றினாள். வர்மனும் மனோன்மணியைக் கைக்கொண்டு புனிதனானான்.

அதன் பின்னர் வர்மன் மனோன்மணியுடன் தன் சேரநாடேக அவ்விடம் அவனது அருந்தந்தை போஜவர்மர் இவ்வளவு காலம் பகைகொண்டிருந்த சோழரை அழைத்து அவர்களுக்கு விருந்திட்டு, அவர்கள் முன்னிலையிலும், இன்னும் மற்ற அரசர்கள் முன்னும், நம் மனோன்மணிக்கும் வீர்யவர்மனுக்கும் இனிதே முடிசூட்டிக் களிப்பெய்தினார்.

இதுவரையும் சேரநாடு, பாண்டிநாடு, சோழநாடு என முப்பிரிவுபட்டுத் தனித்தனியே தமக்குள் சண்டையும் சச்சரவும் நடந்துகொண்டுவந்த நமது தமிழ் நாடு இதன் பின்னரே "மூவேந்தர் ஆண்ட முழுநாடு" எனப் பழந் தமிழ்ச்சங்க நூல்களால் புகழப்பெற்று இந்திரனும் கொண்டாடுமாறு இலகிவந்துள்ளது என்பது இக்காதையைப் படித்தறிந்த நமது தமிழ் மக்கள் நன்குணர்வார்களாக. இதிலிருந்து அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும் எஞ்சாமை மூவேந்தர் மாண்பு என்றபடி பண்டைக்காலத்திருந்து தமிழ் மக்களாகிய நாம் எத்தகைய மேம்பாடுடையவராய் இருந்து வந்துள்ளோம் என்பது நமது மனத்தைவிட்டு அகலாதென்பது எமது துணிபாம். பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

